# சங்க இலக்கியத்தில் பாலியல் கருத்தியல்கள்

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D)**
**பட்டத்திற்கு பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**
**ம.மார்ஷல்**
**(பதிவு எண்.0373)**

**நெறியாளர்**
பேரா.முனைவர் **மு. பாண்டி**






**தமிழ்த்துறை**

## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று
மதிப்பீட்டில் A+ (CGPA:3.64) தகுதி பெற்றது)

**காரைக்குடி – 630 003**

**தமிழ்நாடு - இந்தியா**


**திசம்பர் - 2017**

**பேரா. மு.பாண்டி**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
**காரைக்குடி – 630 003.**

**நாள் :**

# நெறியாளர் சான்றிதழ்

**“சங்க இலக்கியத்தில் பாலியல் கருத்தியல்கள்”** என்னும் தலைப்பில் திரு.ம.மார்ஷல் அவர்கள் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**பேரா.மு.பாண்டி**

**(நெறியாளர்)**

**ம.மார்ஷல்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பதிவு எண்.373
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
**காரைக்குடி – 630 003.**

**நாள் :**

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியத்தில் பாலியல் கருத்தியல்கள்”** என்னும் தலைப்பில் தமிழ் முனைவர் (Ph.D) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு என சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

**(ம.மார்ஷல்)**

**ஆய்வாளர்**

உறுதிக் கையொப்பம்
**பேரா. மு.பாண்டி**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி – 630 003.

## நன்றியுரை

காரைக்குடியைக் கல்விக்குடியாக மாற்றி என்னைத் தன் பல்கலைக்கழகத்தில் படிப்பதற்கு வாய்ப்பளித்த கல்விக் கடவுள் வள்ளல் அழகப்பருக்கும், அழகப்பா பல்கலைக்கழக **துணைவேந்தர், பதிவாளர்** ஆகியோர்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**‘சங்க இலக்கியத்தில் பாலியல் கருத்தியல்கள்’** எனும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்கு ஆய்வினை மேற்கொள்ள அனுமதியளித்த தோடு, எனது ஒவ்வொரு வெற்றிக்கும் ஏணிப்படியாய் இருந்து என்னை உயர்த்தி இவ்வாய்வேட்டினைச் செம்மையாக முடிப்பதற்கு நெறிப்படுத்திய **பேரா.மு.பாண்டி** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வு செம்மையாக அமைய உதவிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் பேரா.சு.இராசாராம், திரு.மு.நடேசன், முனைவர். மு.சுதா, முனைவர் சோ.சுரேஷ் ஆகியோருக்கும் என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் நன்னிலை அடைய தன்னை வருத்தி என் அறிவை வளர்த்த தந்தையரான அ.மகாலிங்கம் அவர்களுக்கும், பாசத்தை வளர்த்த எனது தாய் ம.தமிழரசி அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னைச் சிறு வயது முதல் வளர்த்த தாத்தா வி.கே.சின்னத்தம்பி அவர்களுக்கும், பாட்டி சி.சிந்தாமணி அவர்களுக்கும், மாமா கோ.மாரி - அத்தை மா.மேனகா அவர்களுக்கும் என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு தொடர்பான பல்வேறு உதவிகளைச் செய்த எனது அக்கா ம.சோனியா மைத்துனர் சுப.ராஜா அவர்களுக்கும் குழந்தைச் செல்வங்களான ரா.தணுஜெயன், ரா.வேதஸ்ரீ ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேடு தொடக்கம் முதல் இறுதிவரை எனக்கு உறுதுணையாக இருந்த என் மனைவி மா.கபோடியா அவர்களுக்கும், என் மகன் தமிழ் இனியன் அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை ஒரு கலைஞனாக உருவாக்கி ஆய்வு தொடர்பான பல செய்திகளைக் கூறிய எனது நண்பர்களான முனைவர் மா.மணிகண்டன், பா.கிருஷ்ணமூர்த்தி, முனைவர் ம.லோகேஸ்வரன், கா.சத்தியமூர்த்தி, இ.முகமதுஉசேன், சு.பிரபாகரன், சி.வெங்கடேஷ், மதுரைபுதூர் வெ.பிரகாஷ் அவர்களுக்கும், மேலும் மைத்துனர்கள் த.ஸ்டாலின், ந.ஜெகதீஸ்குமார், முனைவர் மூ.திராவிட அய்யனார், ம.ராஜேஸ்வரன் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வு தொடர்பாகப் பல்வேறு கருத்துக்களைக் கூறிய உடன் பயின்ற ஆய்வு மாணவர்கள் அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில் கணினித்துத் தந்த அண்ணன் இ.சேவியர் ஜெயக்குமார் அவர்களுக்கும், அக்கா சாந்தி பாண்டியன் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ம.மார்ஷல்**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| இளம். | - | இளம்பூரணர் |
| உ.ஆ. | - | உரை ஆசிரியர் |
| கலி. | - | கலித்தொகை |
| கற்பு. | - | கற்பியல் |
| களவு. | - | களவியல் |
| குறுந். | - | குறுந்தொகை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| நச். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| ப. | - | பக்கம் |
| பரி. | - | பரிபாடல் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| பால். | - | பாலினம் |
| புறம். | - | புறநானூறு |
| பேரா. | - | பேராசிரியர் |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மேலது | - | மேல் குறிப்பிட்ட |

# பொருளடக்கம்

# முன்னுரை

அகம், புறம் எனும் இரு நிலைகளிலுள்ள சங்க இலக்கியம் சமூக நடப்பியலை வெளிப்படுத்துவதில் பெரும் அக்கறை கொண்டுள்ளது. மனிதச் சமூக வாழ்வியலானது பல்வேறு தேவைகளை உள்ளடக்கியதாக விளங்குகிறது. மனிதன் தமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு ஒருவரோடு ஒருவர் சார்ந்து விளங்கும் போதே அத்தேவை முழுமை பெறுகிறது. ஆணும் பெண்ணும் இணைந்து மெய்யுறு புணர்ச்சி கொள்வது பாலியல் எனவும், ஆண் (Male), பெண் (Female) எனும் இன வேறுபாட்டை பாலினம் (Sex) எனவும் குறிப்பர். பசி என்பது போல, பாலியல் என்பது ஓர் உணர்வாகும்.

சங்க காலத்தில் குறிக்கப்பெற்றுள்ள மெய்யுறு புணர்ச்சிகளை, அவற்றின் உறவு நிலைகளைப் புனிதத்தன்மையாகவும் அல்புனிதத் தன்மையாகவும் இனங்கான முடிகிறது. இத்தகு மெய்யுறு புணர்ச்சியைத் தற்காலத்தில் பாலியல் எனும் பொருண்மையில் சுட்டுகின்றனர். இவற்றினடிப்படையில் தொகைப் பாடல்களிலுள்ள பாலியல் தொடர்பான கூறுகள் வாசிப்புக் குட்படுத்தப்பெற்றும், சமகால நடப்பியலை நேரடியாகவும் மறுதலையாகவும் விளக்கியும், தற்கால அறிஞர்களாலும் எழுத்தாளர்களாலும் பெரிதும் முன்வைக்கப்பெறுகின்ற பாலியல் தொடர்பான கருத்துக்களைச் சங்கப் புலவர்கள் எவ்வாறு அணுகியுள்ளனர் என்பதைக் கண்டறிவது தேவையாகின்றது.

**ஆய்வுத் தலைப்பு**

சங்க காலச் சமூகத் தளத்திலிருந்த பாலியல் இலக்கியத் தளத்தில் முக்கிய அங்கம் வகிப்பனவாக அமைந்துள்ளமையைக் காணமுடிகிறது. சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ள பாலியல் கூறுகளை மையமிட்டதாக இவ்ஆய்வு அமைவதால் இவ்ஆய்விற்கு **'சங்க இலக்கியத்தில் பாலியல் கருத்தியல்கள்'** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

சங்க இலக்கியத்தில் பாலியல் எனும் உறவுநிலை புனிதம் - அல் புனிதம் என இரு நிலைகளில் இலங்கி உள்ளமையையும், ஆண், பெண் பாலியல் பகிர்வின் சார்பு நிலையினையும் வெளிக்கொணர்வது இந்த ஆய்வின் நோக்கமாய் அமைகிறது.

**ஆய்வு எல்லை**

ஆய்வின் கால எல்லை கருதியும் பரப்பளவு கருதியும் சங்க இலக்கியத்தில் எட்டுத்தொகை அக நூல்கள் மட்டும் ஆய்வின் எல்லையாக அமைகின்றன.

**கருதுகோள்**

பாலியல் குறித்த சிந்தனைகள் காலத்திற்குக் காலம் மாறுபட்டு வருகின்றன. இவ்அடிப்படையில் சங்ககாலத்தில் பாலியல் சிந்தனைகள் தனித்தன்மை பெற்றிருக்க வேண்டும்.

அக்காலத் தமிழர்களின் வாழ்வியலில் பண்பட்ட பல நிகழ்வுகள் சங்க இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளமையைக் கொண்டு பாலியல் நிலையிலும் பண்பட்ட தன்மைகள் இருக்க வேண்டும்.

சங்க காலத்தில் காதலும், வீரமும் இரு கண்களாகக் காணப்படுகின்றன. இவ்விரு நிலைகளில் பாலியல் இடம்பெற்றுள்ளது. இருப்பினும், காதலில் துறை, பிரிவு, நெஞ்சோடு கிழத்தல், ஆற்றாமை, நிகழ்ந்தது நினைத்தல், உடன்போக்கு, மெய்ப்பாடுகள், களவு, கற்பு, கூற்றுக்கள் போன்றவற்றில் பாலியல் பதிவுகள் மாந்தர்கள் மற்றும் புலவர்கள் வழி மிகுதியாக இடம் பெற்றிருத்தல் வேண்டும் என்பது கருதுகோளாகும்.

**ஆய்வுத் தரவுகள்**

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்கள் இவ்ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. பாலியல் பதிவுகள் குறித்து வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், இதழ்கள், இணையதளம் போன்றன துணைமைச் சான்றாதாரங்களாக மேற்கொள்ளப்பெற்றுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

மனித வாழ்வின் ஓர் அங்கமாக அமையும் பாலியல் உறவானது பல்வேறு வரைமுறைகளைக் கொண்டுள்ளது. அவற்றுள் சங்க இலக்கியத்தில் பாலியல் கூறுகள் குறித்த பதிவுகளை விளக்கும் முகமாக ‘விளக்கவியல் அணுகுமுறை’யும் (Descriptive approach), சங்க காலச் சமூகத்தில் நிலவிய பாலியல் உறவுகளை முன்வைத்து அக்காலச் சமூக மாந்தர்களின் பாலியல் குறித்த உளவியல் காரணிகளை ஆராயும் முகமாக ‘உளவியல்

அணுகுமுறை’யும் (Psychological approach), பாலியல் குறித்த பதிவுகளைச் சமூகப் பின்புலத்தோடு அணுகும் முகமாக ‘சமூகவியல் அணுகுமுறை’யும் (Sociological approach) இவ்ஆய்விற்குரிய அணுகுமுறைகளாக இடம்பெறுகின்றன.

**ஆய்வுப் பகுப்பு:**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வருமாறு ஐந்து இயல்களைக் கொண்டமைகின்றது.

1. பாலியல் ஓர் அறிமுகம்
2. தலைவன் குறித்த பாலியல் பதிவுகள்
3. தலைவி குறித்த பாலியல் பதிவுகள்
4. தோழியை மையமிட்ட பாலியல் பதிவுகள்
5. பரத்தையரை மையமிட்ட பாலியல் பதிவுகள்

என்பனவாகும்.

**‘பாலியல் ஓர் அறிமுகம்’** என்பது முதலாமியலாகும். பாலுணர்ச்சி என்பது எல்லா உயிரினங்களுக்கும் இயற்கையில் அமைந்ததொன்றாகும். அவற்றில் பாலியல் சார்ந்த செய்திகளைச் சங்க இலக்கியத்தோடும், சமகால நடப்பியலோடும் அதன் கருத்தியல்களை விரிவான முறையில் விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

இரண்டாம் இயல் **‘தலைவன் குறித்த பாலியல் பதிவுகள்’** என்பதாகும். தலைவியை எண்ணி வருந்தும் தலைவனது உள்ளம் அடையும் துன்பம், காமம் மிகுவதால் உண்டாகும் உள்ள உணர்வு, பொருள்வயிற்பிரிவு, இயற்கைப் புணர்ச்சி, இடர்ப்பாடுகள் முதலானவற்றை இவ்வியல் விளக்குகின்றது.

**‘தலைவி குறித்த பாலியல் பதிவுகள்’** என்பது மூன்றாமியலாகும். புணர்ச்சியின் போது ‘மெய்யின்பம் துய்த்தமை’ பற்றியும், பொருள் பிரிவு காரணமாகத் தலைவி பெறும் துன்ப மிகுதியும், அதன் விளைவாகக் காமத்தால் ஏற்படும் எண்ணம், பதற்றம், பரிதாபம் ஆகியனவற்றை இவ்வியல் பதிவு செய்துள்ளது.

நான்காவது இயல் **‘தோழியை மையமிட்ட பாலியல் பதிவுகள்’** என்பதாகும். தலைவனைப் பிரிந்ததால் தலைவியின் மனம், உடல் உறுப்புக்களில் மாற்றங்கள் ஏற்படுவதையும், தலைவனின் வருகையை எண்ணித் தலைவி வருந்துவதையும், தலைவியைப் பிரிந்து தலைவன் காம இன்பத்தைத் துய்க்க முடியாமல் தவிப்பதையும், இருவருக்குள்ளும் பாலியல் தொடர்பான பல எண்ணங்கள் வெளிப்படுவதையும் அக இலக்கியங்கள் சுட்டிக்காட்டுகின்றன. தோழியானவள், தலைவன், தலைவி இருவரையும் இணைக்கும் முகமாக எவ்வாறு செயல்படுகின்றாள் என்பது பற்றி இவ்வியல் எடுத்துரைக்கின்றது.

**‘பரத்தையரை மையமிட்ட பாலியல் பதிவுகள்’** என்பது ஐந்தாமியலாகும். களவுக் காலத்தில் தலைவன் பல்வேறு காரணங்களால் தலைவியோடு சேர்வதும், பிரிவதும் நிகழ்கின்றன. கற்புக் காலத்திலும் தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து பரத்தமையை நாடிச் செல்கிறான். காமம் சார்ந்து சங்க கால

ஆண்களின் பாலியல் தேவைகளின் போதாமையினைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகப் பரத்தையா் பயன்படுத்தப்பட்டுள்ளனா். இப்பரத்தையா் கூற்றின் வாயிலாக அவா்களின் பாலியல் தொடா்பான எண்ணங்களைப் பற்றியும் இங்கு ஆராயப்பட்டுள்ளது.

ஆய்வில் கண்ட கருத்துக்கள் தொகுக்கப் பெற்று இறுதியில் ஆய்வின் முடிவுகளாகத் தரப்பபெற்றுள்ளன.

ஆய்விற்குத் துணை செய்த முதன்மை நூல்கள், திறனாய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள் மற்றும் அகராதிகள் அகரவரிசைப் படுத்தப்பெற்றுத் துணைநூற்பட்டியலாகக் கொடுக்கப்பட்டுள்ளன. இதனைத் தொடா்ந்து பின்னிணைப்பில் அட்டவணைகள் இடம்பெற்றுள்ளன.

# இயல்-1

## பாலியல் ஓர் அறிமுகம்

### பாலியல்

இயற்கையின் அடிப்படை ஆதாரமான, இயல்பான. இன்றியமையாத ஒரு சக்தி எனப் பாலியலைக் குறிப்பிடலாம். குடும்ப வடிவமைப்பு என்ற நிகழ்வில் இருந்து பெறப்பட்டதுதான் ஆண் - பெண் என்ற பாலின உறவுமுறை. பாலியல் என்பது ஆண் பெண் உடலுறவுத் தன்மையைச் சித்திரிப்பதாக எண்ணி முகம் சுழிக்கத் தேவையில்லை. இது ஒவ்வொரு மனிதனது பிறப்பு முதல் இறப்பு வரை நிகழக் கூடிய பருவ மாற்றங்கள். உடல் மற்றும் மன வளர்ச்சி, உணர்வுகள் அவற்றின் வெளிப்பாட்டுத்தன்மை, நெகிழ்ச்சி, மலர்ச்சி, அயர்ச்சி, இவற்றோடு, உளவியலையும் உணர வைக்கும் உன்னதமான சாதனமாகும். பண்பாடு, நாகரிகம் முதலியவை நலம்பெற வேண்டுமென்றால் பாலியல் நுகர்வு தேவையாகிறது. பாலியல் என்று இன்றைக்கு விவாதிக்கக் கூடிய சிந்தனையை ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வரைமுறைப்படுத்தி வைத்துள்ளது தமிழ்ச் சமூகம்.

உலகிலேயே முதன்முதலாக மனிதனின் குணநலன் காக்க, ஒழுக்க விதிகளை இலைமறை காய்போல் சுட்டிக்காட்டியதும் தமிழ்ச் சமூகமே! அதன் வெளிப்பாட்டுச் சிந்தனைதான் தொல்காப்பியப் பொருளதிகாரம் எனலாம். உலகம் இன்றைக்கும் உயிர்ப்போடு இருக்கிறது என்றால் அதற்குக் காரணம் ஆண், பெண் ஈர்ப்பு தான். இந்த ஈர்ப்பு மட்டும் இல்லையென்றால் காதல் இருக்காது. கலவி இருக்காது. பிறப்பு இருக்காது. ஓர் உயிர் தனக்குள் இருந்து இன்னொரு புது உயிரை உருவாக்கித் தந்திருக்க முடியாது. இவை

அனைத்தும் பாலியல் தேவையின் இன்றியமையாமையை உணர்த்துகின்றன. 'பாலியல் ஓர் அறிமுகம்' எனும் முதலாமியல் பாலியல் சார்ந்த கூறுகளைத் தெளிவுபடுத்துகின்றது.

**பாலுணர்வு**

பாலுணர்வு என்பது ஆபாசமான ஒன்றல்ல, அது மிக இயற்கையான ஒன்று. மனித வாழ்க்கையிலும், மனிதத் தொடர்புகளிலும், சமூக வாழ்க்கையிலும், ஆன்மிக நிலையிலும், கலை, பண்பாட்டுச் செயல்பாடுகளிலும் அடிப்படைக் கூறாக விளங்குவது பாலுணர்வாகும். முற்றிலும் இயற்கையான பாலுணர்வைக் காலப்போக்கில் மனிதன் பல்வேறுபட்ட முறைகளில் வெளிப்படுத்த ஆரம்பித்தான். அறியாமையின் காரணமாகப் பாலுணர்வு, புறக்கணிப்பு மனோபாவம், மிதமிஞ்சிய கட்டுப்பாடு, அளவுக்கதிகமான புறந்தள்ளல் ஆகியவற்றுக்கு ஆட்பட்டிருந்தது. ஒன்றுக் கொன்று முரண்பட்ட இந்த ஆதிக்கங்களின் எஞ்சிய பகுதிகள் பாலியல் கலை வரலாற்றுக் கல்வியில் மறைந்தும், தெளிவாகவும் காணப்படுகின்றன.

அன்பு, பாலுணர்வு ஆகியவை அன்றாட வாழ்க்கையினூடே நமக்குத் தெரிந்தவையாக இருந்தாலும், அவற்றை விளக்கவோ சுருக்கவோ முயலும் போது அது அவ்வளவு எளிமையானதல்ல என்பது புரியும். "உடல், மனம், சமூகம், ஆன்மிகம் சார்ந்த வாழ்க்கை அனுபவங்களில் சூழ்ந்திருக்கும் பாலுணர்வை அதன் இயல்பில் உணர்ந்து கொள்ளவும் வெளிப்படுத்தவும் நாம் பயன்படுத்தும் சொற்களான உடல் தொடர்பு, கணவன்-மனைவி உறவு, உடலுறவு, பாலியல் தொடர்பு முதலியவை போதுமானதல்ல. இவற்றில் பாலுணர்வு என்ற சொல்லே மற்றவற்றைவிடச் சிறந்தது என்று தோன்றுகிறது.

பாலுணர்வு என்ற சொல்லுக்குச் சுகம் தருவது, திருப்தி தருவது போன்ற பொருள்கள் உள்ளன"[1] ஐம்புலன்களின் வாயிலாகக் கிடைக்கும் அறிவு மனதுக்கு இன்பமானதாகத் தோன்றினால் அங்கே பாலுணர்வு உண்டாகிறது. இங்கு மனச் சேர்க்கையினூடே உண்டாகும் உடல் கிளர்ச்சி பாலுணர்வு என்றாகிறது. "பாலுறவு என்பது அடிப்படையில் விந்தணுவும், அண்டணுவும் இணைந்து கரு உருவாகத் தேவையான உடல் இயக்கம், அதற்கான ஆணின் முதல் தகுதி ஆண் தன்மை (Potehcy) இரண்டாவதாக குறிக்கப்படுவது கருவளம் (Fertility)"[2] முதலியனவாகும்.

பாலியல் கிளர்ச்சியால் தூண்டப்பட்ட நிலையில், அந்தத் தூண்டலுக்குப் பாலுறவு ஒரு வடிகாலாக அமைகிறது. கல்வி அறிவும், கலாசார பரிணாமமும் வளரத் தொடங்கிய நிலையிலும் பாலுறவு என்ற சொல் வெளிப்படையாக உச்சரிக்கக் கூடாத ஒன்றாகக் கருதப்பட்டது. பாலுணர்வு என்பது குழந்தைப் பருவத்திலேயே தோன்றிவிடுகிறது என்பதைச் சிக்மண்ட் ப்ராய்ட் உறுதிப்படுத்தியுள்ளார். பருவம் அடைந்த நிலையில், எந்த ஒரு தனி நபரிடமும் தோன்றும் பாலுணர்வு உள்ளிட்ட இயல்புகள் அவரவருக்கு மட்டுமே அமைந்த தனித்தன்மை. அதனால்தான் எல்லோருக்கும் பொருந்தத்தக்க, பொதுவான ஓர் அலகைக் கொண்டு தனிமனித பாலுணர்வின் சராசரியை உறுதிப்படுத்த முடியவில்லை. பண்பாட்டுச் சூழல்கள் மனிதனை ஒரு கட்டுப்பாட்டுக்குள் வைத்திருந்தாலும், அவற்றையும் மீறி ஒருவரது பாலியல் உறவானது அவரை வழி நடத்துகிறது. மனிதனின் தேவைகளில் உண்ணும் உணவைப் போல் பருகும் நீரைப் போல் இன்றியமையாத ஒரு இயற்கைத் தேவையே பாலுணர்வு என்பர்.

**பாலுணர்ச்சி**

பாலுணர்ச்சி என்பது எல்லா உயிரினங்களுக்கும் இயற்கையில் அமைந்ததொன்றாகும். அது ஆண்களுக்கும் பெண்களுக்கும் வெவ்வேறு தன்மை உடையதாக இருப்பினும் பாலியல் வேட்கை எழுவதும், அதை நிறைவேற்றிக் கொள்ள விளைவதும் எல்லா உயிரினங்களுக்கும் பொதுவான இருபாலருக்கும் உரிய இயற்கை விதியாகும். உயிரினங்கள் அனைத்தும் பசியுணர்வும், பாலுணர்வும் கொண்டவை. அவை இரண்டும் அடிப்படை உணர்வுகள் ஆகும். "காதலறத்தின்படி (Theory of evolution) குரங்கிலிருந்து படிப்படியாக உயர்ந்த மனித சமுதாயத்தின் தொடக்க காலத்தில் பாலுணர்வு சிக்கலுடையதாக இல்லை. மனித சமுதாயம் வளர்ச்சியடைந்து நாகரிகப்படியில் காலடி வைத்த பின்னர் - பாலுறவுகளை இன்னாரிடைதான் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற வரன்முறை தோன்றிய பின்னர்ப் பாலுணர்வும் பாலுறவும் (Sex feeling and sexual inter – course) சிக்கல் மிக்கதாக மாறிவிட்டது"[3] என்பதை அறியலாம்.

**பாலின வேறுபாடு**

"உயிர்களில் ஆண் - பெண் என்னும் இரண்டு பால் உண்டு. ஆண்பால் உயிர் விந்தணுக்களை உண்டாக்கும். பெண்பால் உயிர் அண்ட அணுக்களை உண்டாக்கும். உயிர் நிலைப் பிராணிகளிலே ஆணுக்கும், பெண்ணுக்கும் வேற்றுமை புறத்துறுப்புக்களிலும் நன்றாகத் தோன்றக்கூடும்"[4] என்பதனை பாலின வேறுபாடு என்றுரைக்கிறது.

பாலின வேறுபாடு (Gender Discrimination) என்பதற்கு என்சைக்ளோபீடியா பின்வரும் விளக்கத்தைத் தருகிறது. பாலினப் பாகுபாடு

என்பது பாலினத்தைக் காரணம் காட்டி ஒருவரது உயிர்ப்பு. தனிச் சலுகை அல்லது பணி உயர்வு முடிவு செய்யப்படும் போது அவரது பாலினம் ஒரு காரணியாகக் கையாளப்பட்டிருப்பின் அது பாலினப்பாகுபாடு ஆகும்.

### செக்ஸும் செக்ஸு வாலிட்டியும் (Sex and Sexuality)

ஆங்கிலத்தில் ஆண் - பெண் பாலியல் தொடர்பை விளக்க செக்ஸ் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் ஆய்வுகள் இதனைச் செக்ஸ் (Sex) என்றும் செக்ஸீவாலிட்டி என்றும் பிரிக்க முயல்கின்றன. செக்ஸைப் பால்வேறுபாடு என்றும் செக்ஸீவாலிட்டியைப் பாலுணர்வு என்றும் குறிப்பிடுகின்றன. ஆனால் "செக்ஸுவாலிட்டி என்பது உளவியல் சார்ந்த ஒரு சொல். நான் ஆண் அல்லது பெண் என்பதை ஒரு நபர் புரிந்துகொண்டு சமூகம் சொல்கிறபடி செயல்படுவதற்கான முயற்சியும் அதனால் உண்டாகும் ஒழுங்கும் வேறுபாடும் பாலியலில் உட்படுகிறது"[5]. என்பதை அறியலாம்.

### ஆண் பெண் இலக்கணம்

இலக்கணத்தில் தொல்காப்பியர் ஆணுக்கு 'ஆடூஉ' என்ற சொல்லையும் பெண்ணுக்கு 'மகடூஉ' என்ற சொல்லையும் கையாள்கின்றார். தொல்காப்பியம் சமூகம், பண்பாடு, இலக்கணம், மொழி அடிப்படையில் ஆண், பெண் குறித்த கண்ணோட்டத்தை எடுத்துரைக்கிறது. பெண் என்பவள் அச்சம், நாணம், மடம் (அறியாமை) ஆகியவற்றில் முதன்மை பெற்று விளங்க வேண்டுமென குறிப்பிடுகின்றார்.

**"அச்சம் நாணும் மடனும் முந்துறுத்தல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய என்ப" (தொல்.பொருள்.1045)**

ஆனால் ஆண் என்பவன் பெருமையும் மனவலிமையும் உடையவன் அவனுக்கு அச்சம் என்பதே கிடையாது என்று ஆணின் இயல்பை வரையறுக்கிறார்.

**“பெருமையும் உரனும் ஆடூஉ மேன”    (தொல்.பொருள்.1044)**

காதலிக்கும் தலைமகன் பெருமையும் அறிவுத்திறனும் மிக்கவனாவான். இவ்வாறு ஆணுக்கும் பெண்ணுக்குமான இலக்கணங்களை வரையறுப்பதில் எதிர்மறையான சிந்தனை வெளிப்படுவதை உணரமுடிகிறது.

**ஆண் பெண் கடமைகள்**

தொல்காப்பியர் ஆணுக்குரிய கடமையாகப் போரினைக் குறிப்பிடுகிறார். அத்துடன் பொருளீட்டல், கல்வி கற்றல், நாடு காவல், அரசியல் ஈடுபாடு என்பனவற்றையும் சுட்டுகின்றார்.

**“பொருள்வயின் பிரிதலும் நிறையும் வல்லிதின்**
**விருந்துபுறந் தருதலுந் சுற்றம் ஓம்பலும்**
**பிறவுமன்ன கிழவோன் மாண்புகள்”   (தொல்.பொருள்.1098)**

இவ்வாறு கற்பு, காமம், பொறை, நிறை, விருந்தினரை உபசரித்தல், சுற்றத்தைப் பாதுகாத்து வாழ்தல். நாற்பால் ஒழுக்கம் போன்ற பண்புகளை இல்லறம் நடத்தும் பெண்ணானவள் பெற்றிருக்க வேண்டுமென்பது தொல்காப்பியர் கூற்றாகும். இதன் மூலம் ஆண், பெண் கடமைகளைக் கட்டமைப்பதில் பெண்ணுக்கான பாலின ஒடுக்குமுறை மேலோங்கியுள்ளதை உணர முடிகிறது.

**மனித நடத்தைகள்**

நடத்தைகளின் அடிப்படையில் மனிதர்களை மூன்று வகையான இனம் காணலாம் அவை,

1. இணக்க நடத்தையர் ( People of Adoptive Behaviour)
2. எடுத்துரைப்பு நடத்தையர் (People of Assertive Behaviour)
3. ஆவேச நடத்தையர் ( People of Aggressive Behaviour)

என்பனவாகும்.

இணக்க நடத்தையர் வகைப்பாட்டில் சங்க அகக்கவிதைகளில் சித்திரிக்கப்பட்டிருக்கும், தலைவன்-தலைவியர் அடங்குவர். எடுத்துரைப்பு நடத்தையர் வகைப்பாட்டில் தோழிமார்களும் புலவர்களும் அடங்குவர். ஆவேச நடத்தையர் வகைப்பாட்டில் போர் வீரர்களும் மன்னர்களும் இடம் பெறுவர்.

இந்தியப் பண்பாட்டுச் சூழலில், பொதுவாகப் பெண்கள் ஒத்திசைப்பவர்களாக இயங்குகிறார்கள் அல்லது இயக்கப்படுகிறார்கள். ஆண்கள் மறுதலிப்பவர்களாக, சிதறடிப்பவர்களாக வினையாற்றுகிறார்கள். இதன் அடித்தளத்தில் இவ்விரு பாலினத்தவர்க்கே உரிய இயல்பான உணர்வுகளும் (Impulses) உந்துதல்களும் (Drives) காரணங்களாக அமைகின்றன.

கனவு உருவாக்கத்தில் மட்டுமின்றி ஆளுமைப் பண்பு உருவாக்கத்திலும் மூலப்படிவங்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. இவற்றில் "முன்னது - நனவிலி வாழ்வுக்கும். பின்னது - நனவு வாழ்வுக்கும் ஆதாரமாகின்றன. நனவுப்பாட்டைக் கொண்டுதான் ஒருவரின் பண்பு தீர்மானிக்கப்படுகிறது. அதாவது நனவின்

செயற்பாடுகளைப் பொருத்தே ஆளுமைப் பண்புகள் அமையும் என்பதாம்."[6]

"நனவில் சிந்தித்தல், உணர்தல், புலனுணர்தல், உட்பொறித்தல் ஆகிய அடிப்படைச் செயற்பாடுகள் நிகழ்கின்றன. நிறைவேறா விருப்பங்கள் அகமனத்தில் அடக்கப்பட்டுவிட அவை புறமனத்திற்கு வர இடைவிடாது போராடுகின்றன. தூக்கத்தில் ஆழ்ந்திருக்கும்போது தடையேதுமில்லாமல் வேறுபல வடிவம் ஏற்றுக் கனவுகளாக வெளிவருகின்றன"[7] என்று பிராய்டு கனவு பற்றி விளக்குகிறார்.

**பால் பகுப்பு**

பால் பகுப்புப் பற்றிய பல்வேறு கருத்துகள் இருப்பினும் பால் பகுப்பானது இரண்டு வகையாகப் பிரிக்கப்படுகிறது.

1. இயற்கைப் பால் பகுப்பு ( Natural Gender)
2. இலக்கணப் பகுப்பு ( Grammatical Gender)

**இயற்கைப் பால் பகுப்பு**

உயிர்களிடையே காணப்படும் உறுப்புக்களின் அடிப்படையில் அமைந்த பால் பகுப்பே இயற்கைப் பால் பகுப்பாகும். இவ்வியற்கைப் பால் பகுப்பு தமிழ்ச் சூழலில் காணப்பட்டதை.

**"ஆற்றலோடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்**
**ஒற்றைக் கிளவி உரித்தென மொழிப"**

**(களஞ்சியம் தொ.12.ப.395)**

ஆற்றலோடு புணரும் ஆண் பாலுக்கு 'ஏறு' என்னும் சொல்லை பழங்காலத் தமிழர் தோற்றுவித்திருப்பதை அறிய முடிகிறது. இங்கு பாலுறுப்பின்

அடிப்படையில் ஆண், பெண் எனப் பகுத்து வகைப்படுத்தியமையைக் காணலாம். பெரும்பாலான சங்கப் பாடல்கள் தலைவன், தலைவியை மையப் படுத்தியே பாடப்பட்டன. அவ்வாறு பாடப்பட்ட சங்கப் பாடல்களில் ஆண், பெண் பாலுக்குரிய உடல் பற்றிய செய்திகள் பல நிலைகளில் எடுத்தாளப் பட்டுள்ளதைக் காணமுடியும்.

இயற்கைப் பால் பகுப்பினை சங்க இலக்கியத்தில் குறிக்கும் வகையில் பெண்பாலுக்குரிய கூடற்கூறுகளைச் சங்கப் பாடல்கள் பலவும் சுட்டிக் காட்டுகின்றன. "பிறப்புறுப்பின் அடிப்படையில் ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ இருந்தாலும் சமூகம் வகுத்த பாலின வரையறைகளில் இருந்து திரிந்த நிலையில் ஆண் பெண்பாலுக்கு உண்டான வரையறைகளுடன், பெண் ஆண்பாலுக்கு உண்டான வரையறைகளுடனும் இச்சமூகத்தில் வாழ்ந்து வருகின்றனர்"[8] என்பதை,

**"பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்**
**ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்"**

**(தொல்.சொல்.4871-2)**

என்ற நூற்பாவில் 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியாக மூன்றாம் பாலினம் சுட்டிக் காட்டப்படுவது புலனாகும். ஆண்பாலையும், பெண்பாலையும் மற்றும் மூன்றாம் பாலையும் தொல்காப்பியர் உயர்திணைப் பகுப்பின் கீழ் அடக்குகிறார்.




இங்கு சமூகம் சுட்டும் ஆண் தன்மையிலிருந்து மாறுபட்டுச் சமூகம் சுட்டிய பெண் தன்மையை ஏற்கும் ஆண்கள் பேடியர் என்றழைக்கப்பட்டனர்.

**இலக்கணப் பால் பகுப்பு**

இலக்கணப் பால் பகுப்பானது மொழியின் அடிப்படையில் அமைவதாகும். “எனவேதான் இலக்கணப் பால்பகுப்பு மொழிக்கு மொழி வேறுபட்டு அச்சூழலுக்கேற்ற கட்டமைப்பைக் கொண்டுள்ளது. சில மொழிகளில் ஆண், பெண், அஃறிணை எனவும் வேறு சிலமொழிகளில் உயிருடையன உயிரல்லாதன எனவும், இன்னும் சில மொழிகளில் சிறியன பெரியன எனவும் பால் பகுப்பு வேறுபட்டுக் காணப்படுகிறது”[9] தமிழில் காணப்படும் பால்பகுப்பு இயல்பாகவே இணைந்து அமையப்பெற்றது. அவற்றுள் இயற்கைப் பால்பகுப்பும், இலக்கணப் பால்பகுப்பும் மனிதச் சமூகத்தின் கருத்தாக்கங்களைக் கொண்டமைவதாகும்.

**உடல்மொழி**

உடல்மொழி என்பது ஆங்கிலத்தில் Body Language எனப்படும். ஆக்ஸ்போர்டு அகராதி Body Language என்பதற்கு - the Process of Communication Through Conscieous Gesters And Poses என்று

உணர்த்துகிறது. இதன் பொருள் மெய்ப்பாடு என்பது இச்சையாகவோ அல்லது அனிச்சையாகவோ சைகை மற்றும் அசைவுகள் மூலம் தகவல் பரிமாறும் செயல்பாட்டைக் குறிப்பதாக உள்ளது. இம்மொழி உள்ளத்தை ஆழ்ந்து நோக்கும் நுண்ணோக்கி போல செயல்படுகிறது. இலக்கியத்தில் மட்டுமன்று ஓவியம், சிற்பம், நாடகம் என்று உடல்மொழி எங்கும் காணக்கிடக்கின்றது.

நாம் ஒரு செய்தியைப் பிறிதொருவருக்குச் சொல்லும்போது அதை மற்றவருக்குத் தெரியாமல் உணர்த்துவதற்கு உடல்மொழி பெரிதும் பயன்படுகிறது. எழுத்து வடிவிலோ பேச்சு வடிவிலோ அமையாமல் உடல் உறுப்புகள் அசையும் வகையிலும், ஓர் உடலுக்கும் பிறிதோர் உடலுக்கும் இடையே இருக்கும் இடைவெளி நெருக்கத்திலும் முகபாவனை கை, கால், கண், முகத்தோற்றம் போன்ற அசைவுகளிலும் வெளிப்படுகிறது.

**பாலின ஆராய்வு அடிப்படை** (Gender Assignment)

பாலின ஆராய்வு என்பது “ஒரு குழந்தையின் பிறப்புறுப்பினை அடிப்படையாகக் கொண்டு மருத்துவரும் சமூகமும் நிர்ணயிக்கும் பாலினப் பகுப்பு.”[10] ஏனெனில் ஒவ்வொரு மனித உயிரும் பெண்ணின் உடலமைப்புடனோ அல்லது ஆணின் உடலமைப்புடனோதான் பிறக்கின்றது. இந்த உடலமைப்பின் அடிப்படையில்தான் பால் அடிப்படையிலான அடையாளங்கள் நிச்சயிக்கப் படுகின்றன.

**பாலின அடையாளம்** (Gender Identity)

ஒரு பிள்ளையின் பாலியல் பாகுபாட்டை அதாவது ஆணா அல்லது பெண்ணா என்கிற பாலியல் அடையாளத்தைச் (Identity) சமூகம் தான்

நிச்சயிக்கின்றது. ஏனெனில் "பாலின அடையாளம் என்னும் பால் தன்மை தன்னுணர்வானது. ஒருவர் தன்னை எவ்வாறு உணர்ந்து கொள்கிறார் என்பதைப் பொறுத்து அமைவது தான் ஆண், பெண் என்று உணர்ந்து கொண்ட பின் அதற்கேற்ற சமூகப்பண்புகளைக் கற்றுப் பாலினத் தன்மையை அடைவதைக் குறிக்கும். இது வெறும் செயல் அல்லது நடத்தை தொடர்பானது மட்டுமல்ல பாலினத்திற்கேற்ற மன உணர்வையும் பாங்கையும் அடையும் போதே இது முழுமையடைகிறது"[11] பொதுவாக, குழந்தையின் வளர்ச்சிப் பருவத்தில் அதற்கேற்ற மனப்பாங்கைப் பெற்றிருப்பது ஆரோக்கியமான வளர்நிலைகளைக் காட்டுவதாக அமையும்.

**பாலினக் கருத்தியல்** (Gender Ideal)

பாலினக் கருத்தியல் என்பது மனிதன் தனக்குத் தானே வகுத்துக் கொண்டது "ஆணினத்திற்கும் பெண்ணினத்திற்கும் எனச் சில பண்புகளையும் வேலையையும் சமூகக் கட்டுதிட்டங்களையும் வரையறுத்துக் கொள்வதே பாலினக் கருத்தியல்."[12] மேலும் சமூகத்திடமிருந்து கற்றுக் கொண்ட ஆண்மை மற்றும் பெண்மைக்குரிய பண்புகளை மிக உன்னத நிலையில் வெளிப்படுத்த முயல்வது பாலினக் கருத்தியலாகும். மேலும்,

**"சிறியாரும் பெரியாரும் கம்மியர் குழீஇ**
**நால்வேறு தெருவினும் காலுற நிற்றர"** **(மதுரைக்காஞ்சி.521-522)**

பாடலில் நெய்தல் தொழிலைச் சிறியோரும் பெரியோரும் செய்வதாகச் சுட்டும் இப்பாடலடிகள் வளரும் ஆண்பாற் பிள்ளைகளின் சமூகம் பாலினப் பாத்திரத்தை ஏற்பதற்கான முன் தயாரிப்பாக வாழ்விற்குத் தேவையான

தொழிலைக் கற்பதைச் சுட்டிச் காட்டுகின்றன. சமூகம் காட்டிய பண்புகளை ஏற்று வளர்ந்ததை மேற்கண்ட பாடல் வழி உணர முடியும்.

### பாலியல்பு (Sexuality)

ஒரு பாலினத்தின் வளர்ச்சிப் போக்கைப் புரிந்து கொள்ளத் தொடங்கும் போதே அப்பாலினத்திற்குரிய பாலியல்பு நமக்குப் புரியத் தொடங்குிறது. "செக்ஸ்வாலிட்டி என்பது உளவியல் சார்ந்த ஒரு சொல். நான் ஆண் அல்லது பெண் என்பதை ஒரு நபர் புரிந்து கொண்டு சமூகம் சொல்கிறபடி செயல்படுவதற்கான முயற்சியும் அதனால் உண்டாகும் ஒழுங்கும் வேறுபாடும் பாலியலில் உட்படுகிறது."[13] பொதுவாக ஒரு படைப்பில் குறிப்பிட்ட பாலியல்பு ஒரு சமூகத்தைச் சார்ந்த வளர் இளம் பருவத்தினரின் போக்கை அறிந்து கொள்ள உதவுகிறது.

### பால்நடத்தை (Sex Role)

ஆணுக்கென நிர்ணயிக்கப்பட்ட பண்புகள், பெண்ணுக்கென நிர்ணயிக்கப்பட்ட பண்புகள் என பல நடத்தை விதிகளை ஒருங்கே கொண்டது பால் நடத்தையாகும். "குடும்ப அமைப்பிலும் சமூகக் கட்டமைப்பிலும் ஆண், பெண்ணுக்கென்ற வரையறை செய்யப்பட்ட பண்பு நலன்களைக் கொண்டிருந்தலைச் சுட்டுவதாக பால் நடத்தையைக் குறிப்பிடுகின்றனர்."[14] இந்நிலையில் தொல்காப்பியர் ஆணுக்கான நடத்தை வரையறையாகப் பொருளாதிகாரத்தில்,

**"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு" (தொல்.பொருள்.269)**

என்ற நூற்பாவில் பிறப்பு, குடிப்பெருமை, ஆண்மைத் தன்மை, ஒத்த பருவம் போன்றவற்றைக் கூறுகிறார். மேலும் பெண்பாலிற்கு அகநானூற்றுப் பாடலில்

**“அன்பும், மடனும், சாயலும், இயல்பும்**
**என்பு நெகிழ்க்கும் கிளவியும் பிறவும்**
**ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி” (அகம்.225:1-3)**

அன்பும், மடப்பமும், மென்மையும், ஒழுக்கமும், நெகிழச் செய்யும் இன்சொல்லும் பிற பண்புகளும் தலைவியுடன் இருப்பதாகக் கூறிப் பெண்பாலின் நடத்தைப் பண்புகள் சுட்டிக் காட்டப்படுகின்றன.

**பால் (Sex) - சொல் விளக்கம்**

1. பால் என்பதற்குப் பகுதி, பிரித்துக் கொடுக்கை, குணம் என்ற பொருளிலும், ஆண் பால், பெண் பால், பலர் பால், ஒன்றன்பால், பலவின்பால் என்ற (பிரிவைச் சுட்டுவதாக) பொருளிலும் அகத்திணை, புறத்திணை என்ற பொருட் பாகுபாட்டையும் குறித்து நிற்பதாகச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் லெக்சிகன் கூறுகிறது.[15]
2. பாலானது (Sex) பண்பு, நடத்தை, உடல்தன்மை, உடல் அமைப்பு, உறுப்புகளின் செயல்பாடுகள் ஆகியவற்றைக் கொண்டு வயது வேறுபாடு இன்றி ஆண்பால் என்றும் பெண்பால் என்றும் பிரிக்கப்படுகிறது.[16]
3. பால் என்பதற்குப் பங்கு, இடம், பால், குணம், பக்கம், தீங்கு, இயல்பு என பிங்கல நிகண்டு கூறுகிறது.[17]
4. பால் என்பதற்கு இயல், குணம் என்று சூடாமணி நிகண்டு பொருள் தருகிறது.[18]
5. பால் (Sex) என்பது இன உறுப்புக்களை அடிப்படையாகக் கொண்டு ஆண்பால் என்றும் பெண்பால் என்றும் பாகுபடுத்தப்படுகிறது.

6. இன விருத்தியின் அடிப்படையில் இன உறுப்புகளின் செயல்பாடுகளைக் கொண்டு ஆண்பால் என்றும், பெண்பால் என்றும் 'பாலானது' பாகுபடுத்தப்படுகிறது.[19]

7. பால் என்பதைக் குரோமோசோம் சேர்க்கையின் அடிப்படையில் The New Coxton Encyclopedia என்று பொருள் கூறப்படுகிறது.[20]

8. பிராய்டின் எல்லா ஆய்வுகளுமே ஆண்களின் பாலியல் வளர்ச்சியையே ஆதார அடிப்படையாகக் கொண்டிருந்ததால் அவர் பால் வேறுபாடுகளைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை என்கிறார் டேவிட் சித்தையா.[21]

9. பால் என்பது ஆண்பால் மற்றும் பெண் பாலை ஒருமையாகவோ அல்லது பன்மையாகவோ குறிப்பிடுவதற்கு இச்சொல் பயனாகிறது. உடற்கூற்றினது அமைப்பின் தன்மைகளைக் கொண்டோ பண்புகளின் தன்மைகளைக் கொண்டோ ஆண்பாலில் இருந்து பெண்பால் வேறுபடுத்தப்படுகிறது.[22]

10. பால் என்பது பொது வழக்காகும். ஆணையும் பெண்ணையும் உடற்கூறு ரீதியாக விளக்குகிறது. மேலும் இ∴து உடற்கூறு, உயிரியல் கூறு இவற்றிற்குள்ள வேறுபாட்டையும் விளக்குகிறது. ஆண் பெண் என்ற இந்த பால்பாகுபாடு இயற்கையாய்ப் பிறப்பில் அமைவதாகும்.[23]

11. பால் (Sex) என்ற சொல் பல பொருள்களை முன் மொழிந்தாலும் ஆண், பெண் என்ற பால் பிரிவை மையப்படுத்திய பொதுவான பொருளைத் தருகின்றது. ஏனெனில் பால் என்ற சொல்லுக்கு உயிரிகளிடையே காணப்படும் உடற்கூற்றினடிப்படையிலான வேறுபாட்டை மையப்படுத்திய 'பகுத்தல்' என்ற அடிப்படையில் பொருள் கொள்ளப்படுகிறது.[24]

12. அறிவியலானது மரபு ரீதியிலான குரோமோசோமின் அடிப்படையில் பால் வேறுபாட்டைக் காண்கிறது. பால் வேறுபாடு உடல் ரீதியாக அங்கீகரிக்கப்பட்ட வேண்டியதும் புறக்கணிக்க இயலாததும், அதே நேரத்தில் எல்லாச் செயல்பாடுகளிலும் சமத்துவம் கொடுக்கப்படத் தகுதியுடையதும் ஆகும்.[25]

**பாலினம் (Gender) சொல் விளக்கம் :**

1. பாலினம் என்பது பெண்ணை ஆணிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் உயிரியல் ரீதியானது மட்டுமின்றி சமூகம், கலாச்சாரம் இவற்றினால் அமைந்த குணாதிசயம், செயல்பாடு,நடத்தை ஆகியவற்றையும் உள்ளடக்கியது.[26]
2. பாலினம் (Gender) என்பது சமூகத்தால் கட்டமைக்கப்படுவது. ஏனெனில் சமூகம் கூறும் தன்மைகளைக் கொண்டிருப்பவர்களையே பாலின வரையறைக்குள் கொண்டு வருகின்றனர்.[27]
3. பாலினம் என்பது சமுதாய அமைப்பில் ஆணுக்கும், பெண்ணுக்கும் விதிக்கப்பட்டுள்ள பங்குகள், பண்பாடுகள், இயல்புகள் இவற்றின் அடிப்படையில் ஏற்படுத்தும் வேறுபாடுகளைக் குறிக்கும்.[28]
4. பாலினம் என்ற இச்சொல் வழக்கு மரபு அடிப்படையில் ஆண்மை, பெண்மை என்ற இரண்டையும் வரையறுக்கிறது. ஏனெனில் ஆண்மை, பெண்மை என்ற சமூக வேறுபாடு அந்தந்தச் சமூகத்தின் பண்பாட்டுப் பின்னணியில் வந்து சேர்வது. ஒவ்வொரு சமூகமும் தன் சமூகத்தில் பிறந்து வளர்கின்ற ஆண்களுக்கும் பெண்களுக்குமெனச் சில சிறப்பான குணங்களைக் கற்பித்துக் கொள்ளுகின்றது.[29]

5. பாலினம் என்பது ஆண், பெண் இவ்விருபாலரும் சமூகத்தில் எவ்வாறு வாழவேண்டும் எனச் சமூகம் வரையறுத்திருப்பதற்கு ஏற்றவாறு வாழும் வாழ்க்கைக் கூறாகும்.[30]

ஆண்மை பெண்மைக் கருத்தாக்கங்கள் சமுதாயத்தைச் சார்ந்தவை. இங்குப் பால், பாலினத்திற்கிடையே உள்ள வேறுபாட்டை உடற்கூற்றிற்கும் சமுதாயத்திற்குமான வேறுபாடு என்ற கூற்றடிப்படையில் விளக்கிக் கொள்ளலாம்.

**பாலினம் வரையறை**

பாலினம் என்று சொன்னாலே ஆண், பெண் வேறுபாட்டைக் குறிக்கின்றது. பாலினம் என்பது உங்களை எப்படி பார்க்கிறீர்கள் என்பதைப் பொறுத்தே அமைகிறது. பாலினம் (Gender) என்பது வேறு, பாலியல் ஒருங்கிணைவு (Sexual Orientation) என்பது வேறு. பொதுவாக மக்களிடம் ஆண், பெண் பற்றிய விழிப்புணர்வே மேலோங்கி நிற்கிறது.

“பாலினம் என்பது ஒருவரின் பால் தொடர்பாக ஒரு சமூகம் தொடர்புபடுத்தும் பண்புகள், மனப்பாங்குகள், உணர்வுகள், நடத்தைகள் ஆகியவற்றைக் குறிக்கிறது. பாலின அடையாளம் என்பது சமூகத்தால் மட்டும் அல்லாமல் ஒருவர் எந்தப் பாலினமாக உணர்கிறார் என்பதைப் பொறுத்தே அமைகிறது.”[31] இவை அனைத்தும் பாலின வரையறையாகும்.

**பாலின வகைகள்**

பாலினம் என்றாலே அனைவருக்கும் தெரிந்திருப்பது ஆண், பெண் ஆகிய இருபாலினம் மட்டுமே. அதையும் தாண்டி திருநங்கையர் என்று அழைக்கப்படும்

மூன்றாம் பாலினத்தையும் அறிந்திருக்க இயலும். மற்ற பாலினங்களை ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து தமிழ் பேப்பர் (www. Tamilpaer) இணையத்தின் வழியாக வெளிப்படுத்தியுள்ளனர். பாலினத்தை வகைப்படுத்தி அவற்றை மூன்றாகப் பிரித்துள்ளனர். அவற்றை

- ❖ பொதுப் பாலினம் ( Gender)
- ❖ திருநர் (Transgender)
- ❖ பால் புதுமையர் (Gender queer)

அவற்றுக்குள் பல்வேறு பிரிவுகளைக் குறிப்பிட்டுள்ளனர்.

**பொதுப் பாலினம் (Gender)**

- ❖ ஆண் (Male)
- ❖ பெண் (Female)

**திருநர் (Trans gender)**

- ❖ திருநங்கை (Trans Women)
- ❖ திருநம்பி (Transmen)

**பால் புதுமையர் (Gender queer)**

1. பால் நடுநர் (androgyny)
2. முழுனர் (Pangender)
3. இருனர் (bigender)
4. திரினர் (trigender)
5. பாலிலி (Agender)

6. திருனடுனர் (Neutrois)
7. மறு மாறிகள் (Retransitioners)
8. தோற்ற பாலினத்தவர் (appearance general)
9. முரண் திருநர் (Transbinary)
10. பிறர்பால் உடையணியும் திருநர் (Transcrassdressers)
11. இருமை நகர்வு (Binary's butch)
12. எதிர்ப் பாலிலி (Fancy)
13. இருமைக்குரியோர் (Epicence)
14. இடைப்பாலினம் (Intergender)
15. மாறுபக்க ஆணியல் (Transmasuline)
16. மாறுபக்க பெண்ணியல் (Transerminine)
17. அரை பெண்டிர் (Demigirl)
18. அரையாடவர் (Demiguy)
19. நம்பி ஈர்ப்பனன் (Guy dykes)
20. நங்கை ஈர்ப்பனன் (Guy dykes)
21. பால் நுகர்வோர் (Gender Fludi)
22. ஆணியல் பெண் (Tomboy)
23. பெண்ணன் (sissy)
24. இருமையின்மை ஆணியல் (Non binary butch)
25. இருமையின்மை பெண்ணியல் (Non binary Femme)
26. பிறர்பால் உடைஅணிபவர்

இவர்கள் அனைவரும் இந்தச் சமூகத்தில் தான் வாழ்ந்து வருகின்றனர். திருநங்கையர்கள் அடையாளம் கண்டதைப் போல மற்ற பாலினத்தவர்களும் ஒரு நாள் தங்களை அடையாளம் கண்டு இந்தச் சமூகத்தின் அங்கீகாரத்தை வெளிப்படுத்தும் தருணம் வரலாம்.

### பாலியல் கிளர்ச்சி (Role of coghition in sexual stimunation)

பாலியல் கிளர்ச்சியில் மனிதர்கள் பால் உணர்ச்சி கொள்வது, அவர்களின் மனதில் தோன்றும் பாலியல் சார்ந்த சிந்தனைகளைப் பொறுத்து அமைகிறது. "செக்ஸ் பற்றி நினைத்தாலே அல்லது செக்ஸ் தொடர்பான காட்சிகளே ஒருவரை பாலுணர்ச்சி கொள்ளச் செய்யலாம். எனவேதான் மனிதர்களுக்கு மிக முக்கியமான பாலுறுப்பு இரண்டு காலுகளுக்கு இடையே உள்ளது."[32]

### பாலுறவிற்கான வாயில்கள்

தலைவன் தலைவியிடையே இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் காதலும், காமமும் மிகுகின்றது. "களவுக் காலத்தே மெய்யுறு புணர்ச்சியை விரும்பி நாளும் தலைவன் தலைவியை எதிர்ப்படுவான். தலைவியின் தோழியாலும், பாங்கனாலும் களவுக் காலத்தே சோலையிடையே புணர்ந்து மகிழ்வர் என்ற செய்தியைக் காணலாம்."[33] அந்நிகழ்விற்கான காரணமாக அமையும் பாங்கற் கூட்டமும் தோழியர் கூட்டமும் இங்குப் பாலுறவிற்கான வாயில்களாக அமைகின்றன.

### பாலியல் அணுமுறை

பாலுணர்வு குறித்து வேறுபட்ட அணுகுமுறைகளும் கண்ணோட்டங்களும் வழக்கிலுள்ளன. "விண்மீன்கள், தேவர்கள், ஆன்மா முதலியவற்றை

வாழ்க்கையில் இன்றியமையாத காரியங்களுடன் தொடா்புபடுத்தி மனிதா்கள் சிந்தித்தது போல, பாலியலுடனான அணுகுமுறையிலும் இயற்கைச் சக்திகளான சூரியனும் சந்திரனும் தேவா்களும், ஆன்மாவும் நுழைந்திருக்கின்றன”[34] பண்டைக்காலம் முதலே மத நம்பிக்கைகளும் தத்துவ தரிசனங்களும் பாலியலை மனித வாழ்க்கையின் அடிப்படையின் முக்கிய இடமாகக் காண முயன்றிருக்கின்றன. பாலியலின் இக்கண்ணோட்டத்திற்குக் காலப்போக்கில் மாறுதல்களும் ஏற்பட்டிருக்கின்றன. இதனைப் புண்ணியமாகக் கருதிப் புகழவும், பாவமாகக் கருதி இகழவும் செய்திருக்கின்றனா். மனித வாழ்க்கைக்குப் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு தேவைகளையும் இலட்சியங்களையும் நிறைவேற்றி, வாழ்க்கைக்கு அா்த்தமும், அழகும் கொடுக்கும் ஒன்றுதான் பாலுணா்வு. பாலுணா்வு என்ற ஒன்று இல்லாதிருந்தால் மனிதன் இத்தேவைகளை நிறைவேற்ற இதுபோன்ற வேறொன்றைக் கண்டுபிடித்திருப்பான்.

**உள்ளப் போராட்டம்**

உள நலவியல் என்பது ஓா் அறிவியலாகும். இது உள்ளத்தில் ஏற்படக்கூடியட பாதிப்புக்களைத் தடுத்து, உளநலத்திற்குத் தகுந்த பாதுகாப்பு அளிக்கிறது. மேலும் உளநலப் பாதிப்புகளிலிருந்து விடுதலை அளிக்கவும் பயன்படும் அறிவியலாகும். “காதல் உணா்வுகளைச் சங்க அகப்பாடல்கள் பிரதிபலிக்கின்றன. இவ்வுணா்வுகள், தொல்காப்பியா் கூறும் மெய்ப்பாட்டியல் உணா்ச்சிக் கோட்பாடுகளோடும், வடமொழியாளா் கூறும் இரசக் கோட்பாடுகளோடும் ஒப்புநோக்கிக் காணத்தக்கன. இவ்வுணா்வுகள் உள்ளத்தில் எழுவதால் உள்ளப்போராட்டம் என அவை பெயராக்கம் பெறுகின்றன.”[35] பொருளும், புலனறிவு வழி உணா்வும், உணா்வால் உள்ளத்தில் ஏற்படும்

கிளர்நிலையாகிய உணர்ச்சியும் உணர்ச்சி வெளிப்பாடாகிய மெய்ப்பாடும் ஆகிய நான்கும் பேராசிரியர் சொல்லிய விளக்கத்தைச் சார்ந்தவைகளாகும்.

உள்ளத்தின் நோக்கமும் ஊக்கமும் மனிதனைச் செயல்படுத்துகின்றன. “ஒரே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட விருப்பங்கள் உடனிகழ்வாய்த் தோன்றுமாயின் எதனை ஏற்பது எதனை விடுப்பது என்னும் ஐயம் தோன்றும். இதன் அடிப்படையில் முடிவெடுக்க இயலாநிலையும் செயற்பட இயலா நிலையும் தோன்றும். இத்தகைய நிலையே உள்ளப் போராட்டம் எனப்படும்.”[36] மேலும் ஒரே நேரத்தில் நிறைவுற இயலாததும் ஒன்றுக்கொன்று தனித்தனியானதுமான செயல் நோக்கமும் ஊக்கமும் உள்ளத்தில் இருப்பதனால் விளைவதே உள்ளப் போராட்டம் என உளவியலார் விளக்குவார்.”[37] உணர்ச்சி மெய்ப்பாட்டை “பால் உணர்வு, உலக உயிர்கள் அனைத்துக்கும் பொதுவானதாகும். இவ்வுணர்வு இயல்பு உந்துதலால் ஏற்படுகின்றது. அது உள்ளத்தில் வேட்கைத் துண்டுதலாக மாறுகின்றது. அதனை நிறைவேற்ற எண்ணும் போது உணர்வுகள் கிளர்ந்தெழுகின்றன. இக்கிளர்நிலைகள் சூழலுக்குத்தக உள்ளத்தே உணர்ச்சிகளாக உருவாகின்றன. இவ்வுள்ளத்தே நிகழும் உணர்ச்சியே மெய்ப்பாடாகும்”[38] மேற்கூறப்பட்ட அனைத்தும் பாலியலை அடிப்படையாகக் கொண்டு பிறக்கின்றன என்பதைத் தொல்காப்பியர் மூலம் அறியமுடிகிறது.

**பாலியல் ஆய்வுகள்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தான் பாலியலை அறிவியல் நோக்கில் அணுகுவதற்கான முயற்சி தொடங்கியது. “கிராப்ட் எப்பிங் (1840 - 1902) ஆஸ்த்ரியாவில் சிக்மண்ட் ∴பிராய்டு (1856-1939) இங்கிலாந்தில்

ஹாவ்லோக் எல்லிஸ் (1859 - 1939) யு.எஸ்.இல் வான் டி வெல்ட் (1873 - 1937) முதலானோரின் தொடக்ககால முயற்சிகள் பெருமைக்குரியவை. புளோச் (1908) ∴போறல் (1922) ஹெர்ஷ்பெல்டு (1935) போன்றோருடன் ராபி (1927), ராபின்சன் (1929) மேரி ஸ்டாப்ஸ் (1952) போன்றவர்களும் இவ்விஷயம் குறித்து கட்டுரைகளும் ஆய்வுகளும் எழுதினர்."[39] உயிரியல் வல்லுனராகிய செல்ஜியாமோ மோத்தாவும் அவரது சீடர்களும் ஜப்பானில் 1922 இல் நடத்திய ஆய்வுகளும் புகழ்பெற்றவையாகும். ஆய்வுகளின் மூலம் வழக்கிலிருந்த அறியாமை மற்றும் பிற தவறான கருத்துகளுக்கு எதிராகக் கடும் அதிர்ச்சி உண்டாக்கியவர்களில் கின்செ (1948-1953), மாஸ்டாஸ் - ஜான்சன் (1966 - 1970) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இன்றும் பாலியலில் பல்வேறு மருத்துவ வல்லுநர்களும் சமூக ஆய்வாளர்களும் மனநோய் ஆய்வாளர்களும் சாதாரண, அசாதாரணப் பாலியல் நடத்தைகள் குறித்துத் தீவிரமான ஆய்வுகள் நடத்திக் கொண்டிருக்கின்றனர். தற்போது இந்தியாவிலும் இது பற்றிய ஆய்வுகள் வேகமாக நடைபெற்று வருகின்றன.

**காமம்**

காமம் என்னும் சொல்லை, வடமொழிச்சொல் எனச் சிலர் கூறுவர். வடமொழிக் கலப்பு நம் தமிழ் மொழியில் ஏற்படும் முன்பே இச்சொல் தமிழில் இருந்தமைக்கு முதன்மை இலக்கண நூலான தொல்காப்பியமும் சங்க அக இலக்கியங்களும் சான்றாகத் திகழ்கின்றன. "கமம் நிறைந்தியலும்" (தொல்:838) என்பதில் உள்ள 'கமம்' என்ற சொல் நீண்டு 'காமம்" ஆயிற்று என்பர் மொ.ஆ.துரையரங்கனார். காமம் என்பது பால் வேறுபட்ட இரண்டு உள்ளங்களிடையேயான அன்பின் நிறைவைக் குறிக்கிறது. இந்த அன்பின்

நிறைவினைச் சங்க அக இலக்கியங்கள் உள்ளம் ஒன்றிய புணர்ச்சியால் எய்திய காதல் என்ற பொருளில் 73 இடங்களில் காட்டுகின்றன. மெய்யுறு புணர்ச்சிக்கு உரிய சொல்லாக ஏழு இடங்களில் குறிப்பிடப்படுகிறது. காமத்தால் பெறக்கூடிய இன்பத்தைக் குறிக்கவும், காமம் என்ற சொல் ஆளப்பட்டமையை,

**“இரு காமத்து இணை ஏறி” (பட்டின : 39)**

என்ற இலக்கிய அடிகள் புலப்படுத்துகின்றன. ‘எவ்வெங் காமம் இயைவதாயினும்’ (அகம்:15) என்ற இடத்தில் காமம் என்ற சொல் ‘விருப்பம்’ என்ற பொருளில் கையாளப் பெற்றுள்ளது.

அறத்தை வலியுறுத்தும் திருக்குறளில் காமம் என்ற சொல் இழிவான சொல்லாகக் கருதப்பெறவில்லை. மாறாக ‘மலரினும் மெல்லியது காமம்’ (குறள்:1289) என உயர்வாகவே சுட்டப் பெறுகின்றது. மேலும் பெண்வழிச் சேரலைக் கடிந்து கூறும் அதிகாரங்களில் வள்ளுவர் பயன்படுத்தாமல் காமத்துப்பாலில் மட்டும் இச்சொல்லை இயம்புகிறார். சங்க இலக்கியம் போலவே வள்ளுவரும் காமம் என்ற சொல்லைக் காதல், விருப்பம், புணர்ச்சி, இன்பம் என்ற பொருளில் கையாண்டுள்ளார்.

**காமம் - அகராதிப் பொருள்**

காமம் என்ற சொல்லிற்கு அகராதிகள் பல விதமான பொருளை வழங்கி வருகின்றன.

- **கழகத் தமிழ் அகராதி** ::: காமம் - அன்பு, ஆசை புணர்ச்சியின்பம், இன்பம், சிற்றின்ப ஆசை, ஆசைப்படும் பொருள், உட்பகை, ஆறில்

ஒன்று, ஊர், காமநோய், காமப்பூ, காமமரம், கிராமம், சடத்தீயின் ஒன்று, தாமச குணத்தொன்று, குடி, விருப்பம் போன்ற பொருள் தருகின்றது.

- **தமிழ்மொழி அகராதி** : காமம் : அன்பு, ஆசை, இந்திரியம், காமநோய் காமப்பூ, காமமரம், ஊர், உட்பகை, ஆறினொன்று, கிராமம், பனை, மதனம் முக்கணத்தொன்று, சத்தவிசனத்தொன்று, வீரியம், தாமசக்குணத்தொன்று, குடி, விகாரமெட்டினொன்று, சடத்தீயின்னொன்று போன்ற பொருள்களைத் தருகிறது.
- **தமிழ் ஆங்கில அகராதி :** காமம் Passion, love, Desire, happiness in love. Sexual pleasure, lust போன்ற பொருள்களைத் தருகிறது.
- **சித்தர் மறை பொருள் அகராதி** :: காமம் - இந்திரியம், காமப்பூ, காமமரம், பாதிரி, பனை போன்ற பொருள்களைத் தருகிறது.
- **மெய்யப்பன் தமிழ் அகராதி** :: காமம் ஆசை, அன்பு, இன்பம், காமநீர், ஊர், விருப்பம், புணர்ச்சியின்பம், குடி, இறை போன்ற பொருளைத் தருகிறது.
- **தமிழ் லெக்சிகன் காமம்** :
    1. Desire – விருப்பம், காமம், வெகுளி, மயக்கம்
    2. Happiness in love – உறுதிப் பொருள்களுள் நன்றான இன்பம்
    3. Sexual pleasure – புணர்ச்சி இன்பம்

இவற்றின் மூலம் காமம் என்ற சொல்லிற்குப் புணர்ச்சி இன்பமே பெரும்பாலும் சுட்டப்படுகிறது என்பதை அறிய முடிகிறது.

**காமம் என்ற சொல்லாட்சி**

குறுந்தொகையில் 32 பாடல்களில் காமம் என்ற சொல்லினைக் காண முடிகிறது. பல பாடல்களில் காமம் என்ற சொல் இடம் பெறாமல் காமத்தின் தன்மையைக் குறிப்பிடுவதாகவும் அமைந்துள்ளது. 2,5,17,18,32,42,57, 78,99,102,112,120,132,136,149,152,177,204,205,206,212,217, 231,241,255,257,290,305,306,308,340,371,400 ஆகிய எண்ணுள்ள பாடல்களில் காமம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காண முடிகிறது. பாடலில் விருப்பம் என்ற பொருளைத் தருமிடத்திலும் காமம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

**விருப்பம் என்ற பொருள் தரல்**

காமம் என்ற சொல் விருப்பம் என்ற பொருளில் அமைந்துள்ளது.

**“காமம் செப்பாது கண்டது மொழிமோ” (குறுந்:2)**

**“இல்லேன் இன்பம் காமுற்றா அங்கு”(குறுந் :120)**

**“கவவுக் கடுங்குரையள் காமர் வனப்பினள்” (குறுந் :132)**

**“காமர் பொருட்பிணிப் போகிய” (குறுந் : 255)**

**“காமர் மா அத்துத் தாது அமர் பூவின்” (குறுந் : 306)**

ஆகிய பாடலடிகளில் காமம், காமர் ஆகிய சொற்கள் விருப்பத்தைக் குறிப்பனவாக அமைகின்றன.

**காமத்தின் இயல்பு**

**“யாமம் உய்யாமை நின்றன்று**
**காமம் பெரிதே : களைஞரே இலரே”! (நற்:336)**

காமநோய் மிகுதியான காரணத்தால் அதனைக் களைகின்ற காதலர் எனது அருகில் இல்லையே அதனால் நான் இறந்து போகவும் நேரும் என்பதைத் தலைவி கூறுகிறாள்.

காமத்தின் இயல்பினைக் குறிப்பிடும் பொழுது காமத்தினை எரியும் நெருப்பிற்கு இணையாகச் சுட்டியுள்ளனர்.

**''கண்தர வந்த காம ஒள்ளி'' (குறுந்:305)**

என்பதனை அறியலாம். பகல் இது இரவு இது என்று பிரித்துப் பார்க்கும் தன்மை காமத்திற்கு இல்லை என்பதனை

**''ஊர் துஞ்சு யாமமும் விடியலும் என்று இப்**
**பொழுது இடை தெரியின் பொய்யே காமம்'' (குறுந்:32)**

என்ற பாடலடிகளால் அறியலாம். மேலும் காமம் கொண்டவர்களால் அதனைத் தாங்குவதும் அரிது என்பதனையும், ஒருவரை ஒருவர் பிரிந்திருப்பதும் அரிது என்பதனையும்,

**''பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு'' (குறுந்:57)**
**''அளிதோ தானே காமம்'' (குறுந்:212)**

என்ற பாடல் அடிகளின் மூலம் காமத்தின் இயல்பினை அறிய முடிகிறது.

**தொல்காப்பியத்தில் காமம்**

காமம் என்னும் சொல் சங்கப் பாடல்களில் பல்வேறு இடங்களில் பயின்று வந்துள்ளது. காமம் என்பது இயல்பாக வெளிப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது. இச்சொல் 91 இடங்களில் வந்துள்ளது. உயர் பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. இழிபொருளாக இச்சொல் ஆளப்படவில்லை. 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் காமக் கூட்டங் காணுங் காலை'

(92) எனக் காமப் புணர்ச்சியைக் குறிக்கும் தொல்காப்பியர் காம ஒழுக்கத்தைக் காமத் திணை (108) எனக் குறிப்பிட்டுள்ளார். காமஞ் சிறப்பினும் (111), காம மெய்ப் படுப்பினும் (115), காமக் கூட்டம் தனிமையிற் பொலிதலின் (119), காமநிலை யுரைதல் (117), காமஞ் சான்ற கடைக்கோட்காலை (192), கற்பும் காமமும் நற்பாலொழுக்கமும் (152) என்றெல்லாம் காமம் என்னும் சொல்லை உயர்பொருளிலேயே ஆண்டுள்ளார். காமம் என்பது உயர் பொருளில் பயன்பட்டு வந்தமையை மேற்கூறிய சான்றுகளால் அறியலாம்.

**இலக்கியங்களில் காமம்**

பறவை இனப்பெட்டைகள் அன்புகொண்டு தம் இளமையான குஞ்சுகளைப் பேணி வளர்ப்பதைக் கண்டும், நகை நிறைந்த, இயற்கை அழகுடைய மங்கையரோடு மருவும் இன்பம் உலகில் இருக்கும் போது அதனை நீக்கிவிட்டு பேரின்பம் உண்டென்று, அதுகுறித்து விரதம் நோன்பு பூண்டு, கோயிலைத் தம் வாழ்விடமாகக் கொள்கின்றனர் துறவிகள். தாம் பெற்ற அனைத்தையும் புறம்பாக எறிந்துவிட்டு, புதியதாகிய வேறு பொருட்களை விரும்பி உழன்று திரியும் இயல்புடையவர்கள் ஆவர். அவர்கள் மேலும் மேலும் உணவை மட்டும் விரும்பும் பிசாசு போன்றவர் என்று

**"அளகு மணி நகைப் பேண அணியார்**
**அழகு அரிவை வீழ்முயக்கை யண்ணாத் - தனியாளர்**
**பெற்ற பிறக்கெறிந்து புத்தாய பெட்டுழலும்**
**பெற்றியர் பெட்டகழுது"           (இன்னிலை:31)**

என்ற பொய்கையாரின் இன்னிலைப் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. தனிமனிதன் இன்ப நுகர்வை முழுமையாகப் பெற்றிடத் துணைபுரியும் நூல்கள் பல முற்காலத்தில் இயற்றப்பட்டன.

மணம் முடித்த நிலையிலும் கூட ஆண்கள் பிற பெண்களுடன் உறவுகொண்டு திரிந்துள்ளனர். இத்தகைய ஒரு சூழலில் தன் தலைவனுடன் கூடி வாழும்பிற பெண்களைத் தம் தங்கைமார் என்றே ஒரு தலைவி குறிப்பிடும் நிகழ்வும் ஐந்திணை ஐம்பதில் காணப்படுகிறது. தலைவியைப் பல பெண்களுடன் இன்ப உறவுகொண்டு திரிந்த தலைவன் சில நாட்கள் கழித்துத் தனது வீடு திருப்ப விரும்பி பாணன் மூலமாகத் தலைவியிடம் வாயில் வேண்டினான். அதற்குத் தலைவி

**“போதார்வண் டூதும் புனல்வய லூரற்குத்**
**தூதாய் திரிதரும் பாண்மகனே! நீ தான்**
**ஆறிவயர்ந் தெம்மில்லு ளென்செய்ய வந்தாய்?**
**நெறியதுகா ணெங்கை யரிதற்கு”  (ஐந்திணை ஐம்பது:21)**

என்கிறாள். மலர்களில் மொய்க்கின்ற வண்டுகள் ரீங்காரம் செய்கின்ற, நீர்வளம் மிக்க நன்செய் நிலங்களை உடைய மருதநிலத் தலைவனுக்குத் தூதனாக அலைகின்ற பாணனே மதிகெட்டத்தனமாக ஏன் வாயில் வேண்டி வந்திருக்கிறாய். என் தங்கைமாராகிய (என் தலைவன்பால் விரும்பப்பட்ட) மங்கையரின் மனைக்கு அதோ அது தான் வழி நீ அங்கு செல்வாயாக என்று தலைவி பாணனிடம் சினம் காட்டுகிறாள். இதன் மூலம் தலைவனின் பரத்தமை ஒழுக்கம் அன்றைய சமூகத்தால் அங்கிகரிக்கப்பட்ட, தலைவியால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்றாக இருந்ததை அறியலாம்.

**திருக்குறளில் காமம்**

திருக்குறளில் காமத்துப்பாலின் 250 குறள்களையும் ஆய்வுக்கு உட்படுத்தும் போது பாலியல் என்ற ஒரு சொல் தமிழில் மட்டுமல்ல, உலக மொழிகள் அனைத்திலும் இல்லாமலிருந்தால் உலகில் வாழ்க்கையே

கிடையாது. அத்தகைய உலகச் சிறப்புப் பெற்றச் சொல் 'பாலியல்'. இந்த பாலியல் என்ற சொல் திருக்குறளில் காமத்துப்பாலில் பல்வேறு நிலைகளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மனித வாழ்வுக்கு அறவாழ்வும், பொருள் தேடுதலும் தேவை என்பதை உணர்த்திய வள்ளுவர், இனிய இல்லறத்திற்கும், இன்பவாழ்வுக்கும், மக்கள் செல்வத்திற்கும் தேவையான காம உணர்வு பற்றியும் கூறியுள்ளார். இதனால் அதன் இன்றியமையாமையை வள்ளுவர் உணர்ந்தே கூறியுள்ளார். காமம் என்ற சொல் முகம் சுளிக்க வைக்கும் சொல் அல்ல, இழிவான சொல் அல்ல என்பதையும் அது மலரினும் மென்மையான உணர்வு என்பதையும் உணர்ந்து வெளிப்படுத்தியிருக்கிறார். மற்றவர்கள் இந்த மென்மையான உணர்வைத் தவறான நிலையில் சித்திரித்து எழுதி, அதற்கு ஓர் இழிநிலை உண்டாக்கியிருந்த கால கட்டத்தில் காம உணர்வு தள்ளுவதற்கான உணர்வன்று. அது அளவோடு கொள்வதற்கான தேவையான உணர்வு என்பதை மிகவும் ஒப்பற்ற முறையில் தலைவன், தலைவி ஆகியோரின் உள்ள உணர்வுகளையும், அதன் வெளிப்பாட்டையும் அன்றாட நிகழ்வுகளையும் குறிப்பிட்டு மிகவும் மென்மையாகக் கூறியிருக்கிறார்.

அறத்துப்பாலுக்கு 38 அதிகாரமும், பொருட்பாலுக்கு 70 அதிகாரமும் ஒதுக்கியவர் காமத்துப்பாலுக்கு 25 அதிகாரமே ஒதுக்கியுள்ளார். அறத்துப் பாலையும், பொருட்பாலையும் தம் கூற்றாகவே மொழிந்தவர் காமத்துப்பாலைத் தலைவன், தலைவி, தோழி என உறுப்பினர் கூற்றாக மொழிந்துள்ளார்.

**"உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது**
**மிக்கற்றால் நீள விடல் " (குறள் : 1302)**

என்ற குறளில் உணவில் உப்பு அளவாகச் சேர்ந்திருந்தால்தான் சுவைக்கும். உப்பு சற்று அதிகமானால் சுவை கெட்டுவிடும். அதுபோல ஊடல் என்பது அளவோடு இருக்க வேண்டும். அளவு கூடினால் உப்பின் மிகுதிபோல அது கெட்டுவிடும் என்று கூறியிருப்பது காம உணர்வுக்கும் பொருந்தும் என்று கருதியே 25 அதிகாரங்களில் காமத்துப்பாலைக் கூறியிருக்கிறார். அந்தக் காம உணர்வானது கீழ்த்தரமானது அல்ல. உயர்நிலையில் வைத்துப் போற்றத் தக்கது என்று வள்ளுவர் கூறியுள்ளார்.

**மலரினும் மெல்லியது காமம்**

திருக்குறள் காமத்துப் பாலில்,

**"மலரினும் மெல்லிது காமம் சிலர் அதன்**
**செவ்வி தலைப்படு வார்" (குறள்:1289)**

என்பது வள்ளுவர் காட்டும் வாழ்வியல் சிந்தனையாகும். பாடலில் இங்கு மலரைவிட மென்மையானதாகக் காமத்தை அதாவது காதலைக் கூறுகிறது. காமம் என்பது உளநிலைப்பட்ட சமூகத்திற்கு மட்டுமே பெரிது படுத்தப்படுவதால் களவு வாழ்க்கையே சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. தொல்காப்பியரின் அகமரபுக் கொள்கையில் 'களவியல்' சிறப்பிடத்தைப் பெறுவது குறிப்பிடத்தக்கது.

**சங்க இலக்கியத்தில் காமம்**

சங்க இலக்கியத்தில் காமம் பல்வேறு இடங்களில் பயின்று வந்துள்ளது. இயற்கையின் இயல்பான ஒன்றாகக் காமம் அமைந்துள்ளது. நற்றிணையில் காவிரிப் பூம்பட்டினத்துச் செங்கண்ணனார், காமம் பற்றி,

**“சிலம்பின் போகிற சிதர் கால் வாரணம்**
**முதைச் சுவல் கிளைந்த பூமி, மிகப் பல**
**நன் பொன் இமைக்கும் நாடனொடு**
**அன்புறு காமம் அமைக என் தொடர்பே” (நற்.389.10:11)**

என்று அன்புறு காமம் என்று குறிப்பிட்டுள்ளார். சங்கச் சமுதாயத்தின் ஒரு பிரிவினர் காமத்தை, காதலை வேறு ஒரு வகையில் நோயாகக் கருதியிருப்பதையும் பிறிதோரு பிரிவினர் இதை அன்பாக, புதுவதாக வந்த விருந்தாக, விரும்பத்தக்கதாகப் பார்த்திருப்பதையும் இப்பாடல் தெளிவுபடுத்துகின்றது. பரிபாடலில் காமம் பற்றி செவ்வேள் பகுதியில்,

**“நான் மறை விரித்து, நல் இசை விளக்கும்**
**வாய்மொழிப் புலவீர்! கேண்மின், சிறந்தது**
**காதற் காமம், காமத்துச் சிறந்தது**
**விரும்போர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி” (பரி.9:11-14)**

**“முடி பொருள் அன்று முனியல்! முனியல்**
**கடவரை நிற்குமோ காமம் கொடி இயலாய்” (பரி.20:93-94)**

பாடப்பட்டுள்ள நிலையில் காதல் உயர்வானதாகவே, கருதப்பட்டுள்ளது. களவொழுக்கம் பண்டைத் தமிழகத்தில் கடல் போல் பரவிக்கிடந்தது. தங்களது பெற்றோர் அறியாமல் காதலர்களைத் தேடிக் கொள்கின்ற வழக்கம் அன்று இருந்தமையைக் காணமுடிகிறது. காதலும், காமமும் மிகச் சிறந்தாகவும், அன்பால் இணைந்தோர் ஒத்து உடல் சார்ந்த மெய்யின்பம் துய்த்ததையும் காணமுடிகிறது. காதலும், காமமும் சங்கச் சமுதாயத்தின் பரவலான செயற்பாடாக இருந்துள்ளன.

**காமம் குறித்து உலகத்தவர்**

காமம் இயற்கையின் இயல்பான ஒன்று என்றாலும் அதனை இயல்பான ஒன்றாகச் சங்க காலத்திலும் ஏற்கவில்லை

**"காமம் காமம் என்ப : காமம்**
**அணங்கும் பிணியும் அன்றே : நினைப்பின்**
**முதைச் சுவற் கலித்த முற்றா கிளம்புல்**
**மூதா தைவந் தாங்கு,**
**விருந்தே காமம் - பெருந்தோளோயே" (குறுந்:204)**

காமம் என்பது உள்ளத்தை மயக்கும் அணங்கு போன்ற தாக்குதலும் அன்று, உடலை வருத்தும் நோயும் அன்று. பழைய மேட்டு நிலத்தில் தழைத்த, இளமை நிரம்பாத புல்லைப் பள்ளத்தில் படுத்துக் கிடக்கும் முதிய பசு, நாவினால் தடவியதைப் போல அது விருந்துணவாக அமைவதாகும். அணங்கு தாக்கிய வழி, உள்ளம் தளர்வது போலத் தலைவன் உள்ளம் மெலிந்தான். நோயுற்ற வழி உடல் மெலிவது போல ஆற்றலும் அழகும் இழந்தான். விருந்துணவை உண்டபின், உடல் வலிமை பெறும், உள்ளம் மகிழ்ச்சியுறும். ஆனால் காமமாயின் துய்த்தபின் உடல்மெலியும் உள்ளம் துன்புறும். காமம் விருந்து போன்றது என உரைத்த தலைவனுக்குப் பாங்கன், அது விருந்தும் அன்று என்பதை உணர்த்தினான் என்ற பாடலில் காமம் இன்பத்தைத் தரும் என்பதனைக் கூற வந்த இடத்து இவ்வடிகளை மீண்டும் பயன்படுத்தியுள்ளனர்.

**"நம் காமத்துப் பகையே" (குறுந் : 257)**
**"ஐதே காமம் யானே: (குறுந் : 217)**
**"நல் அறிவு இழந்த காமம்" (குறுந் : 231)**
**"அது கொல் தோழி காம நோயே" (குறுந் : 5)**

ஆகிய அடிகளில் காமம் பகையாகத் துன்பத்தைத் தருவதாக, நல்லறிவை இழக்கச் செய்வதாக, நோயாகப் படைக்கப்பட்டிருப்பதனைக் காணமுடிகிறது. ஊரார் பழிக்கு அஞ்சினால் காமம் மெலிவடைந்து போகும் என்பதனை,

**“கௌவை அஞ்சின் காமம் எய்க்கும்” (குறுந் - 112)**

என்ற தலைவியின் கூற்றால் உலகத்தவர் பழி தூற்றுவதை அறியமுடிகிறது.

**காதல்**

காதல் என்பது ஆங்கில மொழியில் ‘Love’ எனப்படும். இச்சொல் அன்பு, காதல் என்ற பொருளைத் தருகின்றது. தமிழ் மொழியிலும் காதல் என்ற சொல் அன்பு என்ற பொருளில் வழங்கப்பட்டமையை,

**“காதல் அம் தோழி (நற் : 327)**

**“காதல் குலவிளக்கு” (ஐங் : 92)**

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. தலைவன் தலைவியைப் போல் மிகுந்த காதல் உடையவனாக இல்லை. அயலானைப் போல நடந்து கொள்கிறான் என்பதை,

**“காதல் செய்தவும் காதல அன்மை” (நற் :268)**

என்ற அடி மொழிகிறது. ஈண்டு காதல் என்ற சொல் காதலரிடையேயான அன்பைக் குறிக்கிறது. அவ்வாறு காதல் என்ற சொல் ஒருவர் மீது கொண்ட அன்பை உணர்த்தவும், காதலரிடையேயான காதலை உணர்த்தவும் பயன்பட்டமையை 62 இடங்களில் காண முடிகிறது. திருக்குறளில் காதல் (1195, 1242) காதலம் (1314) என்ற சொற்கள் தலைமக்களிடையேயான காதலைக் குறித்தற்கு மட்டும் பயின்று வந்துள்ளன.

**காதல் - அன்பு**

அகில உலகத்தையும் ஆள்வது அன்பு. அன்பு மென்மையானது, இனிமையானது சுகமானது தன்னலமற்றது. அன்பை அடைத்து வைக்க முடியாது.

**"அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும்" – (குறள் : 71)**

என்கிறார் வள்ளுவர். உலகத்தில் வாழ்கின்ற உயிர்கள் அனைத்தும் அன்பை எதிர்பார்த்தே ஏங்கிக் கிடக்கின்றன.

**"காதல் அடைதல் உயிரியற்கை – அது**
**கட்டில் அகப்படும் தன்மையதோ"**

என்கிறார் பாரதிதாசன்.

ஒரு மனிதனுக்கு அகவாழ்க்கையில் தோல்வி என்றால் புறவாழ்க்கையில் வெற்றி பெறுவது மிகவும் கடினம். சங்க கால மக்கள் சிறந்த அகவாழ்க்கையை வாழ்ந்தனர். அவர்களுடைய அகவாழ்க்கை தமிழர்களுக்குச் சிறந்த வழிகாட்டுதலாக உள்ளது. கணவனும், மனைவியும் கருந்தொருமித்து ஈருடல் ஓருயிராக வாழ்தல் சிறந்த அகவாழ்க்கையறம். இதைக் கடைபிடித்து வாழ்ந்தால், வாழ்வே சொர்க்கமாகும்.

**காதல் - அன்பு பற்றிய மன அலசல் :**

காதல்/அன்பு (Love) என்பதைப் புரிந்து கொள்வதற்கு இயல்பூக்கத்தைத் (DRIVE) தவிர மற்றொரு வகையான கட்டுமானத்தைப் புரிந்தாக வேண்டும். "இக்கட்டுமானத்தை மூன்று அடுக்காகப் பிரிக்கிறார் லாப் லாஞ் (1) யதார்த்தநிலை (Level of the real) (2) பயனீட்டு நிலை ( the

level of the Economic) (3) உயிரியில் வகைப்பட்ட நிலை (the level of the biological)"[40] இம்மூன்று நிலைக்கு இணையாக மூன்று எதிர் நிலைகள் உள்ளன. அவை,

1. யதார்த்த நிலைக்கு இணையாக ஆர்வம் உடைய / ஆர்வமற்ற எதிர்நிலை உள்ளது.
2. பயனீட்டு நிலைக்கு இணையாக மிகழ்ச்சியை அளிக்கக் கூடிய / மகிழ்ச்சியை அளிக்காத நிலை உள்ளது.
3. உயிரியல் வகைப்பட்ட நிலையில் மட்டுமே செயலூக்கமான செயலூக்கமற்ற எதிர்நிலையானது தனக்கேயுரிய வடிவத்தில் நேசிக்கும் நிலையை / நேசிக்கப்படும் நிலையை வெளிப்படுத்துகிறது. இது ப்ராய்டு – லெக்கானின் மன அலசல் மூலம் காணமுடிகிறது.

**களவும் காதலும்**

தொல்காப்பியர் களவு, கற்பு எனும் இருவகை ஒழுக்க நெறிகளைப் பொருளதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார். களவு என்பது காதலை மையப்படுத்திய சமுதாயச் செயற்பாடாக இருந்துள்ளது. தாய், தந்தை முதலானோர் அறியாத வண்ணம் மறைந்து ஒழுகும் காதல் ஒழுகலாறு பற்றியதாய் இருப்பதால் காதல் பற்றிய தொல்காப்பியரின் நிலைப்பாடு காதலோடு களவும் சார்ந்ததாய் அமைந்ததேயாகும். **'காமக் கூட்டந் தனிமையிற் பொலிதலிற் றாமே தூதுவராகலு முரித்தே'** (தொல்.பொருள்:117) எனப் பிறர் அறியாமல் தனிமையில் கூடுவதே காமம் கூட்டம் என்கிறார் தொல்காப்பியர். இது மறைந்த ஒழுக்கம் (தொல்-பொருள்:133) எனவும் தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்டுள்ளது.

மறையலராகி மன்றத்த.ஃ.தே' (குறு:97) எனச் சங்க இலக்கியத்திலும் மறை எனவும் களவு குறிப்பிடப்பட்டுள்ளது. தொல்காப்பியர் மேலும் களவு குறித்து,

**"ஒன்றே வேறே யென்றிரு பால்வயி**
**னொன்றி யுயர்ந்த பால தாணையி**
**னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப**
**மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே" (தொல்.பொருள்.90)**

என்ற நூற்பாவில் ஒரு நிலத்தின் கண்ணும் வெவ்வேறுபட்ட நிலத்தின் கண்ணும் உள்ள தலைவனும் தலைவியும் தெய்வத்தின் ஆணையால் எதிர்பட்டுக் காணுதலே காதல், களவு எனத் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார். "சமுதாயத்தில் ஏற்பட்டச் செய்யும் திருமண முறையில் உடன்பாடு இல்லாத தலைவனும், தலைவியும் தனக்கான துணையைத் தானே தேர்ந்தெடுத்து கொள்ளும் நிலையை ஊழ்வழிப்பட்டது என்கிறார் தொல்காப்பியர் . ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்ட வழித் தோன்றும் இந்தக் காதல் வழிப்பட்டதனைத் தொல்காப்பியர் வரையறைப்படுத்தியுள்ளார். ஆண்மகன், பெண்மையோடு, அதே நேரத்தில் அவள் மடியில் தவழும் போது அவனைக் குழந்தையாகப் பாவித்து. பெண், தாய்மை மென்மையோடு இருக்க வேண்டும்."[41] பெண்மை, காதலில் மென்மையாகவே இருக்க வேண்டும். அப்போதுதான் காதல் இன்பம் சிறக்கும்.

**களவு – களவியல்**

உலகில் உள்ள எல்லா உயிர்க்கும் பாலியல் இன்பம் என்பது பொதுவான ஒன்றே ஆகும். அவை,

**"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான் அமர்ந்து வருஉம் மேவற்றாகும்" (தொல்.மரபு.219)**

எல்லா உயிர்களும் இனவிருத்தி செய்து இயற்கையும் மனிதனும் மாறிக் கொண்டு விருத்தியடைந்து கொண்டு இருப்பதால், அவற்றிற்கு ஒரு வரலாறு உண்டு. அவை எப்பொழுதும் ஒரே நிலையிலுள்ள அசையாப் பொருட்களல்ல. எனவே அவற்றைச் சரித்திர ரீதியாகப் பார்க்க வேண்டும். “நம் சமூகத்தின் ஆண் - பெண் பாலியல் உறவுகள் என்பவை அதற்கு முற்பட்ட சமூகத்தின் ஆண் - பெண் பாலியல் உறவுகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருப்பதை பலரும் அறிவர். தொல் சமூகத்தின் ஆதிகால சிறுகுடிகளின் பாலியல் உறவு என்பது சுதந்திரமாக இனவிருத்தி என்ற ஒன்றை மையமாக வைத்து வாழ்ந்த சமூகம் ஆகும். எந்தத் தடையும் இன்றி பாலியல் உறவு கொண்டு வாழ்ந்தனர்.”[42] அவ்வகையில் சிறிதளவு வாழ் குடிகள் தன் சமூகத்திற்கான பாலியலில் சில விதிகளையும், கட்டுபாடுகளையும், அமைப்புகளையும் உட்புகுத்தி வரையறைபடுத்தியதன் விளைவே நாகரிகம் எய்திய சமூகத்தினரின் களவு களவியல் மரபு என்பது புலனாகின்றது.

இதன்மூலம் “சிறிதளவில் வாழ்ந்த சிறுகுடிகளின் பாலியல் மரபு என்பது இனவிருத்தி ஒன்றே ஆகும். அவர்களின் ஆக்கமுமாக உணவு சேகரிப்பும் இனவிருத்தி மட்டுமே நிலவின. தொல் சமூகத்தில் உணவும் பாலியலும் ஒரே வித சமூக மதிப்பினைப் பெற்றிருந்தன என்ற மாலினெங்ஸ்கி குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. இதன் அடிப்படையில் சமூகத்தில் மனிதன் உணவிற்கு உண்டான போராட்டம் பெரியது. இப்போராட்டத்தில் தன் சமூகத்தின் பல்வேறு உறவுகளை அவர்கள் இழந்திருக்கக்கூடும். அவ்வகையில் தன் சமூக உருவாக்கமே முதன்மையாக்கப்பட்ட நிலையில் அதன் வரையறுத்த பாலியல் சார் மரபு என்பது ‘கட்டற்ற பாலுறவு’ என்பதே ஆகும்”[43] அவர்களின்

களவு வாழ்வானது இதுவேயாகும். சிறுகுடிகளாக, திணைக்குடிகளாக வாழந்த "தமிழ் சமூகத்தின் களவியல் மரபு சிறுகுடிகளின் சிறுமரபு ஆகும். தமிழ்ச் சமூகச் சிறுகுடிகளின் களவு சார் மரபு கட்டற்ற நிலையில் புணர்ந்து சுதந்திரமாகத் திரிந்து, புனல், விளையாடி, தினைப் புனம் காத்து வேட்டையாடி இயற்கை சார் வாழ்க்கையில் திளைத்தார்கள்."[44] இவ்வாழ்வில் பாலியல் உறவில் விதிகள், கட்டுப்பாடுகள் புகுந்து பல படிநிலையில் வளர்ச்சிபெற்று வெவ்வேறு மட்டங்களில் அமைந்த சிறுமரபு சமூகங்களின் ஒருங்கிணைப்பே தமிழரின் களவியல் மரபு என்ற பெருமரபைத் தோற்றுவித்துள்ளது. களவு என்பதற்குப் பரிபாடலில் சமூகம் என்ற நூலில் செ.மகேஸ்வரி "காதலர்களின் மன ஒற்றுமையே அகத்திணையின் உயிர்ப் பண்பாகும். களவு என்பது பிணி மூப்புகளின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் உருவும், திருவும், பருவமும், குலனும், குலமும், அன்பும் முதலியவற்றால் ஒப்புமை உடைய தலைவனும், தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்புவுமின்றி ஊழால் தாமே எதிர்ப்பட்டுக் கூடுவது இக்களவு முறை, இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியர்க்கூட்டம் என்னும் நான்கு வழியில் நடைபெறுகிறது."[45] என்பதை மேற்கூறிய அடிகளில் காணலாம்.

**களவின் வகைகள்**

காதலர் மேற்கொள்ளும் களவு வாழ்கையின் நிகழ்ச்சிகளை நான்காகப் பகுத்துக் காண்பர். இந்நான்கும் தலைவன் தலைவியைக் கூடும் களவிற் புணர்தற்கு முன் நிகழ்பவையாகும். அவை,

1. காமப்புணர்ச்சி
2. இடந்தலைப்பாடு
3. பாங்கர் கூட்டம்
4. தோழியிற்புணர்வு

இந்நான்கு பாகுபாடுகளையும் 'மறையென மொழிதல் மறையோர் ஆறோ' என்கிறார் தொல்காப்பியர். மறையோர் என்பதற்கு வடநூலார் 'களவுநூல் வள்ளலார்' என்னும் வேறுபட்ட பொருள்கள் கொண்டு வழங்குவதைக் காணமுடிகிறது.

**மெய்ப்பாடு**

மெய்ப்பாடு என்பது ஐம்பொறிகளில் ஏற்படும் உணர்ச்சிகளாகும். அகமாந்தர்களின் கூற்றுகளாக அமையும் பாடல்கள் மாந்தர் தம் உள்ளத்து உணர்வுகளைப் புறத்தே மெய்ப்பொருளாகப் புலப்படுத்திக் காட்டுகின்றன. மெய்ப்பாடுகள் எட்டு வகைப்படும் என்பதைத் தொல்காப்பியர்.

**"நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று**
**அப்பால் எட்டும் மெய்ப்பா டென்ப" (தொல்.பொருள்.247)**

என்ற நூற்பாவில் குறிப்பிடுகின்றார். அவை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பனவாகும். அவை ஒவ்வொன்றும் நான்கு நிலைகளில் வெளிப்படுகின்றன. மெய்ப்பாடு உளவியல் சார்ந்த சிந்தனையாகவும் உணர்ச்சி வெளிப்பாடாகவும் வெளிப்படுத்தப்படுகிறது. பின்னத்தூர் நாராயணசாமி உரையில் 400 இடங்களில் மெய்ப்பாடுகள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

**மெய்ப்பாடும் - உவகையும்**

மெய்ப்பாடு என்பது மெல்லியலார் மனத்தத்துவத்தை நன்கு தெரிவிக்கும் பகுதி எனக் கொள்ளலாம். களவியல் தொடங்கி இறுதிநாள் வரையும் உள்ள மனத்தத்துவத்தை நன்கு விவரிக்கின்றது. உடனடியாக எல்லா மக்களுக்கும் இயற்கையாகத் தோன்றும் உணர்வுகளைச் சொல்லுகிறது. சில சமயங்களில் தலைவன் தலைவியர் பிரிவு விரும்பத்தகாத செயல்களை இன்ன மனநிலையில் செய்தது என்று அவற்றில் தவறு இல்லை என்பதை எடுத்துக்காட்டுகிறது.

**'மெய்யின் கண் படுதல்'**

**'உடம்பின் கண் தோன்றுதல்'**

மெய்பாடு என்பது 'உடம்பின் கண் தோன்றுதல்' எனப் பொருள் தருகிறது. அதாவது உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகள் என்பதாகும்.

**உரையாசிரியர் கூற்று :**

உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகள் அவ்வுள்ளத்தில் தோன்றியவாறே மற்றவர்களுக்குப் புலனாகும்படித் தோன்றும். புற உடற்குறியீடுகள் மெய்ப்பாடுகள் ஆகின்றன.

**"மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று" (தொல்.மெய்.ப.5)**

என்றும்

**"உவகை சிங்காரத்திற் பிறப்பது" (தொல்.மெய்.ப. 5)**

என்று விளக்கம் தருவார் இளம்பூரணர். இதைப் போலவே,

**"உலகத்தவர் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்த வாறே**
**புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் புலப்படுதல்" (தொல்.மெய்.ப.10)**

என்ற மெய்ப்பாட்டையும்,

**"காம முதலிய மகிழ்ச்சி"     (தொல்.மெய்.ப.10)**

என்று உவகையைப் பற்றியும் பேராசியர் கூறுகிறார்.

**ஐந்திணை**

அகத்திணையின் உட்பிரிவில் ஒன்று ஐந்திணை. அகத்திணைப் படைப்பில் விரிவாகப் பேசப்படுவது ஐந்திணையே. கைக்கிளையையும் பெருந்திணையையும் குறிப்பிடும் தொல்காப்பியர் 'கைக்கிளைக் குறிப்பே' 'பெருந்திணைக் குறிப்பே' என்று சிறுநிலை தோன்ற நிறுத்திக் கொண்டார். ஐந்திணைக் காதல் அறத்தின் அடிப்படையில் சொல்வதாலும், உலகோர் ஒப்புக் கொள்ளும் சிறப்பினையுடையதாலும், இலக்கியத்திற்கு ஏற்றதாக, உள்ளதாலும் சங்கச் சான்றோர் ஐந்திணைத் துறைகளுடைய பாடல்களையே மிகுதியும் கையாண்டனர். ஐந்திணையிடத்து களவு, கற்பு என்ற இரண்டு ஒழுக்கங்களும் நிகழும் அன்பின் ஐந்திணை என்று செல்லப்படுவது குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல், பாலை எனப் பிரித்து அவற்றிற்கு உரித்தான முதல், கரு உரிப்பொருட்களால் பாடப்பட்டுள்ளது.

**களவுக் காலத்தில் மெய்யுறு புணர்ச்சி**

ஒத்த தலைமக்கள் தூய அன்பால் காதல் கொண்டிருக்கும் பொழுது அவர்களிடையே வேட்கை அதிகமாகும். அப்போது கீழே குறிப்பிடப்பெறும் சிந்தனைகள் அவர்களிடையே தோன்றும்.

**"வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்**
**ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்**
**நோக்குவ எல்லாம் அவையே போறல்**
**மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்றிச்**
**சிறப்புடைய மரபினவை களவென மொழிப"   (களவு:1046)**

குறையாத விருப்பம், இடைவிடாது நினைத்தல், இளைத்தல், ஆவதற்குரியதைக் கூறல், தம் நாண எல்லையைக் கடத்தல், காண்பன அனைத்தும் தம்மைப் போன்றிருப்பதாகத் தோன்றுதல், தம் செயல்களை மறத்தல், தெளிவின்மை, காதல் நினைவு இவையாவும் களவுக்குரிய ஒழுகலாறுகளாக அமைகிறது.

**இயற்கைப் புணர்ச்சி**

அன்பின் ஐந்திணைக்குரிய இன்ப வாழ்வில் முதன் முதலாக நிகழ்வது காமப்புணர்ச்சி என்கிற இயற்கைப் புணர்ச்சியாகும். தலைவனும் தலைவியும் முன் காலத்து நிகழ்வால் ஒருவரை ஒருவர் காதல் கொண்டு இருவரும் இன்பமாக இருக்கும் நிகழ்ச்சியை இயற்கைப் புணர்ச்சி என்பர். தலைவன், தலைவி ஆகிய இருவர் மனம் ஒன்றிய செயலினை உயிர் கலந்த உள்ளப் புணர்ச்சி எனலாம். தலைமகனும், தலைமகளும் ஒருவரை ஒருவர் எதிர்பட்டு அன்பால் கூடும் தலைநாள் கூட்டத்தைக் ‘காமப்புணர்ச்சி’ என்பர். இது கைக்கிளை, உள்ளப்புணர்ச்சி, மெய்யுறுபுணர்ச்சி என்னும் மூவகைப் படிநிலைகளைக் கொண்டது. இது புணர்தல் முதலாகிய ஐவகை ஒழுக்கத்தின் பாற்பட்டது. புணர்தலும், புணர்தல் நிமித்தமும் என்னும் காமப்புணர்ச்சியை ஆராயுமிடத்து எண்வகை மணத்துள் காந்தருவ மணத்தைச் சேர்ந்ததாகும்.

## தொகுப்புரை

- சங்க காலத் தமிழர்களின் வாழ்வில் காதலும், வீரமும் இரு கண்களாகக் காணப்படுகின்றன.
- பாலுணர்வு என்பது ஆபாசமான ஒன்றல்ல. அது மிக இயற்கையான ஒன்று. மனித வாழ்க்கையிலும், மனிதத் தொடர்புகளிலும், சமூக வாழ்க்கையிலும், ஆன்மிக நிலையிலும், கலை பண்பாட்டுச் செயல்பாடுகளிலும் அடிப்படைக் கூறாக விளங்குவது பாலுணர்வாகும்.
- ஆங்கிலத்தில் ஆண் - பெண் பாலியல் தொடர்பை விளக்க செக்ஸ் என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் ஆய்வுகள் இதனைச் செக்ஸ் என்றும் செக்ஸீவாலிட்டி என்றும் பிரிக்க முயல்கின்றன. செக்ஸைப் பால்வேறுபாடு என்றும் செக்ஸீவாலிட்டியைப் பாலுணர்வு என்றும் குறிப்பிடுகின்றன.
- காமம் என்னும் சொல்லை வடமொழிச்சொல் எனச் சிலர் கூறுவர். வடமொழிக் கலப்பு நம் தமிழ் மொழியில் ஏற்படும் முன்பே இச்சொல் தமிழில் இருந்தமைக்கு முதன்மை இலக்கண நூலான தொல்காப்பியமும் சங்க அக இலக்கியங்களும் சான்றாகத் திகழ்கின்றன.
- குறுந்தொகையில் 32 பாடல்களில் காமம் என்ற சொல்லினைக் காணமுடிகிறது. பல பாடல்களில் காமம் என்ற சொல் இடம்பெறாமல் காமத்தின் தன்மையைக் குறிப்பிடுவதாகவும் அமைந்துள்ளது.
- வள்ளுவர் காமம் என்ற சொல் முகம் சுளிக்க வைக்கும் சொல் அல்ல, இழிவான சொல் அல்ல என்பதையும் அது மலரினும் மென்மையான உணர்வு என்பதையும் உணர்ந்து வெளிப்படுத்தியிருக்கிறார்.

- தொல்காப்பியர் களவு, கற்பு எனும் இருவகை ஒழுக்க நெறிகளைப் பொருளதிகாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.
- களவு என்பது காதலை மையப்படுத்திய சமுதாயச் செயற்பாடாக இருந்துள்ளது. தாய், தந்தை முதலானோர் அறியாத வண்ணம் மறைந்து ஒழுகும் காதல் ஒழுகலாறு பற்றியதாய் இருப்பதால் காதல் பற்றிய தொல்காப்பியரின் நிலைப்பாடு, காதலோடு களவும் சார்ந்ததாய் அமைந்ததேயாகும்.
- சமூகத்தின் ஆண் - பெண் பாலியல் உறவுகள் என்பவை அதற்கு முற்பட்ட சமூகத்தின் ஆண் - பெண் பாலியல் உறவுகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருப்பதைப் பலரும் அறிவர்.
- தொல் சமூகத்தின் ஆதிகால சிறுகுடிகளின் பாலியல் உறவு என்பது சுதந்திரமாக இனவிருத்தி என்ற ஒன்றை மையமாக வைத்து வாழ்ந்த சமூகம் ஆகும். அவர்கள் எந்தத் தடையும் இன்றி பாலியல் உறவு கொண்டு வாழ்ந்தனர்.
- அன்பின் ஐந்திணைக்குரிய இன்ப வாழ்வில் முதன்முதலாக நிகழ்வது காமப்புணர்ச்சி என்கிற இயற்கைப் புணர்ச்சியாகும்.
- தலைவனும் தலைவியும் முன் காலத்து நிகழ்வால் ஒருவரை ஒருவர் காதல் கொண்டு இருவரும் இன்பமாக இருக்கும் நிகழ்ச்சியை இயற்கைப் புணர்ச்சி என்பர்.
- தலைமகனும், தலைமகளும் ஒருவரை ஒருவர் எதிர்பட்டு அன்பால் கூடும் தலைநாள் கூட்டத்தைக் 'காமப்புணர்ச்சி' என்பர். இது கைக்கிளை, உள்ளப் புணர்ச்சி, மெய்யுறுபுணர்ச்சி என்னும் மூவகைப் படிநிலைகளைக் கொண்டது.

## சான்றெண்விளக்கம்

1. பி.எம்.மாத்யூ வெல்லூர், பாலியல் கலைக்களஞ்சியம் ப.7.
2. எஸ்.ஏ.செல்லப்பா, பாலியல் வாழ்வின் மறுபக்கம், ப.42.
3. மு.சிங்காரவேலன், பாலியல் சிக்கல்கள் - ஒரு பார்வை, ப.213.
4. கலைக் களஞ்சியம், தொகுதி 7, பக்.211-212.
5. பி.எம்.மாத்யூ வெல்லூர், பாலியல் கலைக்களஞ்சியம், ப.8.
6. ஃப்ராய்ட்-யூங்-லக்கான், அறிமுகமும் நெறிமுகமும், ப.113.
7. இலக்கியத் தரவுகளில் மகளிர் பதிவுகள், ப.96.
8. அ.மரியசெபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.5.
9. வாழ்வியல் களஞ்சியம், தொ. 12, ப.395.
10. அ.மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.9.
11. காலச்சுவடு, சூலை, ஆகஸ்ட்டு 2003, ப.16.
12. தமிழ்ச் சிறுகதைகளில் பாலின வேறுபாடும், பெண்ணடிமைத்தனமும், ப.9.
13. பி.எம். மாத்யூ வெல்லூர், பாலியல் கலைக்களஞ்சியம், ப.8.
14. காலச்சுவடு சூலை, ஆகஸ்ட்டு 2008. ப.16.
15. தமிழ் லெக்சிகன், சென்னைப் பல்கலைக்கழகம், பாகம்-5, பகுதி-1,9, ப.775.
16. The World book Dictionary P. 1908.
17. Fank & Nagnalls – New encyclopedia P. 330.
18. அ.மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.2.
19. Websters New International Dictionary of the English – Language P. 2296.

20. இரா.பிரேமா, பெண்ணிய அணுமுறைகள் ப.113.

21. பி.எம்.மாத்யூ வெல்லூர், பாலியல் கலைக் களஞ்சியம், ப.324.

22. டேவிட் சித்தையா, பிராய்டின் பாலியல் கோட்பாடுகள், ப.35.

23. பி.எம். மாத்யூ வெல்லூர், பாலியல் கலைக் களஞ்சியம், ப.8.

24. அ.மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.3.

25. மேலது, பக்.3-4.

26. வி.நிர்மலாராணி, தமிழ்ச் சிறுகதைகளில் பாலின வேறுபாடும் - பெண்ணடிமைத்தனமும், ப.9.

27. க.பஞ்சாங்கம், தலித்துகள் - பெண்கள் - தமிழர்கள், ப.89.

28. ச.முத்துச்சிதம்பரம், தமிழக நாட்டுப் புறவியலில் பெண், ப.1.

29. டேவிட் வெர்னர் - டாக்டர் இல்லாத இடத்தில், ப. 249.

30. அ.மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.3.

31. தமிழ் இலக்கியங்களில் பாலினச் சமத்துவம், ஆய்வுக் கோவை-2014. ப.28.

32. பா.செல்வராஜ், பாலியல் மனோதத்துவம், ப.61.

33. அ.மரிய செபஸ்தியான்,தமிழரின் பாலியல் முறைமைகள், ப.42.

34. பி.எம்.மாத்யூ வெல்லூர், பாலியல் கலைக்களஞ்சியம், ப.10.

35. ஆறு.முத்துக்கருப்பன், பரணர் - ஔவையார் பாடல்களில் உள்ளப் போராட்டம், ப.7.

36. து.சிவராஜ், சங்க இலக்கியத்தில் உளவியல், ப.16.

37. தி.கு.இரவிச்சந்திரன், சிக்மண்ட் ப்ராய்ட் உளப்பகுப்பாய்வு அறிவியல், ப.160.

38. ஆறு.முத்துக்கருப்பன், பரணர் - ஔவையார் பாடல்களில் உள்ளப் போராட்டம், ப.15.

39. பி.எம்.மாத்யூ வெல்லூர், பாலியல் கலைக்களஞ்சியம், ப.13.

40. ஐ.க.பாண்டியன், ஔவையின் உளவியல் & ப்ராய்டு – லெக்கானின் மனஅலசல், ப.168.

41. கண்ணதாசன், இலக்கியத்தில் காதல், ப.34.

42. தமிழ்ச் சமூகத்தின் களவு களவியல் சார் மரபு, ஆய்வுக் கோவை-2014. ப.1421.

43. மேலது, ப.1421.

44. மேலது, ப.1422.

45. செ.மகேஸ்வரி, பரிபாடலில் சமூகம், பக்.3,4.

# இயல் இரண்டு

## தலைவன் குறித்த பாலியல் பதிவுகள்

அகவொழுக்கத்தில் தலைமை மாந்தராகக் கருதப்படுபவன் தலைவன். உயிர் இல்லையேல் அங்கே உடம்பிருந்தும் பயனில்லை. தலைவன் இல்லையேல் தலைவியின் மென்மையும் அவளுடைய அளவு கடந்த அன்பும் பயனற்ற நிகழ்வாகப் போய்விடும். அகப்பொருள் பாடல்களில் 'சுட்டி ஒருவர் பெயர் கொள்ளப்பெறார்' என்பதால் அவர்கள் அடையாளமோ, அவர் நாட்டின் பெயரோ கூறப்படுவதில்லை. ஆனாலும் தலைவனது வீரம், நாட்டு வளம், கருணை உள்ளம் பிற உயிர்கள் ஆகியன கடந்து அன்பு காட்டுதல் பொதுவாகக் கூறப்படும். அவற்றில் தலைவன் என்போன் அரசனின் பண்பு நலன்களை ஒத்து வருணிக்கப்படுகிறான்.

தலைவன் பெருமையும் வலியும் உடையவனாக இருக்க வேண்டும். அவைதாம் அவன் ஆண்டன்மை.

**"பெருமையும் உரனும் ஆடூஉ மேன" (கள:7)**

என்ற நூற்பா அடியில் "பெருமையாவது அறிவு ஆற்றல் ஆராய்ச்சி கொடை புகழ் பண்பு பழிபாவங்களுக்கஞ்சுதல் முதலியவற்றில் மேம்படுதல், உரம்-வலி, வலியாவதுக் கடைப்பிடி அடக்கம். துணிவு முதலியவற்றையுடையனாதல், கடைப்பிடி மேற்கொண்டதை விடாமற் செய்து முடிக்கும் இயல்பு. இத்தகுப் பெருமையாலும், வலியாலும் அவன் மேம்பட்டிருக்க வேண்டும்."[1] அதாவது நிறைந்த பெருமையும் வலியும் உடையது தலைவனே களவொழுக்கம் ஒழுகத் தகுதியுடையவனாவான் என்பது பெறப்படுகின்றது.

தலைவனைச் சுட்டும் சங்கப் பாடலடிகள் அவனை விடலை, காளை எனக் குறிப்பிடுகின்றன. இங்குக் காளை என்ற சொல்லானது ஆற்றலோடு புணரும் ஏற்றினை ஒப்பிட்டுக் கூறுவதாக அமைந்துள்ளது. இதனை,

**“புள் ஓலிக்கு அமர்த்தக் கண்ணன் வெள்வேல்**
**திருந்துகழற் காளையொடு அருஞ்சுரம் கழிவோள்” (ஐங்.382:1-2)**

**“கடுங்கட் காளையொடு நெடுந்தேர் ஏறி**
**கோள்வல் வேங்கைய மலை பிறக்கு ஒழிய” (ஐங்.385:1-2)**

என்ற பாடலடிகள் காளையின் வலிமையைச் சுட்டுவதாக அமைகின்றன. காளை என்ற பெயருக்கு முன் அதன் ஆற்றலும் சுட்டப்பட்டிருப்பது மேற்கண்ட கருத்திற்கு வலுசேர்ப்பதாக அமைந்திருக்கிறது. காளை என்ற குறிப்பினைப் போல் விடலை என்பதற்கும் பல பாடல்கள் சான்றாக அமைவதைக் காணலாம்.

**“வந்தனளோ நின் மட மகள் -**
**வேந்திறல் வெள் வேல் விடலை முந்துறவே” (ஐங்.393:4-5)**

**“சொல்லினென் இரக்கும் அளவை -**
**வென்வேல் விடலை ! – விரையா தீமே” (ஐங்.364:3-4)**

என்ற பாடல்கள் விடலைப் பருவத் தலைவனைக் குறிப்பிடுகின்றன. மேலும் “விடலை என்ற குறிப்பு, பாலை நிலத் தலைவனைக் குறிப்பதாகும். பாலை நிலமானது நிலையில்லா இடைப்பட்ட நிலம். அவ்வகையில் இளமைப் பருவம் (Adult) என்பதற்கும் குழந்தைப் பருவம் (Child Hood) என்பதற்கும் இடைப்பட்ட நிலையில்லாப் பருவமாக விடலை என்கிற வளர் இளம் பருவம் குறிக்கப்படுவதாகக் கூட கொள்ள இடமுண்டு.”[2] இதன் மூலம் ‘காளை’ விடலை, எனத் தலைவனை உயர்ந்த நிலையில் குறிப்பிடுவதை அறிலாம்.

**தலைவன் கூற்று**

தலைவியைப் பிரிந்து இருக்கும் தலைவனின் கூற்றில் தலைவி மீதான அன்பின் மிகுதியை அறிய முடிகின்றது. பிரிவே அன்பின் ஆழத்தை அறிய உதவுகின்றது. தலைவியின் அன்பான செயல்பாடு மற்றும் தலைவன் மீது கொண்டிருக்கும் எல்லையற்ற காதல் அன்பின் அடித்தளமாக அமைகின்றது. அத்தகைய தலைவனின் காதற் சிறப்பைத் தலைவன் கூற்று மூலம் அறிய முடியும்.

தலைவனின் கூற்றானது தலைவியிடம் மூன்று நிலைகளில் நடைபெறுகிறது.

1. கார்கால வரவிற்கு முன்பே மீண்ட தலைவன் தன் அன்பின் மிகுதியை வெளிப்படுத்தும் கூற்றுக்கள்.
2. பிரிவானோ தலைவன் என்று வருந்திய தலைவியை ஆற்றுப்படுத்தும் கூற்றுக்கள்.
3. வினை முற்றி மீண்ட தலைவன் தலைவியை எண்ணி வருத்தியமை கூறிக் காதலை வெளிப்படுத்துதல்.

இவ்வாறு தலைவியிடம் மூன்று விதமான கூற்றுகள் நடைபெறுகின்றன. மேலும் தலைவன் தேர்ப்பாகனுடனும், பாணனுடனும் நிகழ்த்திய கூற்று மூலமும் தலைவி மீது கொண்ட காதல் வெளிப்படுகிறது.

**தலைவன் உயர் பண்புகள்**

ஒரு மனிதனின் பண்புகள், குணம், நடத்தைகள் மற்றும் சமூக இயக்கம் ஆகியவற்றால் தீர்மானிக்கப்படுகின்றது. “உயர்ந்தக் குணங்களில் சிறந்தத்

தலைமகன் தலைவியை மட்டுமே மணம் புரிந்துக் கொள்ள வேண்டுமென எண்ணி மடலேறுவதற்கும் துணிகின்றான். எனவே தலைவி மேல் தலைவன் கொண்டுள்ள காதல் மிகுதியின் வெளிப்பாடே மடலேறுவதற்குக் காரணமாக அமைந்துள்ளதை அறிய முடிகிறது”[3] என்பர்.

அலர் என்பது தலைவன் - தலைவி காதல் வாழ்க்கைப் பற்றி ஊரார் பேசிக் கொள்வது. இவ்வலர் தலைவி ஊரில்தான் அதிகமாகப் பேசப்படும். தலைவன் ஊரில் அலர் பேசப்பட்டதற்குச் சான்றுகள் இல்லை. அலரால் தலைவியும் அவளுடைய பெற்றோர்களும் துன்புறுவார்கள் என்று எண்ணிய தலைவன் தலைவியைச் சந்திக்காமல் பிரிந்துச் செல்கிறான். இந்நிலையை,

**“நாணு நெஞ்சலைப்ப விடுத்தற் கண்ணும்” (தொல்.களவு:நூ.105)**

என்ற நூற்பாவின் வழி தொல்காப்பியர் விளக்குகிறார். வள்ளுவர் காலத்தில் அலர் விரும்பப்பட்டதை,

**“உறாஅதோ ஊர் அறிந்த கௌவை அதனைப்**
**பெறாஅது பெற்றன்ன நீர்த்து” (குறள்:1143)**

என்றக் குறள் சுட்டுகிறது.

தலைவியிடம் பேச எண்ணிய தலைவன் தோழியிடம் ஊர்ப் பெயர் வினவுவது, தன் உள்ளத்தின் குறிப்பைப் புலப்படுத்தி இரந்து நிற்பது, வேறு வழியில் தலைவியைச் சந்திக்க முயற்சிப்பது, தன் வருத்தத்தைக் கூறுவது, மறைந்து ஒழுகும் ஒழுக்கத்தை வேண்டுவது, காதலியை நினைத்து உடல் மெலிவது, தன்னைவிடத் தலைவியின் குணங்களை உயர்வாகப் பேசுவது, தன் அன்பைத் தோழி நகையாடியது, தலைவியைச் சந்திக்க வரும் வழியில்

ஏற்படும் துன்பங்களை எடுத்துரைப்பது முதலான இடங்களில் தலைவனின் கூற்றானது மிகச் சிறப்பாகப் பேசப்படுவதை அறியலாம்.

திருக்குறளில் திருவள்ளுவர் இல்வாழ்க்கை பற்றி,

**“அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது” (குறள்:45)**

என்று குறிப்பிடுகிறார், சங்ககாலப் புலவன் மக்களின் வாழ்க்கை நிலையை நுணுகி ஆராய்ந்து, வாழ்வின் கூறுபாடுகளையும் எண்ணிக் களிப்படைந்து பிறருடன் பகிர்ந்துக் கொள்ள நினைத்து அவற்றைச் செய்யுட்களாக வடிவமைத்துக் கொடுத்துள்ளான்.

“தலைவன் தலைவியோடு வாழ்ந்து புதல்வர்களை ஈன்றெடுத்து அறங்களை நிலை நாட்டும் புகழ் எவ்விடத்தும் நடப்பதுதான். எனினும் அந்த வாழ்வினை நுணுகிக் கண்டறிந்து, அவ்வாழ்வின் ஒவ்வொரு காலத்திலும் அவர்களுடைய உள்ளக் கிளர்ச்சிகள் எப்படி இருந்திருக்க வேண்டும் என்பதனை அழகுறச் சுவைத்து புலமை நயத்துடன் சங்கப் புலவர்கள் அமைத்துள்ளனர்.”[4] அகப்பொருள் இலக்கணவழி தலைவனின் காதல் சிறப்பினை எடுத்து இயம்புவதைச் சங்கப் பாடலின் வழி அறியலாம்.

**“உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன**
**மடந்தையொடு எம்மிடை நட்பு” (குறள்:1122)**

என்ற வள்ளுவரின் குறள் சுட்டும். காதல் சிறப்பினை ஒத்த சங்க இலக்கியப் பாடல்கள் அனைத்தும் தலைவனின் காதல் திறத்தை எடுத்துக் கூறுவனவாக அமைந்துள்ளன.

**தலைவன் தனக்குத் தானே பேசும் செய்திகள்**

தலைவன் தனக்குள் பேசும் நிகழ்வுகள் பல்வேறு இடங்களில் இடம் பெறுவதைக் காணலாம். அவை,

- ❖ இயற்கைப் புணர்ச்சி நீங்கித் தலைமகன் தலைமகளை நினைத்துத் தனக்குள்ளே பேசுதல்.
- ❖ தலைவியின் இல்வாழ்க்கைச் சிறப்புக் கண்டு மகிழ்தல்
- ❖ தலைவியை எண்ணி நினைத்துத் தனது நெஞ்சிற்கே பேசுவனவாக மிகுதியான பாடல்கள் அமைந்துள்ளன.

**தலைவன் தலைவியிடம் பேசுதல்**

- ❖ தலைவனும் தலைவியும் உடன்போக்குச் செல்லும்போது இடைச் சுரத்தில் தலைவியை ஆற்றுப்படுத்துதல்

**தலைவன் தோழியிடம் பேசுதல்**

தலைவன், தலைவி என்னை வருத்துவதற்குச் செய்த தவறு என்ன எனக் கேட்டல், தோழியிடம் இரந்து தலைவியைச் சந்திக்கக் கேட்டல், தோழியர் கூட்டத்தில் தலைவி யார் என்பதைக் கூறல் முதலிய இடங்களில் தோழியிடம் தலைவன் பேசுதலை அறியலாம்.

**தலைவன் பாங்கனிடம் பேசுதல்**

தலைவி எத்தன்மையள் என்பதைக் கூறுதல், காமத்தால் தான் தலைவியை எண்ணிக் கண்துயிலாமல் இருக்கும் காரணத்தைக் கூறுதல் முதலியனவாகும்.

**தலைவனின் காதல் உயர்வு மொழிகள்**

தலைவன் கூற்றின் வாயிலாகப் பலப் பாடல்களில் நட்பின் திறத்தை விளக்குவதற்குச் சிறப்பான சொல்லாடல்களைப் புலவர்கள் கையாண்டுள்ளனர். இச்சொல்லாடல்களில் தலைவனின் காதல் உயர்வு வெளிப்படுகின்றது. மற்றொருவருக்கு விளக்கப்புகும்காலை உயர்வான சொற்களைப் பயன்படுத்துவதால் அச்சொற்கள் தலைவனின் காதல் உயர்வு மொழிகளாகக் கருதமுடிகிறது.

**தலைவியின் காமத்தை தலைவன் உணர்தல்**

காமம் குறித்து தொல்காப்பியர்,

**"காமத் திணையில் கண்ணின்று வரூஉம்**
**நாணும் மடனும் பெண்மைய ஆதலின்**
**குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை**
**நெறிப்பட வாரா அவள் வயினான" (தொல்.பொருள்.1054)**

தலைவி நாணத்தால் மறைத்துக் கொண்டிருக்கும் காமக்குறிப்பைக் கண்டுகொள்வது தலைமகனின் கடமையாகும். காணத்தவறினால் அவளின் காமவுணர்வு கசப்புணர்வாக மாறிவிடும். காமத்தைப் புரிந்து கொள்பவனே சிறந்த கணவனாவான். இதன் அடிப்படையில் "எல்லாக் காதலர்களின் நெஞ்சிலும் காமம் என்ற உயர்நிலை எட்டி உள்ளது"[5] என்பது புலப்படுகிறது.

**தலைவன் தலைவியின் உடலமைப்பை வருணித்தல்**

தலைவியோடு இயற்கைப் புணர்ச்சியில் கூடிய தலைவன் இடந்தலைப்பட்டுத் தனியே தலைவியைச் சந்திக்கிறான். அவ்வாறு முதல் நாளில் புணர்ந்தத் தலைவியை மறுநாளும் கடற்கரையிலே காண்கிறான். இதனை,

**“ஒள் இழை மகளிரோடு ஓரையும் ஆடாய்**
**வள் இதழ் நெய்தற் தொடலையும் புனையாய்**
**வரி பூங் கானல் ஒரு சிறை நின்றோய்**
**…………**
**முள் எயிற்று முறுவல் திறந்தன:**
**பல்இதழ் உண்கணும் பரந்தவால், பனியே”   (நற்:155:1-10)**

என்ற பாடல் உணர்த்துகிறது. ஒளி பொருந்திய அணிகலன்களை உடைய ஆயமகளிரோடு கூடிப் பாவையைக் கொண்டு விளையாடும் ஆட்டத்தை ஆடாமல் மலர்ந்த மலர்கள் விளங்கும் கடற்கரைச் சோலையின் ஒரு பக்கத்தே நிற்கும் நங்கையே! நீ யாரோ? உன்னைத் தொழுது கேட்கிறோம். நோக்கியவர்களால் கெடாத நலத்தினை உடையாய்! நீ தான் தெளிந்த அலையையுடைய பெரிய கடற்பரப்பின்கண் விரும்பி உறையும் கடல் தெய்வமோ! கரிய உப்பங்கழியின் அருகில் நிலைபெற்று நின்றனையோ? வேறு யாவளோ? மடந்தையே! நீயே சொல்வாயாக என்றுத் தலைவன் கூற, அதற்கு விடையாகத் தலைவியின் முள்ளைப் போன்ற கூறிய பற்களிலிருந்து நகை தோன்றியது. இரண்டு இமைகள் பொருந்திய மையுண்ட கண்களும் பனி பரந்தன. ஆகவே யாம்முன்பு தழுவிய இவளே இப்பொழுதும் அம்முகக் குறிப்புக் காட்டினாள் எனத் தலைவன் உணருகிறான்.

தலைவன் இயற்கைப் புணர்ச்சிப் புணர்ந்து பின் தன்னை விட்டுப் பிரிவதை எண்ணித் தலைவி வருந்துகிறாள். அவளுடையத் துயரை முகக் குறிப்பால் அறிந்த தலைவன், ஆறுதல் கூறும் விதமாகக் காதல் உயர்வு மொழிகளாகப் பேசுகிறான். இதனை,

**“யாயும் ஞாயும் யார் ஆகியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்?**
**செம்புலப் பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே”  (குறுந்.40:1-5)**

தலைவன் தலைவியிடம் நீயும் நானும் எவ்விதத்திலும் உயர்வுடையவர்கள் அல்லர். முன்பு அறிந்து பழகியவர்களும் அல்லர். நம்முடைய உறவானது ஊழ் வினையால் உருவாக்கப்பட்டது என்கிறான்.

தலைவன் தங்களுடைய காதலின் உயர்வினை உணர்த்தப்புகும்காலை; செம்மண்ணில் பெய்த மழை நீரினை அதனுடைய உண்மைத் தன்மையோடு பிரித்து எடுக்க இயலாது. அந்நீர் செம்மண் நிறம் பெற்று விடும். அதுபோல நம்முடைய இருவரின் நெஞ்சமும் பிரிக்கும் தன்மையற்றுக் கலந்து விட்டது. நீரினையும் மண்ணின் நிறத்தையும் தனியே பிரித்தெடுக்க இயலாதது போல நம்முடைய இருவரின் நெஞ்சமும் பிரிக்கும் தன்மையற்றது என்கிறான்.

இடந்தலைப்பாட்டின் கண் தலைவன் தன் நெஞ்சிற்கு அவள் கை காந்தள் மலர் போன்று மென்மையானது என்பதை,

**“கோடல், எதிர்முகைப் பசுவீ முல்லை**
**நாறுஇதழ்க் குவளையொடு இடையிடுபு விரைஇ,**
**ஐதுதொடை மாண்ட கோதை போல**
**நறிய நல்லோள் மேனி**
**முறியினும் வாய்வது முயங்கற்கும் இனிதே”  (குறுந்.62:1-5)**

எனும் பாடல் தெளிவுறுத்துகின்றது. இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைப் பெற்று இன்புற்றதுப் போல, இடந்தலைப்பாட்டின் கண்ணும் அவளைப் பெற்று

மகிழ விரும்பிய தலைவன், தன் நெஞ்சிற்கு உரைப்பதாக இப்பாடல் அமைகிறது. தலைவியின் மேனி, காந்தளாகிய கைகளும், முல்லை எதிர் முகையாகியப் பற்களும், குவளையாகியக் கண்களும் இவற்றை இடையிட்டுத் தொடுத்தாள் போன்ற மாலை போல் தலைவி விளங்குவதைத் தலைவன் குறித்து நின்றான். தலைவியின் மேனி தளிரை விட இன்பம் தருவதாக உரைத்தான். காண்பதற்கு இனிதாகும் தளிரைப் போலன்றி வாடாமையும், குழையாமையும் உடைய மேனி பிறந்து விளங்குவதாய்க் கருதினான். கோடல், முல்லை, குவளை என மலர்களை உவமையாகக் கூறித் தலைவியின் உடல் முழுவதும் தனக்குத் தந்த இன்பத்தை நினைத்துத் தளிரினும் சிறந்ததாக அவள் மேனி விளங்குவதை எண்ணி மகிழ்ந்தான்.

இதனைத் ‘திருக்குறளில் பாலியல்’ என்ற நூலில் நலம் புணர்ந்து உரைத்தலில் “இவள் கண்கள் எல்லா மலர்களைக் காட்டிலும் சிறந்தவை. இதை என் நெஞ்சமானது அறியவில்லை. அதனால் இவளுடைய கண்கள் பலராலும் பார்க்கப்படும் சாதாரண பூக்களைப் போன்றவை என்று கருதி மலர்களைப் பார்த்தவுடன் என் நெஞ்சமானது மயங்குகிறது. மூங்கில் போலும் அழகிய தோளினை உடைய என் காதலியின் உடல் நிறம் தளிர் போன்றது. பற்கள் முத்துக்கள் போன்றவை, நறுமணம் கொண்டவை, மை தீட்டப்பட்ட கண்கள் வேலுக்கு ஒப்பானவை. அனிச்சமலர் எல்லா மலர்களை விட மென்மையானது என்றாலும் என் காதலி அதைவிட மென்மையானவள்”[6] என தலைவன் உரைப்பது குறுந்தொகைப் பாடலினைப் போன்று திருக்குறளில் ஒத்திருப்பதைக் காணமுடிகிறது.

**தலைவனின் காமம்**

தாமரைப் பூப்போன்ற மையுண்ட கண்களையும், பொன்னைப் போன்ற நிறத்தினையும், அழகிய வரிகளையுடைய அல்குலையும் உடைய தலைவியின் தோளொடு தோள் மாறுபடத்துயிலும், அரை நாள் இன்பத்தோடு, விழித்து, உறங்கி பெறும் இன்பம், இமையாமல் விழித்துப் பெறும் புத்தோள் உலகில் பெறும் இன்பம் ஆகிய இரண்டையும் ஒன்றாக வைத்து நிறைகண்டால், வினையொழித்துத் தலைவியின் தோளில் துயிலும் இன்பத்திற்கு இணையாகாது என்பதை,

**“பூப்போல் உண்கண் பொன்போல் மேனி**
**மாண்வரி அல்குல், குறுமகள்**
**தோள்மாறு படூஉம் வைகலொடு எமக்கே”   (குறுந்.101:4-6)**

என்ற பாடல் குறிப்பிடுகிறது. பொருளினும் காமம் வலியது என்பதை நெஞ்சத்தில் தோன்றிய உணர்வாகத் தலைவனின் பாடலின் வழி அறிய முடிகிறது. மேலும் தாம் விரும்பும் காதலியின் மெல்லிய தோள்களில் துயிலும் இனிமையை விட தாமரைக் கண்ணனின் உலகம் இனிமையானதோ! என்று தலைவன் உணர்கின்றான். இதனை வள்ளுவர்,

**“தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்**
**தாமரைக் கண்ணான் உலகு” (குறள்:1103)**

எனக் கூறுவதன்வழி காமத்தின் வலிமையை அறிய முடிகிறது.

தலைவன் தன் காதலியின் அழகினைக் கண்டு தன்னுள்ளே வியந்து,

**“திரை இமிழ் இன்இசை அளைஇ, அயலது**
**………………..**

**தொண்டி அன்ன பணைத் தோள்,**

**ஒண் தொடி அரிவை - என் நெஞ்சு கொண்டோளே" (ஐங்.171:1-4)**

என்கிறான். தலைவியுடன் இயற்கைப் புணர்ச்சிப் புணர்ந்து, தலைவியை ஆயத்தோடு அனுப்புகிறான். அவ்வாறு செல்லும் தலைவி என் நெஞ்சத்தை முழுமையாகக் கவர்ந்து கொண்டவள். கடலிசை போன்று இயற்கையான அழகும், மத்தளத்தின் இன்னிசை போன்று தலைவியால் புனையப்பட்ட அழகும் கொண்டவள். தொண்டிப் பட்டனம் போன்று பருத்த தோள்களையும் ஒளிமிக்க வளையல்களையும் உடையவள். ஒண்றொடி அரிவையே என் நெஞ்சம் கொண்டவளே என்று பாராட்டுகிறான். மேலும் இவ்வாறமைந்த தலைவியானவள் எனக்குக் கிடைத்தற்கரியவள் என்று இரங்குகிறான்.

இதனைப் புணர்ச்சி மகிழ்தலில் "கண்ணால் கண்டும், செவியால் கேட்டும், வாயால் சுவைத்தும், மூக்கால் நுகர்ந்தும், மெய்யால் தீண்டியும், நுகரப்படுகின்ற ஐம்புல இன்பங்களும் ஒளியுடன் கூடிய வளையல்களை அணிந்துள்ள இவ்வழகிய பெண்ணிடத்தே ஒருங்கே அமைந்திருக்கின்றனவே! அழகிய அணிகலன்கள் அணிந்த சிவந்த நிறமுடைய இப்பெண்ணிடத்தில் நான் இன்பம் நுகரும்தோறும் ஏற்படக்கூடிய இன்பமானது, அரிய நூல்களைக் கற்றுப்பின் மீண்டும் படிக்கப் படிக்க முன்பு தெரியாதிருந்தவையெல்லாம் புதிதுபுதிதாக அறிந்து கொள்வது போலல்லவா அமைந்திருக்கின்றது."[7] புணர்ச்சியால் அடையும் இன்பத்தையும், புணர்ச்சியின் போகத்தால் தலைவியை உயர்வாக வருணித்தலையும் பாடலால் அறியமுடிகிறது.

பாங்கற் கூட்டத்தின் பின்னர் தலைவியைக் கூடிய தலைவன் இப்பொழுது எனக்கு அருள் செய்தாய் எனினும் மடப்பமுடையாளே, பண்புகளை உடன்

கொண்டு, பனைபோலும் தோள்களையும் அழகிய நுதல்களையும் கொண்ட நின் தோழியுடன் வா என உரைத்தான் என்பதைக் கீழ்க்கண்ட பாடல் விளக்குகின்றது.

**''எமக்கு நயந்து அருளினை ஆயின் பணைத்தோள்**
**நல்நுதல் அரிவையொடு மென்மெல இயலி,**
**வந்திசின் வாழியோ, மடந்தை!-**
**தொண்டி அன்ன நின் பண்பு பல கொண்டே''  (ஐங்.175:1-4)**

என அமைந்த அடிகளின்படி "பாங்கற் கூட்டத்தினால் தலைவனுக்கு மெல்லிய அரும்பிய முலையுடைய தலைவியுடன் கூடும் வாய்ப்பு கிடைக்கின்றது. பாங்கன் தலைவனது காமம் புதுமையைக் காது கொடுத்துக் கேட்கும் செவியனாய் மேலும் சிறிது இடையூறும் செய்யாத தோழனாய்க் களவின்கண் வந்து செல்கின்றான்"[8] என்பர். அதுமட்டுமில்லாமல் தலைவன் தலைவியுடன் புணரும் வாய்ப்பை நல்கும் வாயிலாகவும் அமையக் காண்கிறோம். தலைவியின் நிழல் போன்றவளான தோழியைப் பாராட்டுவது தலைவியைப் பாராட்டுவதோடு ஒத்ததாக அமையும். தோழியின் தோளையும் நுதலையும் புகழ்ந்தான் தலைவன். களவுக் காலக் கூட்டத்திற்கும் களவுக் கற்பாக மாறுவதற்கும் தோழி துணை இன்றியமையாதது ஆதலின் அவள் நட்பும் அவனுக்கு இன்றியமையாததாகும்.

பொருளீட்டுதற் பொருட்டுப் பிரிந்துச் சென்ற தலைமகன் பொருளீட்டி மீண்டு வருகையில் தன் காதலியை எண்ணித் தன்னுள்ளே,

**''மயில்கள் ஆலக் குடிளை இரட்டும்**
**துறுகல் அடுக்கத்ததுவே - பணைத்தோள்**

**ஆய் தழை நுடங்கும் அல்குல்**

**காதலி உறையும் நனி நல் ஊரே" (ஐங்.291:1-4)**

என்று கூறினான். மூங்கில் போன்ற சிறந்தத் தோள்களையும், அழகிய தழைகளால் தொடுத்தமைந்த தழையுடை கிடந்து அசையும் அல்குலையும் உடைய என் காதலி வாழ்கின்ற மிக்க நலத்தாற் சிறந்த ஊர், மயில்கள் மகிழ்ந்து ஆட அவ்வாட்டத்திற்கு ஏற்பப் பேராந்தைகள் மாறிமாறி அலறுதற்கு இடனான தன் காதலி வாழும் ஊராதலின் தலைவன் அதனைச் சிறப்பித்தான். இப்பாடலில் பனைத்தோளையும் மெல்லிய ஆடை அணிந்து நுடங்கும் அல்குலையுமுடைய எம்தலைவி எனத் தலைவியையும் ஊர் சிறப்பினையும் தலைவன் தனக்குள்ளே கூறிக் கொள்வதாக அமைகிறது.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கிய தலைவன் உள்ளம் மகிழ்ந்துத் தன்னுள்ளே செல்லியது.

**"குன்ற நாடன் குன்றத்துக் கவா அன்**

**…………..**

**கண்போல் மலர்தலும் அரிது! இவள் -**

**தன் போல் சாயல் மஞ்ஞைக்கும் அரிதே" (ஐங்.299:1-4,5)**

இப்பாடலில் தலைவனுடன் இயற்கைப் புணர்ச்சிப் புணர்ந்து நீங்கும் தலைவி, வெள்ளம் போன்றத் தன் தோழியர் கூட்டத்துடன் நிற்கக் கண்ட தலைவன். அவள் கண்ணின் அழகிற்கு மலைச்சாரலின் கண் அமைந்தப் பசிய சுனையில் விரிந்த வாயையுடைய குவளை மலர்கள் தோற்கும் என்றும், அழகிய மயில்களும் தோற்கும் என்றும் பாராட்டிப் பெருமை கொள்கின்றான்.

தலைவி மீது கொண்ட மிகுதியான காதலால் தலைவன் குறித்த பருவத்திற்கு முன்பே வினையை முடித்துக் கொண்டு தலைவியை வந்தடைகின்றான். தலைவன் தலைவி மீது கொண்ட பேரன்பை,

**"வானம்பாடி வறம் களைந்து ஆனாது**
**அழி துளி தலைஇய புறவில், காண்வர**
**வானர மகளோ நீயே -**
**மாண் முலை அடைய முயங்கியோயே" (ஐங்.418:1-4)**

என்ற அடிகள் உணர்த்தும். மழைத்துளிகளை உணவாகக் கொள்ளும் வானம்பாடிப் பறவையின் வறுமையை அறவே ஒழித்தது, மழை இடைவிடாது பெய்த முல்லைக் காட்டினிடையே, அழகு மிகுமாறு காட்சியளித்து மாண்புற்ற முலைகள் அழுத்துமாறு என்னை முயக்கியவளே! இங்ஙனம் தோன்றி முயங்க நீலவானுலகில் வாழும் அரமங்கையருள் ஒருத்தியோ என தலைவன் வினவுகின்றான்.

தலைவியின் நினைவு தலைவனை வருத்தக் காண்பவை எல்லாம் அவள் உருவாகத் தோன்றுகின்றன. இப்பாடலால் தலைவனின் மாறாக் காதல் புலப்படுகிறது. மேலும் தூய மழைத்துளியை மட்டும் உண்டு உயிர்கொள்ளும் வானம்பாடிப் பறவையை இங்கு குறிப்பதன் மூலம், கவிஞர் தூய மழை நீருக்கு நிகராகத் தலைவியைக் காட்டுகின்றார். அவளை மட்டுமே நினைத்துக் காதலால் வாழும் தலைவன் வானம்பாடிப் பறவையாகக் குறிப்பதாகத் தோன்றுகிறது. பறவையின் வறுமை நீக்க வந்த மழையைப் போல தலைவன் விருப்பத்தை நிறைவேற்ற தலைவி மாய உருகொண்டு வந்ததாக எண்ணி அரமங்கையரில் ஒருத்தியோ நீ என்று வியந்து வினவுகின்றான். இவற்றுள் உளவியல் அடிப்படையில் "தமிழினம் காதல் நோக்கிற்றான் இயற்கைக்

கூறுகளை அணுகிற்று. விலங்குகளின் பறவைகளின் காதற் செய்கைகளிடையே தமிழ்மக்கள் தம் காதல் நினைவுகளைக் காண முயன்றனர்”[9] என தமிழ்க் காதலில் வ.சுப. மாணிக்கனாரின் அடிகளைப் போன்று தலைவன் தன் காதல் மிகுதியை வெளிப்படுத்துவதை அறியமுடிகிறது.

தலைவன் தலைவியைக் காண வருவதைச் சிறிது காலம் நிறுத்தி வைத்து, பின்பு மீண்டும் வந்தான். அதனால் ஊடல் கொண்ட தலைவியை ஊடல் நீங்கிப் புணர்ச்சிக்கு உடன் படச் செய்கிறான் தலைவன். அவை,

**“அணிமுகம் மதி ஏய்ப்ப, அம்மதியை நனி ஒய்க்கும்**
**மணி முகம் மாமழை, நின்றபின், ஒப்ப பின்னின்கண்**
**விரிநுண் நூல் சுற்றிய ஈர்இதழ் அலரி**
**அரவுக் கண் அணி உறழ் ஆரல் மீன்தகை ஒப்ப**
**.............**
**விரிந்து ஒலி கூந்தலாய் கண்டை எமக்குப்” (கலி.64:1-6)**

என்ற வரிகளில் தலைவியின் அழகிய முகம் மதியைப் போன்றது. மணிகள் விளங்குகின்ற தலைவியின் பின்னப்பட்ட கூந்தலானது முகத்துக்கு ஒப்பான சந்திரனைப் பொருந்தும் கரிய மேகத்தைப் போன்றது. தலைவி பின்னிய கூந்தலில் உள்ள நூலால் கட்டிய தேனால் ஈரமான இதழ்களை உடைய மலர்கள் பின்னலுக்கு ஒப்பான கரிய பாம்பினிடத்தே பொருந்தி அதன் கரிய நிறத்திற்கு மாறுபட்ட கார்த்திகை என்னும் விண்மீனைப் போன்று அமைந்துள்ளது. இத்தகைய இயல்புடைய மனத்தால் ஒப்புக் கொண்டவர்களை வருத்தத்தைச் செய்து விடும் தழைத்த கூந்தலை உடையவள் என்று கூறி முன்பு நிகழ்ந்த புணர்ச்சி நிலையினைத் தலைவன் எடுத்துக் கூறினான்.

தலைவியின் உடல் அமைப்பானது முழுவளர்ச்சி பெற்ற வடிவமைப்பைப் கொண்டிருக்கிறது. அகலமான அல்குல், தோள், கண் என மூன்றிடமும் பெருத்தும். நெற்றி, அடி, இடை என மூன்றிடமும் சிறுத்தும் காணப்படுவதாகச் சங்கப் பாடலடிகள் தலைவியின் உடலமைப்பை விளக்கிச் சொல்கின்றன. தலைவன் தலைவியோடு சேர்வதற்காக அவளுடைய உடல் வடிவமைப்பைப் புனைந்துரைக்கிறான். இவற்றின் மூலம் பெண்பாலின் உடலமைப்பில் தோள், அல்குல், மார்பு முதலியனப் பெருத்துக் காணப்படுவது பெண்களுக்கு இயற்கை அமைத்துக் கொடுத்த உடல் வடிவமைப்பு எனலாம். இதனை,

**“இகல்வேந்தன் சேனை இறுத்த வாய்போல**
**அகல் அல்குல், தோள், கண் என மூவழிப்பெருகி**
**நுதல்,அடி, நுசும்பு, என மூவழிச் சிறுகி,**
**கவலையால் காமனும் படைவீடு வனப்பினோடு**
**மலையொடு மார்பு அமைந்த செல்வன் அடியைத்**
**தலையினால் தொட்டு உற்றேன், சூள்” (கல்.108:1-6)**

என்ற பாடலடிகள் விளக்கி நிற்கின்றன. காமம் நுகர்வதற்குரியப் பருவம் இளமைப்பருவமாகும். அப்பருவக் காதலர்களின் உள்ளப் புணர்ச்சியானது உடற் புணர்ச்சிக்கு வழிவகுக்கும்.

**“அயத்து வளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன**
**நகைப் பொலிந்து இலக்கும் எயிறு கெழுதுவர் வாய்**
**ஆகத்து அரும்பிய முலையன், பணைத் தோள்**
**மாத் தாட் குவளை மலர் பிணைத்தன்ன**
**மா இதழ் மழைக் கண், மாஅயோளொடு**
**பேயும் அறியா மறை அமை புணர்ச்சி” (அகம்.62:1-6)**

என்ற பரணரின் பாடல்மூலம் தலைவியானவள் நீரில் வளரும் பைஞ்சாய்க் கோரையினது வேரின்மேலுள்ள தண்டினைப் போன்ற ஒளியாற் பொலிவுற்றுத்

திகழ்கின்ற பற்கள் பொருந்திய முலையினள். மூங்கில் போன்ற தோள்களையும் கருமையான தண்டினையுடைய குவளை மலர்களை ஒரு சேர இணைத்து வைத்தாற் போன்ற கரிய இமையினையுடைய குளிர்ச்சிப் பொருந்திய அழகிய கண்ணினைக் கொண்டவள். அத்தன்மையுடையாளுடன் பேயும் அறியாக் காலத்தே நிகழ்த்திய களவுப் புணர்ச்சியைத் தலைவன் எண்ணும் வழி பாலுறவு கொண்ட செய்தியானது அறியப்படுகிறது.

உள்ளப் புணர்ச்சிக்கு மறைவிடம் தேவையில்லை. பேயும் அறியா நடுயாமம் வேண்டியதில்லை. எனவே மேற்கண்ட பாடலின் வழி களவுப் புணர்ச்சியானது மெய்யுறு புணர்ச்சியையே சுட்டியதாகும். "இயற்கைப் புணர்ச்சியில் கூடுவது என்பது சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை என்பதையே இதுவரை கண்ட கருத்துக்கள் சுட்டிக்காட்டுகின்றன. இயற்கைப் புணர்ச்சியில் கூடிய பின் மீண்டும் மீண்டும் அவ்வின்பம் பெறத் தலைவன் விரும்புவான். தலைவியும் உடன்படவே செய்வாள். களவில் தொடரும் இவ்வுறவு கற்பில் சென்று முடிதலையே சங்க கால மக்கள் விரும்பினர்,"[10] பாடலில் 'பேயும் அறியா மறையமை புணர்ச்சி' எனக் களவுக்கால மெய்யுறுபுணர்ச்சியையே குறிப்பிடுகின்றது. நடுங்கும் துன்பம் தீர அனைத்து மார்பைத் தந்தவள் என அப்புணர்ச்சியானது இங்கு குறிப்பிடத்தக்கது.

**தலைவன் தலைவியுடன் இயற்கைப் புணர்ச்சிக் கொள்ளுதல்**

தலைவன் தலைவியுடன் கூடுவதை சங்க இலக்கிய நற்றிணைப் பாடலில்,

**"அல்கு படர் உழந்த அரி மதர் மழைக்கண்**
**பல் பூம் பகைத் தழை நுடங்கும் அல்குல்**

**திருமணி புரையும் மேனி மடவோள்**
**திண் தேர்ப் பொறையன் தொண்டி**
**தன் திறம் பெறுக, இவள் ஈன்ற தாயே!" (நற்.8:1-5)**

தலைவனும் தலைவியும் இயற்கைப் புணர்ச்சி கொண்டதைக் கூறுகிறது. தலைவியின் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த காலத்தில் தலைவியோடு பெரிதும் தலைவன் இன்பம் அடைந்தான். அதனால் தலைவியின் தாயை வாழ்த்தினான். அதாவது பொறையனின் தொண்டி நகர் எல்லா வளமும் பெறுவாளாக என்று கூறுகிறான் தலைவன். அசையாத உள்ளம் கொண்ட என்னைத் துன்பம் செய்தாள் என்று தலைவியைப் பற்றிக் கூறுகிறான். 'திருக்குறளில் பாலியல் எனும் நூலில் புணர்ச்சி மகிழ்தலில்' "அழகிய அணிகலன்கள் அணிந்த சிவந்த நிறமுடைய இப்பெண்ணிடத்தில் நான் இன்பம் நுகரும் தோறும், நுகரும் தோறும் ஏற்படக்கூடிய இன்பமானது, அரிய நூல்களைக் கற்றுப்பின் மீண்டும் படிக்கப்படிக்க முன்பு தெரியாதிருந்தவையெல்லாம் புதிதுபுதிதாக அறிந்து கொள்வது போலல்லவா அமைந்திருக்கிறது"[11] என தலைவியைப் புணரும் போது ஏற்படக்கூடிய இன்பத்தை, அரிய நூல்களுடன் ஒப்பிடுவதை அறியமுடிகிறது.

தலைவன் பகற்குறி வந்து ஒழுகும் நாளில் யாதோ ஒரு காரணத்தால் பிரிந்ததால் தலைவியின் நிலையறிந்து குறியிடத்து வந்து தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறியதை,

**"வேர்க் கொண்டு தூங்கும் கொழுஞ்சுளைப் பெரும்பழம்**
**குழவிச் சேதா மாந்தி, அயலாது**
**வேய்பயில் இறும்பின் ஆம்அறல் பருகும்**
**பெருங்கல் வேலிச் சிறுகுடி யாது" (நற்.213:3-6)**

எனும் இப்பாடல் உணர்த்துகின்றது. இளங்கன்றை உடைய சிவந்த பசு அருவி ஒலிக்கும் பெரிய மலைப்பக்கத்தை உடையது. அங்குப் பசுவின் கன்றினைக் காலில் கயிறால் பணித்துத் தாழ்ந்த மன்றம் போன்ற பலாமரம் இருக்கும். அப்பழத்தைப் பசு உண்ணும். உண்டு பின் அருகிலுள்ள மூங்கில் நெருங்கியமைந்த சிறிய மலையின் குளிர்ந்த நீரைப் பருகி நிற்கும். இப்படிப்பட்ட தன்மையை உடைய சிறுகுடி யாதோ எனத் தலைவன் வினவுவதாக உள்ளது. இது தலைவியை முன்பே இயற்கைப் புணர்ச்சியில் கூடி இன்புற்ற தலைவன் தினைப்புனத்தில் பகற்குறியாகக் கூடி தலைவியின் சிறுகுடியில் இரவுக்குறியிலும் கூடித் தலைவியை நுகர்ந்து மகிழ்வான் என்பதை உள்ளுறுத்தியுள்ளது. இயற்கைப் புணர்ச்சியில் புணர்ந்த தலைமகன் பிரிவச்சமும் வன்புறையும் கூறுவதாகப் பாடல் கூறுகிறது. பிரிவச்சம் வன்புறைப் பற்றி ந. சுப்புரெட்டியார் 'அகப்பொருள் நூலார்' பிரிதலைப் பிரிவச்சம் என்றும் வற்புறுத்தலை வன்புறை என்றும் வழங்குவார் என்கிறார்.

**"குவளை நாறும் குவை இருங் கூந்தல்**
**ஆம்பல் நாறும் தேம்பொதி துவர்வாய்க்**
**......................**
**யானே, குறுங்கால் அன்னம் குவவுமணல் சேக்கும்**
**கடல் சூழ் மண்டிலம் பெறினும்,**
**விடல் சூழலன் யான், நின்னுடை நட்பே"  (குறுந்.300:1-8)**

என்றுரைத்தான் தலைவன். இப்பாடலில் தலைவியின் கூந்தலில் குவளையின் இயல்பாகிய மணமும், வாயில் ஆம்பலின் இயல்பாகிய மணமும், உடல் முழுவதும் தாமரைக் கொங்கின் இயல்பாகிய மணமும், உள்ளமைக் குறிக்கப்பட்டது. தலைவன் தலைவியுடனான இயற்கைப் புணர்ச்சியின் பின்னர்

தலைவியிடம் நன்னிற்ப் பிரியேன். அஞ்சல் எனப் பிரிவச்சமும் வன்புறையும் கூறினான். தலைவி பிரிவு ஒன்று உண்டு போலும் என அஞ்சுவதாயினள். அது கண்டு, அவளைத் தேற்றி பிரிதலை நினைக்கிலேன் என வற்புறுத்திக் கூறினேன். கடல் சூழ் மண்டிலத்து, ஐம்பொறிகளாலும் இன்பம் துய்ததற்குரியப் பொருள் இவளன்றி வேறின்மையால் நின்னிற் பிரியேன் என்றான்.

மருதத்து அன்னப் பறவை, நெய்தல் மணற்பரப்பில் தங்கும் என்பதைத் காட்டி, நீ என் மனைக்கண் வதுவைக் கூடித் தங்குவாய் எனக் குறிப்பால் உணர்த்தினான். நீர்நிலையைச் சார்ந்த பகுதியில் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தமைத் தோன்ற நீர்ப் பூக்களாகியக் குவளை, ஆம்பல், தாமரை ஆகியவற்றைக் குறித்தான்.

புணர்ந்த இடத்தே இடந்தலைப்படும் தலைவன் தன்னுள்ளே மகிழ்ந்து கூறியதாக அமைந்த பாடலில்,

**“இலங்கு வளை தெளிர்ப்ப அலவன் ஆட்டி**
**முகம் புதை கதுப்பினள், இறைஞ்சி நின்றோளே**
**புலம்பு கொள் மாலை மறைய**
**நலம் கேழ் ஆகம் நல்குவள் எனக்கே” (ஐங்.197:1-4)**

என்பதாகும். கடற்கரையில் மணலைத் துளைத்து உறையும் நண்டுகள் காலால் மணலைக் குளைத்து வெருவிக் கடல் நீரில் புகுவதற்கு விரைந்து செல்லும். அவ்வாறு அஞ்சி ஓடும் நண்டுகளை மேலும் அச்சுறுத்தற் பொருட்டுத் தன் வளையலை ஒலித்து விளையாடுகின்றார். நெய்தல் நிலத் தலைவி. ஆயினும் அவள் அடிக்கடி தலைவனின் வருகையை எதிர்நோக்கி காத்திருக்கிறாள். தலைவனைத் தொலைவில் கண்டதும் நாணித் தலை குனிந்து தன் முகத்தைத்

அடர்ந்த கூந்தலில் மறைத்துக் கொள்கிறாள். அவள் நிற்கின்ற நிலையின் தோற்றத்தைக் கண்டு மாலைப் பொழுது மறைந்ததும் தலைவியின் இனிய முயக்கம் தனக்குக் கிடைக்கும் என தலைவன் எண்ணுவதைக் காண முடிகிறது. இடந்தலைப்பாட்டிற்குப் பின்பு தலைவன், தலைவி என இருவரும் கூடுதல் உண்டு என்பதை மேற்கண்ட பாடல் வழி அறிய முடிகிறது. "தலைவன் தலைவி உள்ளம் புணர்ந்தபின் உடற்புணர்ச்சிக்கு அவாவுதல் முறையே மனம் ஒன்றிய காதலோர் உடல் ஒன்றுதற்குத் தக்கத் தனியிடம் தேர்வர். இடம் வாய்ப்பின் இன்பப்பாயல் கொள்ளப் பின் வாங்கார். பெற்றோரைக் கலந்து மேல்செய்வன செய்வோம் என்னும் அறிவு ஓடார். மண் சூழலினும், கடல் பொங்கினும், மலைப் பெயரினும், விண் வீழினும், அரசு விதிப்பினும், மக்கள் எதிர்ப்பினும், வருவது வருக என்று அச்சம் அறியார்."[12] என மேற்கண்ட செய்திகளின்படி இயற்கைப் புணாச்சியில் கூட விளையும் போது எதிர்தோன்றும் அனைத்துச் செயல்களும் தவிடுபொடியாவதை அறியலாம்.

பகற்குறியிடையே தலைவன் தலைவியை எதிர்பார்த்திருக்கும் போது அவனது கண்படாமல் மறைந்து வந்த தலைவி தலைவனின் கண்களைத் தன் கையால் விளையாடும் வகையாகப் பொத்தினாள். அதற்குத் தலைவன்,

**"சிலம்பு கமழ் காந்தள் நறுங் குலை அன்ன**
**நலம் பெறு கையின் என் கண் புதைத்தோயே**
**பாயல் இன் துணை ஆகிய பணைத் தோள்**
**தோகை மாட்சிய மடந்தை!**
**நீ அலது உளரே" (ஐங்.293:1-5)**

என்றான். மலைப்பக்கம் முழுவதும் இனிய மணம் கமழும் காந்தனின் நறிய பூங்கொத்தினைப் போன்று அழகாற் சிறந்த நின் கைகளினால் என் கண்களைப் பொத்தியவளே! என் நெஞ்சியில் இருந்து என்றும் நீங்காது அமா்ந்திருப்போா், படுக்கையின் கண்ணே இனியத் துணையாகிய மூங்கில் போன்ற மென்மை கொண்ட நின்னையன்றி என் கண்களைப் பொத்தி விளையாடும் உரிமையைப் பெற்றாா் பிறா் யாா் உளா் சொல் எனக் கூறுகிறான்.

இவ்வாறு பகலில் கூடும் தலைவனும் தலைவியும் அந்நாள் முழுவதும் அகமகிழ்ந்து சோலையிடையே புணா்ந்து இன்புற்றனா். இதே கருத்தினைப் பரிபாடலில் காணலாம். அவை,

**“ஆராக் காமம், ஆர் பொழிற் பாயல்**
**வரையகத்து, இயைக்கும் வரையா நுகர்ச்சி” (பரி.9:40-41)**

அனுபவித்து அறியாத காம இன்பத்தை மலைச் சாரலில் நிறைந்த சோலைகளில் உள்ள மலா்ப்படுக்கையில் ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் காதலோடுகூடி இன்பம் பெறுகின்றனா். என்ற ஐங்குறுநூறு பாடலுடன் பரிபாடல் ஒத்திருப்பது இங்கு சிறப்புக்குறியதாகும்.

தலைவன் தன் காமத்தினைத் தலைவியிடம் கூறலாமா, அல்லது கூறாது விட்டு விடலாமா என எண்ணி முடிவில் அடங்க இயலாது, தோழி வாயிலாக வெளிப்படுத்துகிறான். அவ்வாறு வெளிப்படுத்திய நன்மொழி மீது தலைவி பெரிதும் விருப்பம் கொண்டாள். வில்லினைப் போன்ற அழகிய வளைவினையுடைய உள்ளே பரல்கள் இடப் பெற்றச் சிலம்பினை ஒலிக்கவிடாது அடங்கினாள். வண்டுகள் பின்னே தொடா்ந்து வர, குளிா்ந்த மலா்களைச் சூடிக் கொண்டாள். காா் காலத்து மலா்கின்ற மலா்களின்

மணங்கமழும் கூந்தலுடன் நல்ல வேலைப்பாடு அமைந்த நுண்ணிய நூலால் ஆன தூய்மையான ஆடையைத் தன் உடலில் உடுத்திக் கொண்டாள். இளமுகில் சூழ்ந்த மடப்பத்தையுடைய மலையிடத்து மயில் போல அஞ்சி அஞ்சி நடந்து வந்து ஊர் உறங்கும் நள்ளிரவில் தலைவனைத் தழுவி மகிழ்ச்சி அடைந்து மீண்டும் போயினள் என்பதை,

**"கரந்த காமம் கைந்நிறுக் கல்லாது**
**நயந்துநாம் விட்ட நல்மொழி நம்பி**
**அரைநாள் யாமத்து விழுமழை கரத்து**
**கார்விரை கமழும் கூந்தல், தூவினை**
**நுண்நூல் ஆகம் பொருந்தினள், வெற்பின்**
**இளமழை சூழ்ந்த மடமயில் போல" (அகம்.198:4-7)**

எனப் பரணர் பாடலின் மூலம் தலைவன் தன்னுள் எண்ணியவனாக இன்புற்று திரும்புகிறான். மேற்கண்ட அடிகளின்வழி தோழியின் உதவியுடன் தலைவனுக்கு இரவுக்குறி நிகழ்கின்றது. தலைவன் அடிக்கடி இரவுக்குறியிடையீட்டில் தலைவியுடன் கூடுவதுண்டு. சில நேரங்களில் இரவுக்குறியிடை வரும் தலைவனுக்கு வழியில் துன்பம் நேரும் என்று 'கருதி இரவுக் குறி வேண்டா, பகற்குறிவா' என்று தோழி அறிவுறுத்துதலைக் காணலாம். "இயற்கைப் புணர்ச்சியில் மன விருப்பம் கொண்ட இருவரும் சந்தித்துக் கூடும் போதும் காவலின் மிகுதியால் தலைவியைச் சந்திக்க முடியாமல் மன வேதனையால் கலங்கும் போதும் காம இன்பம் பெறுவதன் காரணமாகத் திருமணத்தை நீட்டிக்கும் போதும் தொல்காப்பியம் மற்றும் திருக்குறளில் ஒற்றுமையான கருத்துக்களே காணப்படுகின்றன."[13] இதனை மேற்கண்ட பாடலால் அறியலாம்.

**தலைவன் காமத்தால் நெஞ்சுக்கு உரைத்தல்**

பொருள்தேடச் சென்ற தலைவனின் மனம் தலைவியின் நினைவால் வருந்துகிறது. தலைவியைப் பிரிந்து வந்தமைக்காகத் துயரப்படுகிறது. பொருள் தேடும் வேகத்தில் நீண்ட தூரம் தலைவியை விட்டுப் பிரிந்துவந்து இடைச்சுரத்தில் நிற்கும்போது தலைவியைப் பற்றிய நினைவுகள் தலைவனை முன்னோக்கிச் செல்லவிடாமல் தடை செய்கின்றன. பொருள் தேடி முடிக்கவிடாமல் நிலை தடுமாறச் செய்யும் காதல் நினைவுகள் ஒருபுறம் தனது விருப்பத்தை நிறைவேற்ற முடியாமல் இடைநிற்கும் தூரம் மறுபுறம் இவற்றிற்கு இடையில் நின்று தலைவன் போராடுவதை,

**“பசி சுட முடங்கிய பைங் கட் செந்நாய்**
**மாயா வேட்டம் போகிய கணவன்**
**பொய்யா மரபின் பிணவு நினைத்து இரங்கும்**
**விருந்தின் வெங் காட்டு வருந்தும் யாமே”  (நற்.103:6-9)**

எனும் பாடல் புலப்படுத்துகின்றது. ஆண் செந்நாய் பெண் செந்நாயின் பசி வருத்தத்தைப் போக்க வேட்டைக்குச் செல்கிறது. அங்கு நின்றுக் கொண்டு பெண் செந்நாயுடன் புணர்ந்துப் பெற்ற இன்பத்தை நினைத்து வருந்தி நிற்கிறது. தலைவனும் தலைவியின் வாழ்வை வளப்படுத்தவே பொருள்வயிற் பிரிகிறான். தலைவிக்காகப் பிரிந்தத் தலைவன் அவளை நினைத்தே தன் செயலினைப் பாதியில் விட்டு விட்டுத் திரும்ப எண்ணுகிறான். தலைவனின் உள்ளம் மனத்தடுமாற்றத்திற்கும் போராட்டத்திற்கும் உள்ளாகின்றது.

தலைவன் கடுமையான வழியில் பெறும் பொருளின்பத்திலும் தலைவியினை நுகர்ந்துப் பெறும் இன்பம் எளிது என நெஞ்சுக்கு உரைப்பதை,

**“இறந்து செய் பொருளும் இன்பம் தரும் எனின்**
**இளமையின் சிறந்த வளமையும் இல்லை**
**இளமை கழிந்த பின்றை வளமை**
**காமம் தருதலும் இன்றே அதனால்**
**நில்லாப் பொருட் பிணிச் சேறி**
**வல்லே - நெஞ்சம்! - வாய்க்க நின் வினையே!”   (நற்.126:7-12)**

என்பதில் அறியலாம். இளமையைப் பொருள் ஈட்டுவதில் கழித்தால் பொருளால் நேரும் வளமை, முதுமையில் காம இன்பத்தைத் தராது என பாடலில் உணர்த்துவதில் இருந்து இளமை, பொருள் ஆகியவற்றின் நிலையில்லாதத் தன்மையினை அறியலாம். தேடும் பொருளானது நிலைப் பெறாதத் தன்மையினை உடையதாகும். நிலைத்த இன்பத்தினைத் தராது. எனவே இளமைகழியும் முன்னே காம இன்பம் நுகர்தல் சிறந்தது என்பதை அறியமுடிகிறது.

வினைவயிற் பிரிந்து செல்லக் கருதும் தலைமகன் தன் நெஞ்சிடம் கூறுவதாக அமைந்துள்ள பாடலில்,

**“கயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇயர்**
**பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை**
**அருஞ்சுரம் செல்வோர்க்கு அல்குநிழல் ஆகும்**
**……………..**
**சென்று சேண் அகறல் வல்லிய நீயே”   (நற்.137:6-10)**

மென்மையான தலையை உடைய இளைய பிடியானையின் பசியைப் போக்ககுவதற்காகக் களிற்றியானை ஓமை மரத்தை முறித்துத் தள்ளும். அவ்வாறு முறிந்து வளைந்த அடிப்பகுதியை உடைய மரம். பாலை வழியே செல்வார்க்கு நிழலாக அமையும் என்றது. பொருளின் பொருட்டுத் தலைவனால்

பிரியப் பெறும் தலைவி நலன் கெடப் பசலை பரந்து ஓமை மரம் வாடுவதுப் போல வாடி நிற்பாள். புசலைப் பரந்து மேனி வேறுபட்டுவாடும் அதலால் காதலியைக் கைவிட்டமை கொடியதென்பதையும் பிடியின் பசி தணியுமாறு தலைவியின் காம நோயைத் தணித்தல் வேண்டும் என்று உவமையாணும் தலைவன் தன் கருத்தினையுரைத்தான்.

தலைவன் தன் நெஞ்சிடம் பொருள் ஈட்டுவதற்கு உடன்பட்ட என்னோடு நொந்து கொள்ளும் என் மனமே! உடல் மேலேறிப் படர்ந்த தேமலையும், முதிர்ச்சிப் பெறாத இளமையான முலைகளை உடைய என் காதலி நான் அவள் அருகில் பிரியாதிருந்த கோடைப் பருவத்திலும் நடுங்குபவள். குளிர்ந்த புதரிடத்திலே உள்ள இண்டங்கொடியின் அழகிய தளிர்கள் வாடுவதால், குளிரில் தன்னுடையச் சிறகை ஒடுக்கி வருந்தியிருக்கும் வெண்மையான கொக்கினைக் கண்ட வேட்டுவன் அதனுடையக் கால்கட்டை அவிழ்த்து விடுவான். அத்தகைய கார் காலத்திலும், பகல் எது? இரவு எது? என அறியமுடியாதபடி மாறுபட்டு இருக்கக்கூடிய கூதிர்க்காலத்திலும், வாடைக் காற்றோடு வீசக்கூடிய பெரிய முன்பணிக்காலத்திலும், பின்பனிக்காலத்திலும் தனிமையில் இருந்து என்ன துன்பம் அடைவாளோ என வருந்துகின்றேன் என்கிறான் என்பதைக் கீழ்க்கண்ட பாடல் சுட்டுகின்றது.

**“மாரி நின்ற, மையல் அற்சிரம்**
**யாம் தன் உழையம் ஆகவும், தானே**
**எதிர்த்த தித்தி முற்றா முலையள்**
**கோடைத் திங்களும் பனிப்போள்**
**வாடைப் பெரும் பனிக்கு என்னள்கொல்? எனவே”   (நற்.3125-9)**

வருத்தம் அறியாமல் என்னோடு மாறுபடுகின்றாய் என் நெஞ்சமே! என யாரும் பொறுத்துக்கொள்ளும் கோடை வெப்பத்தைப் பொறுத்துக் கொள்ளக் கூடியவள், யாறும் பொறுக்க மாட்டாத குளிர்காலத்தை எவ்வாறு பொறுத்துக் கொள்வாள் என்றும் தனியாக இருந்து என்ன பாடுபடுவாளோ என்று தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறி வருந்தியது.

பொருள்வயிற் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்துக்கண் ஆற்றானாய்த் தன்னுள்ளே

**“அருஞ் சுரக் கவலை வருதலின், வருந்திய**
**நமக்கும் அரிய ஆயின, அமைத் தோள்**
**மாண்புடைக் குறுமகள் நீங்கி**
**யாங்கு வந்தனள்கொல்? அளியள் தானே”  (நற்.352:9-12)**

என்கிறான். ஆறலைக் கள்வர் கொன்றொழித்த பிணங்களைக் கழுகு உண்ணாதவாறு வெருட்டி நரி உண்டு பின் வாய் வறண்டு நீரற்ற வெறும் புலத்தை நீருள்ள இடமென நினைத்து ஏமாந்தது. வருந்தும் சுரம் என்றதன் மூலம் தலைவியைப் பசலை உண்ணாதவாறு தலைவன் நுகர்ந்து இல்லறம் செய்ய வேண்டும் என்பதையும் பொருள் பெறாது வருந்துதலைக் குறிக்கும் விதமாகப் பாடல் அமைகிறது.

காமத்தால் ஏற்பட்ட வலியைத் தலைவன் தன் நெஞ்சுக்கு உரைப்பதை,

**“நல் உரை இகந்து, புல் உரை தாஅய்**
**பெயல் நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல**
**உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி**
**அரிது அவாவுற்றனை – நெஞ்சே ! நன்றும்**
**பெரிதால் அம்ம நின்பூசல். உயர் கோட்டு**

**மகவுடை மந்தி போல**

**அகன்உறத் தழீஇக் கேட்குறர்ப் பெறினே"  (குறுந்.29:1-7)**

என்னும் குறுந்தொகைப் பாடல் புலப்படுத்துகின்றது. நற்சொல்லாகிய புகழுரை நீங்கி, புல்லிய பழிச்சொற்கள் பரவி மழை நீரை ஏற்றுக் கொண்ட சுடப்படாத பசுமண்ணாலாகிய பாண்டத்தைப் போல பசுமண் கலம் அழிதல் ஒருதலை. ஆதலின் காமத்தால் தன் நெஞ்சு அழிதலும் ஒருதலை என்றுத் தலைவன் வருந்தினான். உயர்ந்த மரக்கிளையில் தன் குட்டியால் அடிவயிற்சில் தழுவப் பெற்ற தாய்க் குரங்கைப் போல மனம் விரும்பி என் கருத்தைக் கேட்டு நிறைவேற்றுகின்ற தலைவியைப் பெறுவதாயின் உனது போராட்டமானது பெருமிதமானதேயாகும்.

பொருள் தேடி வருதலின் பொருட்டாகத் தலைவியைப் பிரிந்து வேற்றுநாடு செல்லக் கருதினான் தலைவன். அதனை எண்ணி,

**"புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅத்து**
**இறவுச்சினை அன்ன நளிகனி உதிர**
**விடுகனை வில்லொடு பற்றிக் கோடு இவர்பு**
**...............**
**மணிமிடை அல்குல் மடந்தை"  (குறுந்.274:1-7)**

என வருந்தினான். காட்டின் வெம்மையும் தலைவியின் இனிய உறவையும் நினைத்தபடி சென்றால் இனிதாகும் எனத் தன் நெஞ்சிற்குக் கூறினான். நெஞ்சே! பொன்னோடு மணிகளையும் சேர்த்துச் செய்யப் பெற்ற அணிகளை அணிந்திருக்கும் அல்குல் தடத்தினை உடையவள் தலைவி. அவளுடைய அழகிய முலைகளையுடைய மார்பினை நினைத்துச் சென்றோமானால், பொருள் பிரிவு என்பது தெரியாமல் அனைத்தும் இனிதாக அமையும். பாடலில் பொருள்

வேண்டிச் செல்பவன் என்பதைக் குறிப்பிட உகாய்க்கனி நீலமணியினைப் போன்றதாகவும் தலைவியின் இடையணி பொன்னொடு மாணிக்கமணிமிடைந்தாற் போன்றதாகவும் உவமிக்கப்பட்டுள்ளது.

தலைவியை எண்ணி காமத்தால் மிகுந்த வேதனை அடைந்தத் தலைவன் தன்னுள்ளே சொல்லி இன்புற்றான்.

**“வேயெனத் திரண்ட தோள் வெளிகமழ் வணர்ஜம்பால்**
**கோடியென மின்னென அணங்கென யாதொன்றும்**
**தெரிகல்லா இடையின் கண் கண் கவர்பு – ஒருக்கு ஓட**
**தேம்பாய அவிழ் நீலத்து அலர் வென்ற அமர் உண் கண்” (கலி.57:1-4)**

இப்பாடலில் தலைவியின் இடை, கண், மார்பு, குழல் போன்றவை அழகில் சிறந்தவையாகத் தலைவனால் கருதப்படுகின்றன. தலைவியின் அழகான இவ்வனப்பு தலைவனைச் செயலிழக்கச் செய்கின்றது. இவற்றை மனம் விட்டு புலம்புகின்றான் எனத் தலைவனின் இயல்பு கூறப்படுகிறது. மேலும் தலைவன் நான் இத்தகையவற்றைக் கூறத் தலைகுனிந்து தரையைப் பார்த்து ஏதோ ஒன்றை நினைவிற்குக் கொண்டு வந்து சிந்திப்பவள் போலத் தன் தோழியரைப் பார்த்தவாறு என் மனத்தைச் சிறைப்பிடித்துக் கொண்டுத் தன் வீடு நோக்கிச் சென்றாள் எனத் தலைவன் கூறுகிறான்.

அழகுடன் விளங்கும் குடிகளையுடைய மழைவளம் குன்றியச் சிற்றூரின் கண்ணே, பூக்களால் அழகுச் செய்யப்பட்ட தழைத்து வளர்ந்துத் தாழ்ந்து கிடக்கும் மேகம் போன்ற கருமையான கூந்தலையும், செறிவாக அணியப் பெற்ற வளையல்கள் கொண்ட முன்கையினையும் உடைய நம் காதலியின் அறிவும் கலங்கியத் துன்பமும் நிறைந்தப் பார்வையினைத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகின்றான்.

**“அன்பும், மடனும், சாயலும், இயல்பும்**
**என்பு நெகிழ்க்கும் கிளவியும், பிறவும்**
**ஒன்றுபடு கொள்கையொடு ஓராங்கு முயங்கி**
**இன்றே இவணம் ஆகி, நாளை” (அகம்.225:1-4)**

அன்பும் மடனும் சாயலும் ஒழுக்கமும் கொண்டு நம்மால் தழுவப்பெற்று இன்புற்றிருக்கும் நம் தலைவி, நாளை நம் பிரிவால் பூப்புனையாதக் கூந்தலும், வளை கழலும் கையும், கலங்கிய பார்வையும், அதனால் நம்மீது வெறுப்பும் உடையவளாய் விளங்குவாளே! எனத் தம்முடைய பிரிவால் மிகுந்தத் துன்பத்தை அடைந்தத் தலைவியை எண்ணித் தலைவன் வருந்தி நெஞ்சிற்குக் கூறுவதாக இப்பாடல் அமைகிறது.

**வினையின் காரணமாகப் பிரியும் தலைவன் தலைவியை எண்ணி வருந்துதல்**

பொருள்தேடச் சென்ற தலைவனால் பிரியப்பெறும் தலைவி நலன் கெட உடல் முழுவதும் பசலை படர்ந்து தலைவன் துய்க்க வேண்டிய தலைவியின் அழகிய நலனை அழிந்தது. இதனை.

**“கை கவர் முயக்கம் மெய் உறத் திருகி**
**ஏங்கு உயிர்ப்பட்ட வீங்கு முறை ஆகும்**
**......................**
**ஆன் வழிப் பருநர் தோண்டிய பத்தல்**
**யானை இன நிரை வெளவும்**
**கானம் திண்ணிய மாலை போன்றிசினே” (நற்.240:2-6)**

ஆநிரையை உண்டிக்கும் பத்தலின் நீரை யானை வெளவும் என்பது தலைவன் கொள்ள வேண்டி தலைவியின் நலனையெல்லாம் பசலையுண் டொழிக்கும் தன்மையினை உணர்த்துகிறது. “இளமைக் காலத்துத்தான் இன்பம் துய்க்க முடியும் அக்காலத்தே தான் உலைவின்றித் தாழாது உஞற்றிப்

பொருளீட்ட முடியும். முதிர்ந்தப் பருவத்தில் இன்பத்திற்கும் உழைப்பிற்கும் உடல் இடங்கொடாது. இன்பமோ இளமைக்கு உரியது. செல்வமோ இளமையொடு முதுமைக்கும் வேண்டுவது. முதுமை அளவுக்கு வேண்டிய செல்வ வைப்பை முன்னினைந்து இளமையிலேயே ஈட்டித் தொகுக்க வேண்டும். என் செய்வார்கள் இல்லறப் புதியர்கள் இளமைப் பருவமானது ஒவ்வொரு நாளும் கரைந்துக் கொண்டே செல்லும்"[14] அவ்வாரானக் காலத்தில் பொருள் வயிற் பிரிவால் பெற முடியாத உடலின்பத்தை எண்ணித் தலைவியும், தலைவனும் அடையும் துன்பத்தை உளவியல் நிலைகளுடன் காணமுடிகிறது.

நற்றிணைப் பாடல்கள் சில தகவலை வெளிப்படுத்தும் மௌனத்தைக் கொண்டதாக அமைந்துள்ளன. தலைவனின் பிரிவினைக் குறிப்பால் அறிந்த தலைவி தலைவனின் மார்பின் மீது சாய்ந்து வருந்துவதாகக் கூறப்படுகிறது.

**"வேண்டாமையின் மென்மெல வந்து**
**வினவலும் தகைத்தலும் செல்லாள் ஆகி**
**……………..**
**ஈர் மண் செய்கை நீர் படு பசுங் கலம்**
**பெரு மழைப் பெயற்கு ஏற்றாங்கு, எம்**
**பொருள் மலி நெஞ்சம் புணர்ந்து உவந்தன்றே"  (நற்.308:1-11)**

எனும் பாடலில் தலைவனின் செலவுப் பற்றி வினவாமலும், அதனைத் தடுக்காமலும் அவன் மார்பில் சாய்ந்து கலங்குவதை மட்டும் செய்கிறாள். இதனால் அவள் துயரறிந்த செலவினைத் தலைவன் தவிர்ப்பதாக இப்பாடல் அமைந்துள்ளது. இங்குத் தலைவி செலவு குறித்து எவ்விதமாகவும் உரையாடாது அவன் மார்பில் சாய்ந்து கலங்குவதன் மூலம் தனது மௌனத்தால் துயரை வெளிப்படுத்தித் தலைவனைச் செலவழுங்குவித்தலை

வழி மௌனத்தை, தன் துயரை வெளிப்படுத்தும் ஊடகமாகப் பயன்படுத்திய தன்மை புலனாகிறது. இங்கு மௌனம் மார்பைத் தழுவிக் கலக்கும் சைகைகளுடன் இணைந்து செயல்படுகிறது.

தலைவியோடு களவுறவில் சில காலம் திளைத்து, அவளை மணந்து கொள்ளக் கருதியபோது, வினை காரணமாக வேற்றுநாடு செல்ல வேண்டியவனானான் தலைவன். அவன் வினை முடித்து மீண்டு வரும்போது வாடைக் காற்று வீசக் கண்டு, அதனை விளித்துத் தலைவன் சொல்வதை,

**"ஓம்புமதி வாழியோ – வாடை பாம்பின்**
**தூங்குதோல் கடுக்கும் தூவெள் அருவிக்**
**கல் உயர் நண்ணியதுவே"   (குறுந்.235:1-3)**

எனும் மேற்கண்ட பாடலில் வாடைக்காற்றே! நீ வாழ்க! நல்லவளாகிய என் தலைவியின் ஊரானது நெல்லிக்காய்களை மரையின் கூட்டம் உண்கின்ற முற்றங்களைக் கொண்ட புல் வேய்ந்த குடிசைகளை உடையதாகும். தொங்கும் பாம்பினது தோலைப் போலத் தோற்றமும் தூய வெள்ளிய அருவியையுடைய மலையுச்சியின் அருகேயுள்ளதும் அதுவாகும். எனவே நீ அங்கு சென்று, தலைவியை வருத்தாமல் காப்பாயாக! என வாடையால் துன்பப்பட்ட தலைவியை எண்ணி உரைக்கின்றான்.

தலைவன் திரும்பி வருவதாகக் கூறிய பருவம் வரவும் தலைவியை எண்ணித் துயர் கொள்ளுதல் இப்பாடலில் வெளிப்படுகிறது.

**"வானக மீனின் விளங்கித் தோன்றும்,**
**அருங் கடிக் காப்பின் அஞ்சு வரு, மூதூர்த்**
**திருநகர் அடங்கிய மாசு இல் கற்பின்**

**அரி மதர் மழைக் கண், அமை புரை பணைத்தோள்**
**அணங்குசால், அரிவையைக் காண்குவம்''  (அகம்.114:11-15)**

விண்ணைத் தீண்டி நிற்கும் மதிலிடத்து நெடிய கொடிகள் அசைந்தாடும் அம்மதிலின்கண் இராப்பொழுதைக் காத்திருப்போர் ஏற்றி வைத்த நெருங்கிய விளக்குகள் விண்ணிடைத் தோன்றும் மீன்கள் போல விளங்கித் தோன்றும். அணுகுதற்குரிய காவல் மிகுந்த பகைவர்க்கு அச்சத்தினைத் தரும் முதுமையான ஊரிலுள்ள செல்வம் மிக்க மாளிகையிடத்து, தம்மை வெறுத்து வாழ்ந்துக் கொண்டிருக்கும் அடங்கிய குற்றமற்ற கற்பினையும். செவ்வரி படர்ந்து மதர்த்த குளிர்ச்சிப் பொருந்தியக் கண்ணினையும், மூங்கிலை ஒத்த பருத்த தோளினையும் உடைய தெய்வ மகள் போல் விளங்கும் நம் தலைவியை அவள் துன்பம் நீங்குமாறு காண்போம் என்கின்றான்.

வினையின் காரணமாகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்று தன் வினைமுடித்துக் குதிரை பூட்டிய தேரில் வருகிறான். அவ்வாறு வருகையில் தன் தேரின் ஓசை அந்நிலத்தில் கூடியிருக்கும் மான் கூட்டத்திற்கு எந்த விதத்திலும் துன்பம் தருவதாக இருத்தல் கூடாது என்று எண்ணுகிறான். அதனால் தன் தேர்ப்பாகனிடம் தேரை ஒலியின்றிச் செலுத்துவாயாக என்பதை,

**''வானம் வாய்ப்பக் கவினி, கானம்**
**…………..**
**கணைக் கால் அம்பிணைக் காமர் புணர்நிலை**
**கடுமான் தேர்ஒலி கேட்பின்**
**நடுநாட் கூட்டம் ஆகலும் உண்டே''  (அகம்.134:1-12-14)**

எனும் பாடல் வழி அறியலாம். வாழையின் பெரிய பூவினது மடல்கள் முறையாக மலர்ந்து உதிர எஞ்சிய குவிந்த மொட்டும் வீழ்ந்துவிட்ட குலையைப் போன்ற முறுக்குடைய கொம்புகளைக் கொண்ட ஆண்மான்களோடு பெண்மாண்கள் இந்நாளில் விரும்பிக் கூடியிருக்கும். விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டிய தேரின் ஓசையைால் மான்களின் இன்ப மகிழ்ச்சி நீடிக்காது அல்லவா? நிறைந்தச் சூலையுடையக் கரிய மேகங்கள் கார்காலத்தைத் தோற்றுவித்தன. வானம் பொய்க்காது மழையைப் பொழிந்தமையால் கானகம் செழிப்புற்று அழகுப் பெற்றது. நீலமணிபோன்ற காயா மலரின் அழகிய மலர்களின் இடையிடையே சிவந்த முதுகினையுடைய இந்திரகோபப் பூச்சிகள் பரவி ஊர்ந்து திரிந்தன.

முல்லைக் கொடியிலிருந்து அதிக மலர்கள் பரவலாக உதிர்ந்து கிடந்தன. சிறந்த நிலமாகிய முல்லை நிலப்பரப்பு ஓவியம் வல்லோனால் தீட்டப்பட்ட எழில் ஓவியம் போலக் காட்சி தந்தது. அத்தகைய முல்லை நிலத்தின் தான நடை விளங்குமாறு தாவிச் செல்லும் நடையைச் செருக்குடைய குதிரைகளின் தாவும் இணையொத்த கால்கள் மெல்ல நடந்தோடும்படி தாற்றுக்கோலால் இடித்தலை மறந்து செலுத்துவாயாக என்று தேர்ப்பாகனிடம் அன்புடன் தலைவன் கூறுகிறான். இப்பாடலின் வாயிலாக, உயர்திணைகளைக் கூட மதிக்காத இன்றைய உலகை ஒப்புநோக்கலாம். அஃறிணை உயிர்களையும், மதித்துப் போற்றிய தலைவனின் உயர்ந்த எண்ணத்தையும் தலைவி மீது அதிக அன்பு கொண்டிருப்பதையும், தலைவியின் எண்ணத்தை நிறைவேற்றத் துடிப்பதையும் பாடலின் வாயிலாக அறியமுடிகிறது.

**காமத்தால் வருந்திய தலைவன் அதனைப் பாகனிடம் உரைத்தல்**

வினைமுடிந்து மீள்கின்ற தலைவன் தேர்ப்பாகனிடம் இதுவரை பொழியாமலிருந்த மேகங்கள், காயா மரங்கள் நிறைந்த மலையிடத்தே இடையிடை சரக்கொன்றைகள் மலர்ந்தது போல மலையின் பிளவுகள் எல்லாம் ஒளியில் புலப்படுமாறு மின்னி நம் மாமைநிறமுள்ள என் தலைவி தங்கியிருந்த இடம் நோக்கிச் சென்று இப்போது மழையைப் பொழியத் தொடங்கிவிட்டன என்கின்றான்.

**"காயாங் குன்றத்துக் கொன்றை போல**
**மா மலை விடர் அகம் விளங்க மின்னி**
**மாயோள் இருந்த தேஎம் நோக்கி**
**வியல் இரு விசும்பு அகம் புதையப் பாஅய்**
**பெயல் தொடங்கினவே பெய்யா வானம்"  (நற்.371:1-5)**

பாடலில் தேர்ந்த அணிகலன்களை அணிந்த நம் தலைவி அவளுடைய ஒளியுடைய வளையல்கள் கழன்று விழ ஏக்கமுற்று அழத்தொடங்கினாள். அதற்கு எதிராக முழங்குகின்ற இடியொலிக்கும் இரவுப் பொழுதில் கோவலர்கள் தம் புல்லாங்குழலை இசைக்கத் தொடங்கினர். ஆதலால் தேரை விரைந்துச் செலுத்துக எனப் பாகனிடம் கூறினான்.

தலைவன் தலைவியிடம் கொண்ட காதலுறவு பொருந்தாது என்று கடிந்து கூறிய பாங்கனிடம், தலைவன் காதல் நோயின் தன்மையைப் புலப்படுத்துகிறான். பாறைமேல் உள்ள வெண்ணெயைக் கதிரவனின் வெம்மைத் தாக்குகிறது. அவ்வெண்ணெயைக் கையற்ற ஊமையன் ஒருவன் கண்போல் கருதிக் காக்கின்ற தன்மைபோல் தலைவன் காணப்படுகிறான். அவ்வெண்ணெய் அவன் காவலுக்குட்பட்டு நில்லாமல் உருகி வழிவதைப்போல், இக்காமநோய்

தலைவன் உடல் முழுவதும் பரவி, அவன் உயிரை வருத்துகிறது. இனியும் உயிரைக் காப்பது அரிய செயல் என்கிறான் தலைவன்.

**"இடிக்கும் கேளிர்! நும்குறை ஆக**
**நிறுக்கல் ஆற்றினோ நன்றுமன் தில்ல**
**ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்**
**கைஇல் ஊமன் கண்ணின் காக்கும்!**
**வெண்ணெய் உணங்கல் போல**
**பரந்தன்று இந்நோய் நோன்றுகொளற்க அரிதே" (குறுந்.58:1-6)**

உருகி வழிகின்ற வெண்ணெயைக் கையற்றவன் என்பதால் கையால் அள்ளிக் காக்கவும் முடியவில்லை. வாய்பேச முடியாதவன் என்பதால் பிறரை உதவிக்கு அழைக்கவும் முடியவில்லை. கண்ணால் மட்டும் காக்க முடியுமா? முடியாது. அதுபோல, தலைவனின் காமநோயும் அவன் உயிரை அழிக்கிறது. இதனைத் தடுத்தற்கான முயற்சியைப் பாங்கன் மேற்கொள்ள வேண்டும் என்றுத் தலைவன் பாங்கனிடம் கூறுகிறான்.

இயற்கைப் புணர்ச்சியால் தலைவியுடன் கூடி வரும் தலைவனின் மேனியில் தோன்றியப் புது மாற்றங்களைப் பாங்கன் காண்கிறான். இந்த மாற்றம் எதனால் வந்ததென் வினவுகிறான். அவனுக்குத் தலைவன்,

**"சிறுவெள் அரவின் அவ்வரிக் குருளை**
**கானயானை அணங்கி யாஅங்கு**
**களையல், முளைவாள் எயிற்றள்**
**வளையுடைக் கையள் - எம் வணங்கி யோளே" (குறுந்.119:1-4)**

என்கிறான். மேற்கண்ட பாடலால் சிறியதும் வெள்ளியதுமான பாம்பினது அழகிய வரிகளையுடையக் குட்டியும் காட்டு யானையை வருத்தமுறச் செய்யும்.

அதனைப் போலவே இளையோளும் மூங்கில் முளையைப் போன்ற ஒள்ளியப் பற்களை உடையவளும், வளைகள் விளங்கும் கைகளை உடையவளுமான ஒருத்தி எம்மைத் தாக்கி வருத்தமுறுமாறுச் செய்தாள் எனத் தன்னைப் பற்றியக் காமநோயைப் பாம்புக் கடியின் நஞ்சுப் பற்றியேறுங் கொடுமைக்கு ஒப்பிடுவதைக் காணமுடிகிறது.

தலைவனைப் பற்றிய காமநோயைக் கண்டு, அது அவனது ஏற்றத்திற்குத் தகுதியானதன்று என்கின்றான் பாங்கன். அவனுக்குத் தலைவன் காமம் என்பது தெய்வீகமானது என்றுப் பாங்கனிடம் தெரிவுபடுத்துகிறான்.

**“காமம் காமம் என்ப காமம்**
**அணங்கும் பிணியும் அன்றே நுணங்கிக்**
**கடுத்தலும் தணிதலும் இன்றே யானை**
**குளகு மென்று ஆள்மதம் போல்ப்**
**பாணியும் உடைத்து, அது காணுநர்ப் பெறினே”  (குறுந்.136:1-3)**

‘காமம் காமம்’ என்று உலகினர் குறைக் கூறிப் பேசுவார்கள். அந்தக் காமமானது. கண்டவரைத் தாக்கி வருத்தும் ஆற்றலுடைய அணங்கும் அன்று. பற்றிப் பிணி செய்யும் நோயும் அன்று. நுண்ணிதாகிப் பின்னால் பெரிதாதல் என்பதும் அதனிடம் இல்லை. பெரிதானது பின்னர் தணிந்து போதலென்பதும் அதனியல்பு அன்று. யானையானது தழையுணவை மென்று தின்று அதனால் மதங் கொள்வதைப் போன்றதொரு செவ்வியையும் கண்டு மகிழ்வாரைப் பெற்றால் அது தானே அடைவதற்குரியதாகும். இங்குக் காமம் என்பது இயற்கையே தோன்றி எழுவது என்றுப் பாங்கனிடம் தலைவன் கூறினான்.

குறித்த பருவம் தவறினால் தலைவியின் நிலை என்ன என்று பொருள் முற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகற்கு உரைத்தது.

**“அஞ்சுவது அறியாது அமர்துனை தழீஇ**
**நெஞ்சு நப்பிரிந்தன்று : ஆயினும் எஞ்சிய**
**கைபிணி நெகிழின் அ.்.து எவனோ? நன்றும்**
**சேய அம்ம, இருவாம் இடையே :**
**மாக் கடல் திரையின் முழங்கி, வலன் ஏர்பு**
**கோட்புலி வழங்கும் சோலை**
**எனைத்து என்று எண்ணுகோ - முயங்கிடை மலைவே”** **(குறுந்.237:1-7)**

இதில் குறிப்பிட்டுள்ளப் பாடலின்படி வழித்துன்பத்திற்கு அஞ்சாததாய், விரும்பிய துணையைத் தழுவும் பொருட்டு நமது நெஞ்சமும் நம்மை விட்டுப் போய் விட்டது. அதற்குப் பின்னரும் அஞ்சிய கையால் தழுவ நேர்ந்தால் என்னப் பயனோ? இருவருக்கும் இடையில் உள்ள இடைவெளி அதிகம். தலைவியுடன் கூடுவதற்கு இடையிலே உள்ளத் தடையாகியக் கடலின் அலைபோல் ஆர்ப்பரித்து, வலப்பக்கம் பாய்ந்துக் கொல்லும் புலிகள் நடமாடும் காடுகள் எத்தனை என எண்ணுவேன் எனப் பாகனிடம் கூறினான்.

வினைமுற்றி மீண்டும் வரும் முல்லைநிலத் தலைமகன் பாகனுக்குத் தான் தலைவியின் மேல் கொண்ட அன்பினை விவரிக்கிறான். இதனை,

**“பசுமுகைத் தாது நாறும் நறுநுதல்**
**அரிவை தோள் - அணைத் துஞ்சிக்**
**கழிந்த நாள் இவண் வாழும் நானே”** **(குறுந்.323:5-7)**

என்ற பதடி வைகலார் பாடலால் அறியமுடிகிறது. தலைவன் தலைவியோடு இணைந்து வாழும் நாளே அவனுடைய வாழ் நாளாகும். அவளைப் பிரிந்து வாழ்கின்ற நாட்கள் எனது வாழ்வில் எந்தப் பயனும் இல்லாதக் கடுக்காயைப் போன்றது என்கிறான். ஆழந்து நோக்கினால் தலைவியோடு வாழ்வது

உயிருள்ள நாட்களாகவும் மற்றைய நாட்களை உயிர் இருந்தும் உயிரற்ற உடலோடு வாழ்வதாகத் தலைவன் குறிப்பில் இருந்து அறியமுடியகிறது.

குறித்த நேரத்தில் தலைவியின் காமத்தைத் திரித்த தலைவன் அதற்கு உதவியாக விரைவாகத் தேரைச் செலுத்திய பாங்கனைப் பாராட்டி,

**“சேயாறு செல்வாம் ஆயின், இடர் இன்று**
**களைகலக் காமம், பெருந்தோட்டு என்று**
**……………………**
**இன்று தந்தனை தேரோ**
**நோய் உழந்து உறைவியை நல்கலானே” (குறுந்.400:1-4)**

என்று கூறினான். கரம்பை நிலத்தில் புதிய வழியினை உண்டாக்கி, காமநோயால் வருந்திய தலைவியோடு தான் சேர்ந்ததால் அவள் இறந்துபடாமல் தடுத்தற்குக் காரணமான தேர்ப்பாகனைத் தலைவன், பாராட்டுவதாக அமைகிறது. காமத்தால் உணர்ச்சி மிகுந்த தன்மை வெளிப்படுவதை மேற்கூறிய பாடலால் அறியமுடிகிறது.

இயற்கைப் புணர்ச்சியின் பின்னர் தலைவன் தான் அரிதிலே பிரிந்த தலைவியின் நினைவாக உறக்கமின்றி வருந்தியது கண்டு அதற்குக் காரணம் வினவிய தோழனுக்குத் தலைவன்,

**“ஒண் தொடி அரிவை கொண்டனள், நெஞ்சே**
**வண்டு இமிர் பனித் துறைத் தொண்டி ஆங்கண்**
**உரவுக் கடல் ஒலித் திரை போல**
**இரவி னானும் துயில் அறியேனே” (ஐங்.172:1-4)**

என்கிறான். மேற்கண்ட பாடலின் வாயிலாக இரவுப் பொழுதில் உறக்கம் இன்றி இருப்பதற்குக் கடலலை இடையறாது ஒலித்தலின் இரவில் மட்டுமன்றிப்

பகலிலும் உறங்காததற்குக் காரணம் ஒளிவீசும் தொடியணிந்த பெண்ணால் தன் தூக்கம் தொலைந்துவிட்டதாகத் தலைவன் கூறுகின்றான். வண்டுகள் ஒலித்தற்கு இடமான குளிர்ந்த துறைகளை உடைய தொண்டியின் கண், பரந்துப்பட்ட கடலின் ஒலிமிக்க திரைகள் போல, நான் இரவுப் பொழுதில் உறங்குதலை அறியேன் என்றான் தலைவன். இதனைப் புலவர் குழந்தைத் தொல்காப்பியர் காலத்தமிழர் எனும் நூலில் "இன்று ஒருத்தி என்னை வருத்தினாள். நான் அவளைக் காதலித்தேன். நீ வேண்டுமானால் சென்றுபார் அவளை : அதன் பின் இவ்வாறு சொல்லமாட்டாய்"[15] எனப் பாகனிடம் தலைவன் கூறுவது மேற்கண்ட பாடலைப் போல ஒத்திருப்பதைக் காணலாம். தலைவனின் துன்ப நிலையினை அறிந்த பாங்கன் அவனை மீண்டும் தலைவியோடு கூட்டுவிக்க முற்படுகிறான். காமப் புணர்ச்சியை அடுத்து நிகழும் இடந்தலைப்பாடு பெரும்பாலும் பாங்கற் கூட்டத்தினாலேயே நிகழ்வதாகும்.

தலைவனின் உள்ளத்து உணர்வை உணர்ந்த உற்ற நண்பனாகத் தேர்ப்பாகன் விளங்குகின்றான். வினையின் பொருட்டுப் பிரிந்த தலைவன் தன் வினை சிறந்த முறையில் செவ்வனே முடிந்த பின்னர் தலைவியை விரைந்து அடையவும் அவள் வருத்தம் தீர்க்கவும் எண்ணுகிறான். கார் காலத்தில் மீள்வேன் என்று கூறிய தலைவனின் வரவை எதிர்நோக்கி மிகுந்த வருத்தத்துடன் காத்திருக்கும் தலைவியின் நிலையை முழுமையாய் உணர்கிறான். உடல் மெலிந்துத் தலைவனின் வரவை எதிர்நோக்கித் தனது உயிரைத் தாங்கித் தலைவி இருப்பாள் என்று அவள் மீது அதிகக் காதல் கொண்ட தலைவன் அவனது துன்பத்தைக் களையும் பொருட்டுக் காற்றினும் வேகமாகத் தேரைச் செலுத்தமாறுக் கூறுகின்றான். இதனை,

**“கடும் பரி நெடுந் தேர்க் கால் வல் புரவி**
**நெடுங் கொடி முல்லையொடு தளவ மலர் உதிர**
**விரையுபு கடைஇ நாம் சொல்லின்**
**நிரை வளை முன் கை வருந்தலோ இலளே” (ஐங்.422:1-4)**

எனும் பாடல் குறிப்பிடுகின்றது. தலைவியைச் சேர்ந்தால் முன் கைகளில் வளை அணிந்த எம் காதலி வருத்தம் தவிர்ப்பாள் என்று தலைவன் கூறுகிறான். தலைவன் பாகனுக்கு நீ விரைந்து தேரைச் செலுத்தாவிடில் தலைவி வருத்தத்தில் மெலிவாள் அவள் கைவளைக் கழன்று ஓடும் நிலையினை அடைவாள். எனவே அவளுடையத் துன்பத்தை நீக்கும் பொருட்டு விரைந்துத் தேரைச் செலுத்துவாயாக என்றுக் கூறுகிறான். இதனால் தலைவன் தலைவி மீது கொண்டுள்ள காதலை உணரமுடிகின்றது.

இயற்கைப் புணர்ச்சிப் புணர்ந்து நீங்கும் தலைவன் தலைவியை நினைத்து ஏங்கும் செயல்களைப் பின்வரும் பாடல் விளக்குகின்றது.

**“சேரி விலைமாறு கூறலின், மனைய**
**வளிஅறி ஒமலி குரைப்ப, வெரீகிய**
**மதர்கயல் மலைப்பின் அன்னகண் எமக்கு,**
**இதைமுயல் புனவன் புகைநிழல் கடுக்கும்” (அகம்.140:8-10)**

தலைவியின் கண்களால் தனக்கு நோய் உண்டானது எனப் பாங்கனிடம் புலம்பியத் தலைவன் பெறற்கரும் பொருளும், பொன்னும் கொடுத்தாலும் தலைவி தன்னால் பெற்றுக் கொள்வதற்கு அரியவள் என எண்ணி ஓங்கினான். கருநிறமான பழஞ் சேற்றிலே அழுந்திய வண்டின் துன்பம் தீருமாறு, வருந்தி இழுக்கும் அவள் தந்தையின் கையில் கிடைத்த எருது பெறும் துன்பம் போல வருந்தி எமக்கு என் நெஞ்சமும் உயிரும் துன்பம் தரும் நோய் ஆயின. நாய்

குரைத்ததைக் கேட்டுப் பயந்து மருண்டு நோக்கிய தலைவியின் கயல்மீன் போன்றக் கண்களைக் கண்டதால் தனக்கு நோய் உண்டானதாகக் கூறிப் புலம்புகிறான் தலைவன்.

**காமநோயால் தலைவன் துன்புறுதல்**

பெண்ணால் தன்னுடைய அறிவு, வலிமை, மனம் முதலானவற்றை ஆண் இழப்பதாகக் கூறுவதை,

**"மால்வரை இழிதரும் தூவெள் அருவி**
**..................**
**சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறுமகள்**
**நீர் ஓரன்ன சாயல்**
**தீ ஓரன்ன என் உரன் அவித்தன்றே" (குறுந்.95:1-4)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. நெருப்புப் போன்ற மனவலிமையும், அறிவையும் உடைய தன்னை நீர் போன்ற சாயல் கொண்ட பெண் ஒருத்தி அழித்துவிட்டதாக ஆண் உணர்கிறான்.

பொருள் முற்றிப் புகுந்த தலைமகன் 'எம்மை நினைத்தும் அறிதிரே' என்ற தோழிக்குச் சொல்லியதை,

**"உள்ளினென் அல்லனோ யானே? உள்ளி,**
**நினைந்தனென் அல்லெனோ பெரிதே? நினைந்து**
**மருண்டனென் அல்லனோ, உலகத்துப் பண்பே?**
**நீடிய மராஅத்த கோடு தோய் மலிர் நிறை**
**இறைத்து உணச் சென்று அற்றாங்கு**
**அனைப் பெருங்காமம் ஈண்டு கடைக் கொள்வே" (குறுந்.99:1-6)**

என்பதில் அறியலாம். நான் உன்னை நினைத்தேன் அல்லவா மீண்டும், மீண்டும் பெரிதாக நினைத்தேன் அல்லவா? வாழ்வு சிறக்கப் பொருளீட்டலை எண்ணிடும்

உலக நடைமுறையைக் கருத்தில் கொண்டு, திரும்ப இயலாமல் மயங்கினேன் அல்லவா! பெரிதாக உயர்ந்து வளர்ந்துள்ளக் கடம்ப மரக் கிளையைத் தழுவிச் சென்றப் பெருவெள்ளம், பின்னர் கையால் இறைத்துப் பருகுமாறுச் சிறுத்து இறுதியில் முற்றிலும் இல்லாமல் போவதுபோலக் காம நோயானது மிகப் பெரிதாக இருந்தது பின் தன்னுள் காமமானது இல்லாது போனது எனத் தலைவன் உணர்கிறான். "காமப்பசியை நோய் எனப் பரிபாடலில் வர்ணிக்கப்படுகிறது நம்மைப் பிணித்திருப்பதால் காமம் பசியைப் பிணி எனப் புறநானூறு கூறுகிறது. பசிப்பணி மருத்துவன் இல்லம் அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே என்கிறது புறம்"[16] ஆனால் தலைவன் தலைவியுடன் கூடி சேர்ந்து இன்புற்றவுடன் காம நோயானது என்னுள் இல்லாமல் போனது எனத் தலைவன் தனது கூற்றால் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது.

தலைவியின் இச்செறிப்பை அறிந்தத் தலைவன் தங்களது நட்பின் திறத்தைத் தோழியிடம்,

**''எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்**
**மை ஈர் ஓதி மாஅயோள் வயின்**
**இன்றை அன்ன நட்பின் இந்நோய்**
**இறுமுறை என ஒன்று இன்றி**
**மறுமை உலகத்து மன்னுதல் பெறினே''  (குறுந்.199:4-8)**

என்கிறான். தலைவன் தன் தலைவியிடம் கொண்ட நட்பினால் உண்டான காமநோயைப் போக்குகின்ற மருந்து இவ்வுலகத்தில் கிடைக்காவிட்டால் மறுமை உலகத்தில் அம்மருந்தை அடைவது உறுதி என்கிறான். தலைவியால் உண்டான நோய்க்குத் தலைவியே மருந்து. தங்களது நட்பினால் உடலாலும், உள்ளத்தாலும் கலந்து மறுமையினும் இணைவோம் என்று தம்

நெஞ்சிற்கு உறுதியளிக்கிறான். தலைவனின் எண்ணத்தை அன்றே ஃப்ராய்ட் "உடலுக்கும் உள்ளத்துக்கும் இடையிலான இணைநிலைவாதம் தத்துவத்தின் தொடர்ச்சியாகும். உடலும் உள்ளமும் ஒன்றையொன்றுச் சார்ந்து இருக்க வேண்டியுள்ளதால் ஒன்றின் மீது இன்னொன்று 'பாதிப்பை' ஏற்படுத்துவதைத் தவிர்க்க முடியாது அதனால் உடலையோ உள்ளத்தையோ தனி நிலையில் பார்க்க முடியவில்லை."[17] என உடலுக்கும் உள்ளத்துககுமான இணைப்பினை உளவியலுடன் இணைத்துக் காணமுடிகிறது.

பெண்ணால் ஆண் தன் வாழ்நாளை இழப்பதாக உணர்கிறான். அதனை,

**"கேளிர்! வாழியோ, கேளிர் நாளும் என்**
**நெஞ்சுபிணிக் கொண்ட அம்சில் ஓதிப்**
**பெருந்தோட் குறுமகள் சிறுமெல் ஆகம்**
**ஒரு நாள் புணரப் புணரின்**
**அரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே" (குறுந்.280:1-5)**

என்ற அடிகள் உரைக்கின்றன. என் நெஞ்சத்தைப் பிணித்தலைக் கொண்ட அழகிய சிலவாகிய கூந்தலையும், பருத்த தோள்களையும் உடைய இளைய தலைவியின் இளைய மெல்லிய மார்பு, ஒருநாள் என்னை வலிய அணைக்க, நான் அணைக்கப் பெற்றால், நான் அரைநாட் பொழுது உயிர் வாழ்தலையும் விரும்பேன். காமத்தின் உணர்வு மிகுதியால் ஆண் மனவலிமை, காலம், அறிவு முதலானவற்றை இழக்க நேரிடுகிறது.

**காமத்தின் மிகுதியால் தலைவன் மடலேறுதல்**

தலைவன் தலைவியை அடைய மேற்கொள்ளும் வழிமுறைகளில் ஒன்று மடல் ஏறுதல். "விரும்பிய காதலியை அடைய முடியாத காதலன் அவளை

அடைவதற்காக, பனை ஓலைக் கருக்கால் நின்று அலமருவதும் அதன் வழி அனைவரும் அறியத் தன் காதலைப் புலப்படுத்தும் பண்டைய பழக்கம்."[18] இவ்வழக்கம் மடலேறுதல் எனப் பெறும் தான் காதலித்த தலைவியை அடையாத நிலையில் தலைவன் ஒருவன் பனை மடலால் ஆன குதிரையின் மீது ஏறுதல் மடலேறுதல் எனக் கூறுவர்.

காமம் மிகுந்த தலைவன், பனை மடலால் குதிரையை, அமைத்து அதன் மீது ஏறி, தான் விரும்பிய காதலியின் ஓவியத்தையுடையக் கொடியைக் கையில் ஏந்தி, ஊரார் அறிய வீதிகளில் வருதல் மடலேறுதல் என்பர்.

மடலேறுதல் பற்றித் திருவள்ளுவர் களவியலில், நாணுத்துறவுரைத்தல் என்ற அதிகாரத்தில் கூறியுள்ளார். தலைவன் தன் காதலியை அடைய முடியாது காம நோயினால் துன்புற்று, துணையின்றி மடலூர்தலே சிறந்தது என எண்ணுகிறான். இதனை,

**"காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்**
**மடலல்லது இல்லை வலி" (குறள்.1131)**

என்ற குறள்வழி அறியலாம். பெண்கள் மடலேறுவது சங்க காலத்தில் இல்லை. ஆண்கள் மட்டுமே மடலேறியதாக இலக்கியங்களும், இலக்கணங்களும் காட்டுகின்றன. "தமிழ் இலக்கியங்களில் மடலேறுதல் என்பது பெண்களுக்கு இல்லாத ஒன்று. நீக்கப்பட்ட ஒன்று"[19] என்கிறார் ச.அகத்தியலிங்கம்.

**"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்**
**பெண்ணின் பெருந்தக்கது இல்" (குறள்.1137)**

என்று கடல்போல் காமம் மிகுந்திருந்தாலும் மடலேற எண்ணாத பெண்கள் போலச் சிறந்தப் பெருமையுடையவர்கள் இல்லை. திருக்குறளும்,

**“எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்**

**பொற்புடை நெறிமை இன்மை யான”  (தொல்.பொருள்.981)**

எந்த வகையான நிலத்திலும் பெண்கள் மடலேறுதல் இல்லை. அது சிற்புடைய ஒழுக்கம் இல்லை எனத் தொல்காப்பியமும் கூறுகின்றன.

**“ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்”  (தொல்.அகம்.997)**

எனப் பெருந்திணைக்கு இலக்கணமாகவும் மடலேறுதல் குறிப்பிடப்படுகிறது. மடலேறுதல் பற்றி நம்பியகப்பொருள்,

**“இரந்து குறைப் பெறாது வருந்திய கிழவோன்**

**மடலே பொருளென மதித்தலும்”  (நம்பியகப்பொருள்.145)**

என்கின்றது. தோழி இசையாதபொழுது, தலைவன் மடலேறி உயிர் துறக்க முடிவு செய்தலும், தோழியிடம் நேரே மடலேறுவேன் என்று கூறாது உலகின் மேல்வைத்து, ஏமாற்றத்தில் இவ்வாறு செய்யத் துணிவதும் பின் மடலேறுவேன் எனக் கூறுவதும் உண்டு என நம்பியகப்பொருள் புலப்படுத்துகிறது.

மடலேறுதல், பற்றிக் குறிப்பிடப்பெறும் பாடல்கள் தலைவன் கூற்றாக மிகைப்பட அமைந்துள்ளன. தொல்காப்பியத்தில்,

**“தோழி நீக்கலின் ஆகிய நிலைமையும் நோக்கி**

**மடல்மா கூறும் இடனுமாகுண்டை”  (தொல்.களவியல்.11)**

தோழி குறை மறுத்துழி, தலைவியுடன் தலைவன் சந்திப்பை நீக்கத் தலைவன் மடல் ஏறுவேன் என்றுக் கூறுவதாகக் குறிப்பிடப்படுகின்றது.

**புதிய மரபு**

தலைவன் மடலேறுவதாகக் கூறுவது சங்கக் கால மரபு திருமங்கையாழ்வார் இம்மரபினை மாற்றித் தலைவி மடலேறுவதாகக் கூறுகிறார்.

இவர் பெரிய திருமடல், சிறிய திருமடல் போன்றப் பிரபந்தங்களில், பெண்கள் இறைவனைக் கணவனாக அடையும் பொருட்டு மடலூர்வதாகக் கூறுகிறார்.

**“அன்னநடையார் அலர் ஏச ஆடவர் மேல்**
**மன்னும் மடல் ஊரார் என்பதோர் வாசகமும்**
**தென்னுரையாற் கேட்டறிவதுண்டு அதனையாம் தெளியோம்**
**மன்னும் வடநெறியே வேண்டினோம்”  (பெரிய திருமடல்)**

“பெண்கள் மடலேறுதல் இல்லை என்ற மரபினைப் புறக்கணித்து பிற நெறிகொண்டு மகளிர் மடலேறுவதாகக் காட்டும் புதிய நெறி மரபு மாற்றம் செய்துள்ளார்”[20] என்று கூறுகிறார்.

**காம மிகுதியால் தலைவன் மடலேறுதல்**

பாங்கியல் உதவுதல் மறுக்கப்பட்ட தலைவன் அவள் கேட்குமாறு, தானே தன் முயற்சியால் தலைவியை அடையப் போதுவதாகக் கூறுகிறான். நீ உதவாமற் போயின், யான் மன்றிலே மடன்மா ஊர்ந்து வந்து அவளை அடைவேன் என்றான்.

**“அமிழ் துபொதி செந்தா அச்சவந்த நிவப்பின்**
**வார்ந்து இலங்கு வைஎயிற்றுச் சின்மொழி அரிவையைப்**
**,,,,,,,,,,,,,**
**பல்லோர் கூற, யா அம் நாணுகம் சிறிதே”  (குறுந்.14:1-3)**

அமுதத்தைப் பொதிந்ததாக இலங்கும் செவ்விய நாவானது அச்சும்படியாக முளைத்தெழுந்த, நேராக விளங்குகின்ற கூர்மையான பற்களையும் சிலவாகிய சொற்களையும் உடையவள் தலைவி, அவளை நான் மடன்மாஏறி வருதலாற் பேறுவேனாக அவளைக் களவிலே இயற்கைப் புணர்ச்சி பெற்றாற்போலப் பெறுவேனாக! அதனை இவ்வூரிலுள்ளார் யாவரும் அறிவாராக!

அறிந்த அவர்கள் வீதியிலே இந்நல்லாளின் கணவன் இவன் எனப் பலறும் கூறுவர். அதனைக் கேட்டு யாமும் சிறிதே நாணுவோம்! எனத் தன் காதலை உணராமல் மறுத்துத் தன்னை மடலேறச் செய்ததனை நினைத்துக் கூறுகிறாள்.

காமநோயானது முதிர்வுற்றால் ஆடவர் மடலைக் குதிரையாகக் கொண்டு இரங்கத் தக்க மடலூர்தலையும் மேற்கொள்வர் என்பதனை,

**"மாஎன மடலும் ஊர்ப: பூ எனக்**
**குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப :**
**மறுகின் ஆர்க்கவும் படுப :**
**பிறிதும் ஆகுப – காமம் காழ்க் கொளினே"  (குறுந்.17:1-4)**

எனும் பாடலடி வழி அறியலாம். காமம் என்ற நோய் மரத்தில் தோன்றிய விதையை உட்கொள்பவர், அறிவு பிறிதாகி மயங்குவர், காமம் என்ற மரம் எட்டி மரம் போன்றது. இம்மரத்தின் விதை, உண்டார் மனத்தைக் கலங்கச் செய்யும் தன்மையுடையதாகும். காமம் என்ற நோய் மரத்தின் விதையை நான் உட்கொண்டுள்ளேன். இதற்கு மருந்து நின் தோழியின் தோள் நலம் உண்டலே, அது கிடைக்காது போயின் சாவேன் எனத் தோழியை அச்சுறுத்துவதாகத் தலைவன் கூற்று குறிக்கின்றது.

மடலேறுவதே தனக்கு உற்றதோர் வழியாகத் தோற்றுவதாகத் தோழியிடம்,

**"காலையும், பகலும், கையறு மாலையும்**
**ஊர்துஞ்சு யாமமும், விடியலும், என்று இப்**
**பொழுது இடை தெரியின் பொய்யே காமம்**
**மா என மடலொடு மறுகில் தோன்றித்**

**தெற்றெனத் தூற்றலும் பழியே**

**வாழ்தலும் பழியே – பிரிவு தலைவரினே'' (குறுந்.32:2-6)**

என்கிறான். தலைவன் கூறும் பாடலில் காம கூட்டத்திற்குப் பொழுதுகளாலும், இடத்தாலும், பிரிவு ஏற்பட்டுத் துன்பம் நேர்ந்த பிறகு குதிரை எனப் பார்ப்பவர்கள் இகழ்ந்து கூறுமாறு ஊரார் அறிய தெருக்களில் பலர் முன் தோன்றித் தன் குறையைக் கூறுவேன். தலைவனுடைய மடலேறும் செயல் தலைவிக்கும் பழிச்சொல்லைத் தருவதாகும். தன் குறையைக் கூறாமல் உயிரோடு வாழ்ந்தாலும் அதுப் பழியைத் தரும் எனத் தலைவன் கூறுகின்றான். ஊர் மக்களால் தூற்றப்படும் மடலேறுதல் என்பது தனக்கு இனிதாகும் என உணர்த்துகிறான்.

தலைவன் நாணம் நீங்கித் தலைவியை அடையத் துணிந்ததை

**''பழிபடர் உள்நோய் வழிவழி சிறப்ப**
**இன்னள் செய்தது இது என, முன் நின்று**
**அவள் பழி நுவலும், இவ்வூர்**
**ஆங்கு உணர்ந்தமையின், ஈங்கு ஏகுமார் உளேனே'' (குறுந்.173:4-7)**

என்பதில் அறியலாம். ஆவிரைப் பூக்களைக் கட்டி மாலையாகக் சூடியப் பனங்கருக்குக் குதிரை மீதேறி பலரும் 'இன்ன செயல் இவளால் நேர்ந்தது' எனத் தலைவியைப் பழிக்கத் தலைவன் நாணம் நீங்கி மடலேறத் துணிந்தான். பழிச் செயலைத் தலைவன் செய்ய முற்படுகின்றான். களவுக் கூட்டத்தை நீட்டிக்கத் தலைவன் மேற்கொள்ளும் முறையே மடலேறுவதாகக் குறிப்பிடுவர். தலைவன் மடலேறுதலில் பழிச்சொல் தலைவிக்குக் வருதல் குறிப்பிடத்தக்கது.

தோழியால் குறைமறுக்கப்பட்ட தலைமகன், தன் நெஞ்சிற்குக் கூறுவதை,

**“வெள் என்பு அணிந்து, பிறர் எள்ளத் தோன்றி**
**ஒருநாள் மருங்கில் பெரு நாண் நீங்கி**
**தெருவின் இயலவும் தருவது கொல்லோ**
**கலிழ்கவின் அசைநடைப் பேதை”** **(குறுந்.182:3-7)**

என்னும் பாடல் உணர்த்துகின்றது. தலைவன் தன் நாணத்தை விட்டுப் பிறர் இகழுமாறு தெருவில் மடலேறத் துணிந்ததாகக் கூறப்பட்டுள்ளது. பனைமடற்கருக்கிற்கு மணியும் எலும்பும் சூடியதாகவும், தன் காம உணர்வினைத் தலைவி அறியாதவளாக உள்ளாள் எனத் தலைவன் வேதனையுடன் புலம்புவதாகப் பாடல் அமைந்துள்ளது.

தலைவன் தான் எவ்வாறு மடல் ஊர்ந்தான் என்பதையும், தலைவியை அடைந்த முறையையும் தன் பாங்கனிடம் கூறுகிறான். தன்னை அடக்கும் அங்குசத்தையும் மீறிக் கொண்டு யானை மத வெறியுடன் கிளம்புவது போல் என் நெஞ்சம் என் ஏவுதலைச் செய்யவில்லை. தான் விரும்பியவாறு செயல்பட்டது. இதனை,

**“எழில் மருப்பு எழில் வேவழம் இகுதரு கடாத்தால்**
**தோழில் மாறித் தலைவைத்த தோட்டி கைநிமிர்ந்தாங்கு**
**அறிவும், நம் அறிவு ஆய்ந்த அடக்கமும், நாணொரு”** **(கலி.138:1-3)**

என்ற பாடல் மூலம்என் நெஞ்சத்திற்குக் காவலாக நிற்கும் அறிவு, அடக்கம் நாணம் எல்லாம் என்னில் இல்லாமல் கைகடந்து போய்விட்டன. அத்தகு மன உணர்வில் தான் மடலேறுதல் நிகழ்ந்தது என்கிறான் தலைவன். மேலும் அறிவும், அடக்கமும் நாணமும் என்னுள் இல்லாமல் வறிதாகிப் போனது என்று வருந்துகிறான். அழகிய நெற்றியை உடைய தலைவி என்னால் விரும்பப்பட்டவள். அவள்தந்த நிறை எனும் குணம் உப்புப் பாத்தியில்

கிடந்த உப்பால் ஆனப் பாவை மழைத்துளிபட்டுக் கரைந்துவிடுவது போல் கரைத்துவிட்டது என்கிறான். இப்பாடலில் தலைவன், தலைவிக்கும் - தனக்கும் உள்ள தொடர்பை விளக்குகின்றான்.

தலைவி புன்னகையுடன் என்னோடு இணைந்து பின்னர் மறைந்தாள். மதம் கொண்ட யானைப் பாகனின் ஏவலைக் கேட்காமல் அங்குசத்தையும் மீறி ஓடுவது போல அடக்கத்தையும் நாணத்தையும் கடைபிடிக்க இயலாத நிலையில் பிறர் தன்னை அள்ளி நகையாடும் வகையில் தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டாள். அவளினால் எனக்குக் கிடைத்த பரிசு பனை மடல் குதிரையே ஆகும் என்றுத் தலைவன் கூறுகிறான். எனது துன்பத்தைத் தீர்ப்போர் யாரும் இல்லையோ? என் துன்பத்தை இங்குள்ளச் சிறுவரும் அயலாருமே அறிவர். என் துன்பத்திற்குத் துணையாக மடல் ஒன்றே அமைகின்றது என்கிறான். இதனால் தலைவனின் மடலேறும் திறம் அறியப்படுகிறது.

மடல் ஏறுகின்ற தலைவன் சான்றோர்களிடம் காம நோய் என்னை உள்ளும் புறமும் அழிக்கின்றது என்பதை,

**“ஒளியோடு உரு என்னைக் காட்டி, அளியன் என்**
**நெஞ்சு ஆறு கொண்டாள் அதற்கொண்டும் துஞ்சேன்**
**…………………….**
**காணுநர் எள்ளக் கலக்கி, தலை வந்து என்**
**ஆண் எழில் முற்றி உடைத்து உள் அழித்தரும்**
**மாண் இழை மாதராள் ஏஎர் என காமனது**
**ஆணையால் வந்த படை”  (கலி.139:6-23)**

என்கிறாள். மேற்கண்ட அடிகள் தலைவியானவள் அவள் உருவத்தைக் எனக்குக் காட்டி என் நெஞ்சத்தை அவள் வரும் வழியாகக் கொண்டாள்.

அவளின் உருவக் காட்சி நெஞ்சுக்குள் புகுந்துக் கொண்ட பொழுது எனக்குள் ஏற்பட்ட காம மிகுதியால் என் தூக்கத்தை இழந்தேன். காமமாகிய நோய் என்னை நெறுப்பாகச் சுடுகிறது என்றும் காமக் கடலில் அகப்பட்டு இரவு, பகலாக என் தூக்கத்தை இழந்ததால் மன வருத்தமாகிய அலைகள் வந்து துன்புறுத்தின. எனவே சான்றோரிடம் என் துயரத்தின் தன்மையை ஆராய்ந்துப் போக்குதல் தலையாயக் கடனாகும் என்று கூறினான். இப்பாடல் தலைவன் தலைவியின் அன்பைப் பெற மடலேறியதை வெளிப்படையாக உணர்த்தி நிற்கின்றது. சான்றோர்களின் முன் தன்னுடைய துன்ப நிகழ்வை விளக்கி மடலேறுகின்றான். இனிய சொற்களை அழகாகப் பேசிய அவள், என்னிடம் கொண்ட அன்பின் மிகுதியால் கடலில் முழ்கி இரவும் பகலும் துன்ப அலைகள் மிகுந்து மோத, இந்த மடற்குதிரையைத் தெப்பமாகக் கொண்டுக் கரையேற முயல்வதாகக் தலைவன் கூறுகின்றான். தனக்குள்ள தீராத இந்நோய்க்கு இம்மடலே மருந்தாகின்றது என்கிறான். எனவே இச்செயலினைச் சான்றோர்களுக்கு அறிவித்துத் தனது துன்பத்தைப் போக்குதல் சான்றோரின் கடமை என்று வற்புறுத்துகின்றான். இது தலைவன் மடல் ஏறியதற்குச் சிறந்த சான்றாக அமைகின்றது.

இரந்துப் பின்னின்ற தலைவன் மடலேறியவழி அவள் தமர் அஞ்சித் தலைவியைக் கொண்டு வந்துக் கொடுத்தலைக் கண்டோர் கூறியது. கூற்றில் அமைந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளக் கலித்தொகைப் பாடலில் தலைவியின் அழகு தன்னை வருத்தித் துன்புறுத்தியதை,

**“கரந்தங்கே இன்னா நோய் செய்யும் மற்று இ தோ**
**பரந்த சுணங்கின் பணைத் தோளாள் பண்பு**
**………….**

**வருந்த மா ஊர்ந்து மறுகின்கண் பாட**
**திருந்திழைக்கு ஒத்த கிளவி கேட்டு ஆங்கே**
**பொருந்தாதார் போர் வல் வழுதிக்கு அருந்திறை**
**போல, கொடுதார், தமர்'' (கலி.141:15-25)**

என்ற பாடல் கூறுகிறது. தான் காதலித்தவளைப் பெற விரும்பும் தலைவன் தன் விருப்பத்தைக் கூறிக்கொண்டு தெருவில் வருவது அதனைக் கேட்டுத் தலைவியின் பெற்றோர் பெண்ணை அவனுக்கே கொடுக்கும் பழக்கமும் சங்ககாலச் சமுதாயத்தில் இருந்துள்ளதை அறியமுடிகிறது.

சங்க அக இலக்கியத்தில் மடலேறுதல் குறைநேரும் தலைவனுக்குக் கடைசியாகப் பயன்படும் ஒரு கருவி. மடல் கூற்று தோழியை அச்சுறுத்தும் வகையாகவே அமைந்துள்ளதை உணரமுடிகிறது. தலைவிக்கும் சுற்றத்தார்க்கும் தலைவனின் காதலை வெளிப்படுத்த உதவும் ஒரு வழி, ஆனால் கலித்தொகையைப் பொறுத்தவரையில் தலைவன் மடல் கூற்றாக மட்டுமல்லாது மடலேறித் தலைவியை மணந்த முறையையும் உணரமுடிகிறது.

**தலைவனின் ஒருதலைக் காமம்**

தொல்காப்பியர் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், செய்யுளியல் ஆகிய இயல்களில் கைக்கிளை பற்றியச் செய்திகளைக் குறிப்பிடுகிறார். அவற்றில் அகத்திணையியலைத் தொடங்கும்பொழுது

**''கைக்கிளை முதலா பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப'' (தொல்.பொருள்.1)**

என்ற நூற்பாவின் மூலம் அகத்திணைகள் ஏழு என்று குறித்து, அவற்றில் கைக்கிணையும் ஒன்று எனக் குறிப்பிடுகிறார். கைக்கிளையினை

அகத்திணைகள் ஏழுனுள் ஒன்றாகச் சொல்வதோடு அவற்றுள் முதலாவதாகவும் வைத்துத் தொல்காப்பியர் குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

**“காமம் சாலா இளமை யோள்வயின்**
**ஏமம் சாலா இடும்பை எய்தி**
**நன்மையும் தீமையும் என்று இரு திறத்தால்**
**தன் னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்**
**சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்**
**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே” (தொல்.995)**

என்ற பாடல் கைக்கிளையின் உரிப்பொருளை விளக்குகின்றது. தொல்காப்பிய நூற்பாவின் மூலம் வயதுவந்த ஓர் ஆடவனிடம் தோன்றும் காம உணர்வு ஒரு மனநிலை வெளிப்பாடு எனலாம். பருவம் எய்தா நங்கையொருத்தியைப் பருவம் எய்தியவளாக மயங்கி ஒருவன் காதல் கொள்கின்றான். காதல் துன்பமும் படுகின்றான். நன்மை எனவும், தீமை எனவும் அவளைத் தன்னோடு உறவுபடுத்திச் செருக்குகின்றான். அவளிடமிருந்து மறுமொழியாக ஒரு சொல்லும் பெற்றான் இலன். எனினும் தானே சொல்லிச் சொல்லி இன்புறுகின்றான். இவ்வகைக் குறிப்பே கைக்கிளை எனப்படும்.

**அகப்பொருள் கைக்கிளை**

காதல் உணர்வுடைய இளைஞன் “காம உணர்வுகளை அறிகின்ற, காம உணர்வுகளை வெளிப்படுத்துகின்ற இளையவளாகிய தலைவியிடத்துக் காதல் கொள்கின்ற தலைவன், அவனுடையக் காதல் உணர்வுகளைக் காதல் விருப்பினை, அவனுடைய காதலுக்குக் காரணமாக இருக்கின்ற தலைவி அறியும்வரை, தான் கொண்ட காதலைத் தன் நெஞ்சிற்குச் சொல்லி நிற்பான்.”[21] இதுவே அகப்பொருள் கைக்கிளையாக அமைகிறது.

**கைக்கிளை நிகழும் காலம்**

அகத்திணையியலில் களவொழுக்கத்தின் கண் நிகழும் புணர்ச்சி வகைகளாக இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கியற் கூட்டம், பாங்கற் கூட்டம் என்பனவற்றுடன் இந்தப் புணர்ச்சி வகைகளுக்கு முன்னதாகக் கைக்கிளை நிகழும் எனக் கூறுகின்றது. இதனை நம்பியகப்பொருள்,

**''மெய்க்கிளை யாழோர் வேண்டும் புணர்ச்சிமுன்**
**கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப'' (நம்பி.அகம்.28)**

என்கின்றது.

**கைக்கிளையின் நிகழ்வுகள்**

நம்பியகப்பொருள் ஆசிரியர் அகத்திணையியலில் குறிப்பிட்ட அகப்பொருள் கைக்கிளைக் களவியலை விரித்து அதன் நிகழ்வுகளைக் காட்சி, ஐயம், துணிவு, குறிப்பறிதல் என்பனவற்றைக் குறிப்பிடுகின்றார். இதனை,

**''காட்சி ஐயந் துணிவுகுறிப் பறிவென**
**மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை'' (நம்பி.அகம்.118)**

என வரும் நூற்பாவின் மூலம் அறியலாம். பருவம் அடைந்தவர்கள் கூடுவதை "சங்க காலத் தமிழ் மண முறையில் குழந்தை மணத்திற்கு இடமில்லை. ஏனெனில், காமப் பருவ முற்றவர்களுக்கே மணங் கூட்டுவது தமிழர் மரபு"[22] என்பர். எனவே இதனைக் கலித்தொகை பாடலில்

**''முதிர்கோங்கின் முகை என, முகம் செய்த – குரும்பை என,**
**பெயல்துளி முகிழ் என, பெருத்த நின் இளமுலை**
**மயிர் வார்ந்த வரிமுன்கை மட நல்லாய் நிற் கண்டார்**
**உயிர் வாங்கும் என்பதை உணர்தியோ? உணராயோ?'' (கலி.56:28-31)**

என்று சுட்டியுள்ளனர். மயிர் வரிசைகளை முன்கையகத்தே பெற்றவளின் உடல் வனப்பைக் கூறுமிடத்து முற்றினக் கோங்கை மரத்தினது இளைய மொட்டு போலவும், அடிபரந்துக் கண்ணுக்குப் புலனாகி விளங்கும் குரும்பைப் போலவும், மழைத்துளிப் போலவும், விழும் போதுத் தோன்றும் குமிழ்கள் போலவும், பெருத்து விளங்குகின்ற இளைய முலைகள் சுட்டிக் காட்டப்படுகின்றன. “காமப்பருவம் வாய்க்காத பெதும்பைப் பருவத்தவளின் மேல் அறியாமல் தோன்றும் காமமானது உண்மையை அறிந்தபின் தோன்றிய அளவிலேயே மறையும் தன்மையுடையது. அந்நிலையே கைக்கிளையின் குறிப்பாக அறியப்படுகிறது. காதல் நோக்கம் தவறில்லை என்றாலும் அந்நோக்கத்தை உணரும் வயதில் தோன்றிய உணர்வானது இங்கு வரையறைக்கு உட்பட்டு மாற்றம் கொள்கிறது. பெதும்பையவள் களவுப் புணர்ச்சிக்கு ஏற்றவளல்லள் என்பதை இளைஞன் உணர்ந்து கொள்ளும் விதமாகக் கைக்கிளைக் குறிப்பு வழி சங்க காலச் சமூகம் சுட்டிக்காட்டுகிறது.”[23] இதனைக் கலித்தொகையில் குறிஞ்சிக்கலி பாடலின் மூலம் அறியமுடிகிறது.

பிரிதோர் பாடலில் கோதுதல் உற்றக் கடைக் குழன்றக் கூந்தல், வளைந்த முன் கையும், நெடிய மெல்லியத் தோளையும், பெரிய அழகுடைய நீலமலர் போன்ற மையுண்ட கண்ணையும் உடையவள். மேலும் மான் பிணையினது அழகுடைய மருண்டு நோக்கும் பார்வை மழையைப் பெற்ற இளந்திரைப் போன்ற நிறம் ஒளிர்கின்ற அழகிய நெற்றி, விழுத்தெழுந்த கூரிய எயிறு, விழுந்தெழாத முகை போலும் வெள்ளியப் பல், கொடி போன்ற நுண்ணிய இடையும் இவை அனைத்தும் ஒன்றாக அமைந்தவளே, காலுக்குப் பொருந்தினச் சிலம்பு ஒலிப்பக் கைவீசி என்னுயிரைப் பறித்துக் கொண்டு

அறியாது செல்கின்றவளே, என்று தன்னுயிரைத் தான் பறிகொடுத்துப் புலம்புகின்றான் தலைவன்.

**"வார்உறு வணர் ஐம்பால் வணங்குஇறை நெடுமென்தோள்**
**பேர் எழில் மலர்உண்கண், பிணை எழில்மான் நோக்கின்**
**கார் எதிர் தளிர்மேனி, கவின்பெறு சுடர் நுதல்**
**கூர் எயிற்று முகைவெண் பல், கொடிபுரையும் நுசுப்பினாய்**
**நேர் சிலம்பு அரி ஆர்ப்ப, நிரை தொடிக் கை வீசினை**
**ஆர் உயிர் வெளவிக் கொண்டு அறிந்தீயாது இறப்பாய்! கேள்!"**
**(கலி.58:1-6)**

இப்பாடல் அடிகள் தலைவியின் மீது எச்சிறு மாற்றமும் தோன்றவில்லை. மேலும் தலைவி இசையாத நிலையில் மடல் ஏறுவேன் என்பது ஒருதலைக் காதலாகிக் கைக்கிளை ஆயிற்று.

**தொகுப்புரை**

❖ தலைவனைச் சுட்டும் சங்கப் பாடலடிகள் அவனை விடலை, காளை எனக் குறிப்பிடுகின்றன. காளை என்ற சொல்லானது ஆற்றலோடு புணரும் ஏற்றினை ஒப்பிட்டுக் கூறுவதாகவும் அமைந்துள்ளது.

❖ அலர் என்பது தலைவன் - தலைவி காதல் வாழ்க்கைப் பற்றி ஊரார் பேசிக் கொள்வது. இவ்வலர் தலைவி ஊரில்தான் அதிகமாகப் பேசப்படும். தலைவன் ஊரில் அலர் பேசப்பட்டதற்குச் சான்றுகள் இல்லை.

❖ தலைவன் தலைவியின் மேனியைத் தளிரைவிட இன்பம் தருவதாக உரைத்தான். காண்பதற்கு இனிதாகும் தளிரைப் போலன்றி வாடாமையும், குழையாமையும் உடைய மேனி பிறந்து விளங்குவதாய்க் கருதினான்.

- வள்ளுவர் தலைவியை மூங்கில் போலும் அழகிய தோளினை உடைய என் காதலியின் உடல் நிறம் தளிர் போன்றது என குறிப்பிடுகிறார்.
- பாங்கற் கூட்டத்தினால் தலைவனுக்கு மெல்லிய அரும்பிய முலையுடைய தலைவியுடன் கூடும் வாய்ப்பு கிடைக்கிறது.
- பாங்கன் தலைவனது காமம் புதுமையைக் காது கொடுத்துக் கேட்கும் செவியனாய் மேலும் சிறிது இடையூறும் செய்யாத தோழனாய்க் களவின் கண் வந்து செல்கிறான்.
- தலைவியின் உடல் அமைப்பானது முழு வளர்ச்சி பெற்ற வடிவமைப்பைக் கொண்டிருக்கிறது. அகலமான அல்குல், தோள், கண் என மூன்றிடமும் பொருந்தும். நெற்றி, அடி, இடை என மூன்றிடமும் சிறுத்தும் காணப்படுவதாகச் சங்கப் பாடலடிகள் தலைவியின் உடலமைப்பை விளக்கிச் சொல்கின்றன.
- இயற்கைப் புணர்ச்சியில் கூடுவது என்பது சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை என்பதையே இதுவரை கண்ட கருத்துக்கள் சுட்டிக் காட்டுகின்றன.
- இயற்கைப் புணர்ச்சியில் கூடிய பின் மீண்டும், மீண்டும் அவ்வின்பம் பெறத் தலைவன் விரும்புவான் தலைவியும் உடன்படவே செய்வாள்.
- களவில் தொடரும் இவ்வுறவு கற்பில் சென்று முடிதலையே சங்க கால மக்கள் விரும்பினர்.
- தலைவன் தலைவி உள்ளம் புணர்ந்தபின் உடற்புணர்ச்சிக்கு அவாவுதல் முறையே மனம் ஒன்றிய காதலோர் உடல் ஒன்றுதற்குத் தக்கத் தனியிடம் தேர்வர். இடம் வாய்ப்பின் கூடல் கொள்ளப் பின்வாங்கார்.

❖ தலைவன் தன் காமத்தினைத் தலைவியிடம் கூறலாமா அல்லது கூறாது விட்டுவிடலாமா என எண்ணி முடிவில் அடங்க இயலாது தோழி வாயிலாக வெளிப்படுத்துகிறான்.

❖ தலைவன் கூற்றில் பொன்னோடு மணிகளையும் சேர்த்துச் செய்யப்பெற்ற அணிகளை அணிந்திருக்கும் அல்குல் தடத்தினை உடையவள் தலைவி. அவளுடைய அழகிய முலைகளையுடைய மார்பினை நினைத்துச் சென்றோமானால் பொருள் பிரிவு என்பது தெரியாமல் அனைத்தும் இனிதாக அமையும் என்கிறது குறுந்தொகைப்பாடல்.

❖ காமப்பசியை நோய் எனப் பரிபாடலில் வர்ணிக்கப்படுகிறது. நம்மைப் பிணித்திருப்பதால் காமப்பசியைப் பிணி எனப் புறநானூறு கூறுகிறது.

❖ குறுந்தொகையில் அழகிய கூந்தலையும் பெரிய தோளையும் உடைய தன் காதலியை ஒருநாள் புணர்ந்தால் அதற்கு ஈடாகத் தனது அரைநாள் வாழ்க்கை வேண்டாம் என்று தலைவன் நினைக்கிறான்.

❖ தலைவன் மடலேறுவதாகக் கூறுவது சங்க கால மரபு. திருமங்கையாழ்வார் இம்மரபினை மாற்றித் தலைவி மடலேறுவதாகக் கூறுகிறார்.

❖ பெரியதிருமடல், சிறிய திருமடல் போன்ற பிரபந்தங்களில் பெண்கள் இறைவனைக் கணவனாக அடையும் பொருட்டு மடலூர்வதாகக் கூறுகிறார்.

❖ தொல்காப்பியர் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், செய்யுளியல் ஆகிய இயல்களில் கைக்கிளை பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகிறார்.

- சங்க காலத் தமிழ் மண முறையில் குழந்தை மணத்திற்கு இடமில்லை. ஏனெனில் காமப்பருவமுற்றவர்களுக்கே மணங்கூட்டுவது தமிழர் மரபு என்கிறது கலித்தொகை.
- ஆண் என்பவன் ஆண்மை உடையவனாகவும், வீரனாகவும் தனித்தியங்கும் ஆற்றல் பெற்றவனாகவும், தலைமைக் குணம் உடையவனாகவும், சமூகத்தில் மாற்றங்களை ஏற்படுத்தும் ஆற்றல் உடையவனாகக் கருதப்பட்டு உயர்ந்தவனாக நிற்கிறான்.

## சான்றெண் விளக்கம்

1. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.160.
2. மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், பக்.18-19.
3. வளர் தமிழ் ஆய்வு, 2011 ப.389.
4. ஆய்வுக்கோவை, 2012, ப.68.
5. சௌரிமுத்து, வையைக்காட்டும் அக வாழ்வியல், ப.33.
6. ச.சோமசுந்தரம், திருக்குறளில் பாலியல். ப.15.
7. ச.சோமசுந்தரம், திருக்குறளில் பாலியல் பக்.14-15.
8. மாணிக்கம், வ.சுப.தமிழ்க்காதல், ப.57.
9. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல் ப.167.
10. மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள். ப.33.
11. ச.சோமசுந்தரம், திருக்குறளில் பாலியல். பக்.14-15 .
12. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல். பக்.42-43 .
13. வளர் தமிழ் ஆய்வு, 2011, ப.388.
14. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் ப.200.
15. புலவர் குழந்தை, தொல்பாப்பியர் காலத் தமிழர். ப.168.
16. செ. மகேஸ்வரி, பரிபாடலில் சமூகம் ப.77.

17. தி.கு.இரவிச்சந்திரன், ஃப்ராய்ட் யூங் லக்கான், அறிமுகமும் நெறிமுகமும், பக்.24-25.
18. க.ப அறவாணன், திருவள்ளுவம், ப.252.
19. ச. அகத்தியலிங்கம் சங்க இலக்கியம் செவ்வியல் பார்வை ப.58.
20. அ. மணவாளன் அகப்பொருள் மரபுகளும் பக்தி இலக்கியமும், ப.105.
21. மு. மணிவேல், கைக்கிளைக் காதல், ப.80.
22. மாணிக்கம், வ.சுப. தமிழ்க்காதல், பக்.63.
23. மரிய செபஸ்தியான் தமிழரின் பாலியல் முறைமைகள் ப.47.

# இயல் மூன்று

# தலைவி குறித்த பாலியல் பதிவுகள்

சங்க இலக்கியம் அக்காலச் சமூக நடப்பியலை வெளிப்படுத்துவதில் பெரும் அக்கறைக் கொண்டுள்ளது. மனிதன் தனது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்வது ஒருவரோடு ஒருவர் சார்ந்து விளங்கும் போதே முழுமை பெறுகிறது. சங்ககாலச் சமுதாயத்தில் பாலியலை இயற்கையின் தூண்டுதலாக நோக்கினார்கள். அதனைத் தீயது, பாவம், அருவருக்கத்தக்கது என்று ஒதுக்குகின்றப் போக்கு அன்று இல்லை. இயல்பான நடத்தைகளோடு பாலியல் பிணைக்கப்பட்டிருத்தலைக் காண முடிகிறது. சங்க இலக்கியத்தில் ஊடல், கூடல், இருத்தல், இரங்கல், பிரிதல் என்ற பாலியல் உறவுகளின் உணர்வுகள் எல்லாம் பெண்ணைச் சார்ந்தவையாகக் குறிப்பிடப்படுகின்றன. இவற்றில் சங்க இலக்கியத்தில் காமம் சார்ந்து தலைவியின் நிலை எவ்வாறு இருந்தது. இலக்கியங்கள் எவ்வாறு பெண்ணைச் சமூகத் தளத்தில் வைத்திருக்கின்றன என்பதை அறிய முற்படுவதோடு, சங்க இலக்கியங்களின் வழி தலைவியின் பாலியல் சார்ந்த செயல்பாடுகளை அறிந்து கொள்ளும் முகமாகவும் இவ்வியலானது அமைகிறது.

**தலைவி**

நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களையும் உடையவளாக இருத்தல் வேண்டும். தலைவி (களா:8) இந்நாற்குணங்களினும் மேம்படுதலே பெண்மையாகும் நாற்குணமும் நாற்படையா என்றார் புகழேந்தியார். “நாணம் - காமக்குறிப்புத் தோன்றிய போது உண்டாகும். வெட்கம், மடம் -

கொளுத்தக் கொண்டு கொண்டதுவிடாமை. அதாவது சொல்வதை உடனே தெரிந்து அதை வெளிக்குக் காட்டாமல் இருக்கும் குணம். அச்சம் - அன்பு காரணமாகத் தோன்றும் அச்சம். அதாவது தலைவனிடம் தான் கொள்ளும் அன்பை யாராவது கண்டுகொள்வார்களா என அஞ்சுதல். இதற்குமுன் நடவாத புதுவழியாதலால் தலைவி அஞ்சுவது இயல்பு பயிர்ப்பு - புதிதாக ஒன்றைக் கண்டவிடத்து மனங் கொள்ளாமை அதை ஏற்றுக் கொள்ளத் துணியாமை. இன்னும் காமவேட்கையாற் செய்யத் தகுவன அறியாத பேதைமை என்னும் குணம் ஒன்றுண்டு. அதுநாணில் அடங்கும் இப்பெண்மைக் குணங்கள் நான்கும் களவொழுக்க மொழுகும் தலைவிக்குரிய குணங்களாகும்.”[1] அதாவது பருவமுற்ற பெண்களின் குணங்களாகும்.

இத்தகைய தலைவனும் தலைவியுமே தங்கள் காதற் குதிரைகளைச் சரியானபடி செலுத்தி, களவு என்னும் அரிய வழியைக் கடந்து கற்பு என்னும் நல்லிடத்தை இனிதின் அடையத் தகுதியுடையவராவர்.

**தலைவியின் பண்பு**

பெண்ணினத்தின் பெருமையினையும் அதே நேரத்தில் பெண்ணினத்திற்குச் சங்க இலக்கியச் சமுதாயம் கொடுத்த ஏற்றத் தாழ்வினையும் சங்க இலக்கிய நூல்கள் சுட்டிக் காட்டுகின்றன. சங்க இலக்கியத் தலைவி, தோழி, பரத்தை பற்றிய செய்திகளுள் சங்க காலப் பெண்ணியம் பற்றிய ஒரு முழு வடிவத்திற்கு வந்து விடலாம். சங்க பாடல்களால் அக்காலப் பெண்களின் பொதுமைக் குணங்களை அறியமுடிகிறது. காதல் உறவு வளர்ந்து வதுவையை எட்டிய பிறகு தொடங்குகின்ற வாழ்க்கை கற்பு வாழ்க்கையாகப் பரிணமிக்கிறது.

தலைவனுக்கும், தலைவிக்கும் இடையே நெகிழ்கின்ற அன்பு உவமை கூற முடியாத உன்னத நிலையைப் பெற்றிருக்கிறது. இந்த அன்பு தொடங்கிய பிறவியிலேயே நிறைவு பெற்று விடாமல் அடுத்தடுத்த பிறவிகளிலும் தொடர வேண்டும் என்ற எண்ணம் தலைவன், தலைவி ஆகிய இருவருக்குள்ளும் எழுந்திருக்கிறது. எனவேதான் சங்கப் பாடல்களில் மறுபிறப்பு அன்பு பரிமாற்றம் இருவரிடத்திலும் பேசப்பட்டிருக்கிறது.

**களவில் தலைவி**

"களவின் வழிவந்த இல்லத்தார் வாழ்க்கை இனிமைமிக்கது."[2] களவுக் காலத்திற்கும் கற்புக் காலத்திற்கும் உரியனவாகத் தலைவியின் பண்பு நலன்கள் காட்டப்படுகின்றன. இதனைச் சங்க இலக்கியப் பாடல்கள் பதிவு செய்திருக்கின்றன. தலைவியின் களவுக் காலத்தே தலைவனின் செயல் தலைவியின் வேட்கையினைத் தூண்டி எதர்பார்ப்புகளோடு உள்ள நிலையைக் காணமுடிகிறது.

**"ஒண்தொடி நெகிழச் சாஅய்**
**மென்தொள் பசப்பதை வன்கொல்" (ஐங்.28:3-4)**

ஒள்ளிய தொடியானது நெகிழ்ந்து போக, மெலிவுற்று மென்மையான தோள் பசந்து நிறம் வேறுபட்டு நிற்பவள் தலைவி தலைவனின் மார்பினைப் பொருந்தத் தழுவி இன்புற்றதன் பின்னும் தேமற் புள்ளிகள் நிறைந்தவளாகப் பசலை நோயுற்று வாடும் நிலையினை

**"திதலை அல்குள் நின்மகள்**
**பசலை கொள்வது எவன்கொல்" (ஐங்.29:4-5)**

என்ற பாடல் மூலம் அறியலாம்.

**பெண் - ஆளுமை**

தலைவியின் ஆளுமைப் பண்புகளாகத் தொல்காப்பியர் குறிப்பிடுவதைப் பின்வருமாறு காணலாம். இதனை,

**“அச்சமும், நாணும், மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற்குரிய என்ப” (தொல்.பொருள்.96)**

**“கற்புங் காமமும் நாற்பா லொழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்து புறந்தருதலுஞ் சுற்றமும் ஓம்பலும்**
**பிறவு மன்ன கிழவோள் மாண்புகள்” (தொல்.பொருள்.150)**

**“செறிவும் நிறைவும், செம்மையும் செப்பும்**
**அறிவும், அருமையும் பெண்பாலான” (தொல்.பொருள்.206)**

என்று கூறிப்பிடுவதில் அச்சம், நாணம், பேதைமை, அமைதி, அடக்கம், மனங்கோடாமை, சொல்லுதல், நன்மை, தீமை, அறியும் அறிவு, கற்பு, காமம், ஒழுக்கம், நாற்பால், நிறை, பொறை. உள்ளக்கருத்தறியும் அருமை, விருந்தோம்பல் முதலான பண்புகள் தலைவிக்கு உரியதாகக் கூறுகிறார். மற்றோர் நூற்பாவில் தனது விருப்பத்தினை வெளிப்படையாகத் தலைவன் முன்பு கூறும் உரிமை தலைவிக்கு இல்லை எனினும் அவளது வேட்கையால் புதுக்காலத்தின் பெய்த நீர் போலப் புறம் பொசிந்து காட்டும் உணர்வினை உடையது.

**“தன்னுறு வேட்கை கிழவன் முற்கிளத்தில்**
**எண்ணுங் காலைக் கிழத்திக் இல்லைப்**
**பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்**
**பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப” (தொல்.பொருள்.116)**

என தொல்காப்பியரின் நுற்பா வழி அறியலாம்.

**“கிழவி சொல்லின் அவளறி கிளவி” (தொல்.பொருள்.297)**

**“கிழவோட் குவமை ஈரிடத்து ரித்தே” (தொல்.பொருள்.302)**

உவமை கூறுமிடத்துத் தலைவி தனக்குத் தெரிந்தவற்றை மட்டுமே கூற வேண்டும். அவளுக்கான எல்லையிலிருந்து வெளியே செல்ல இயலாத காரணத்தினால் தனக்குத் தெரிந்தவற்றை மட்டுமே உவமையாகக் கூற இயலும். தலைவனுக்கு இடம் வரையறையின்றி அமையும். உவமை தலைவிக்கு இரண்டிடங்களில் மட்டும் வரையறுக்கப்படுகிறது. அவை, ‘இனிதுறு கிளவியும்’ ‘துனியுறு கிளவியும்’ ஆகும். இவ்வாறான நிலையில் தலைவியினது ஆளுமைக் கூறுகள் தொல்காப்பியரால் வரையறை செய்யப்படுகிறது.

**தொல்காப்பியர் பெண்களுக்குக் கூறும் இலக்கணமாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்**

அச்சம், நாணம், பேதமை எனக் குறிப்பிடும் தொல்காப்பியர் உயிரினும் சிறந்தது நாணம் என்கிறார். பெண்களிடத்து இருக்கக்கூடிய நற்குணங்களாகக் கற்பு, அறியாமை, ஒழுக்கம், பொறுத்துப் போதல் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார்.

அடக்கம், அமைதி, மனங்கோடாமை, நன்மை, தீமை, அறிதல், உள்ளக் கருத்தறிதல் போன்றவற்றையும் இயல்புகளாகக் குறிப்பிடுகிறார். மேலும் பெண்கள் கடல் கடந்து வெளிநாடுகளுக்குச் செல்லும் பழக்கமில்லை, கணவனைப் பேணுதல், வீட்டிற்கு வரும் விருந்தினரை உபசரித்தல், சுற்றத்தினரைப் பாதுகாத்தல் ஆகியன பெண்களுக்கான இயல்புகளாகத் தொல்காப்பியம் வரையறுக்கின்றது.

**பெண்ணுக்கான இலக்கண வரையறை**

சங்கப் பாக்கள் பெண்ணின் பல்வேறு மன உணர்வுகளை எடுத்தியம்புகின்றன. அவற்றுள் மிகுகாமத் திறனும் ஒன்று. தன் உடலும் மனமும் தலைவனுக்காகவும், தலைவனுடன் சேர்ந்து இருப்பதற்காகவும் ஏங்குகிறது. அது கிடைக்காதபோது, உடலில் பசலையும், மனத்தில் காம மிகுதியுடன் கூடிய வருத்தமும் ஏற்படுகின்றன. பெண் அச்சம், மடம், நாணம், பயிற்பு என்னும் குணங்களுக்குக் கட்டுப்பட்டவள். ஆதலால் தன் உணர்வுகளை வெளியில் கூறமாட்டாள். “பெருமையும் உரனும் - தலைவனுக்குரிய பண்புகள் என்றும் அச்சம், நாணம், மடம் ஆகியவை தலைவிக்குரிய பண்புகள் என்றும் கூறுவர். வேட்கை ஒருதலை உள்ளுதல், மெலிதல் ஆக்கம், செப்பல், நாணுவரை இறத்தல், நோக்குவ எல்லாம் அவையே போறல், மறத்தல், மயக்கம், சாக்காடு என்பன களவுக்குரிய ஒழுகலாறுகள் என்று விளக்குவர்.”[3] அவ்வாறு கூறுதலும் கூடாது என இலக்கணங்கள் வரையறை செய்கின்றன. இதனைத் தொல்காப்பியம்,

**“தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்**
**எண்ணுங் காலைக் கிழத்திக் இல்லைப்**
**பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்**
**பெய்ந்நீர் போலும் உணர்விற் றென்ப” (தொல்.கள.1064)**

என்னும் நூற்பாவின் வழிச் சுட்டுகிறார். எனவே அவ்வுணர்வினை உவமைகளின் வாயிலாக வெளிப்படுத்துகின்றாள் பெண். இ∴து தன்னுணர்ச்சி நிலையாக அமைகின்றது.

**பாலியல் தன்மை**

“பாலியல் என்பது இயற்கையாக அமைந்துள்ள அடையாளம் அது பிரச்சினைக்குரியதல்ல. சமூகப் பாலினம் என்பது சமுதாயம் ஏற்படுத்திய ஒன்று. சங்க காலச் சமுதாயம் தாய்வழிச் சமூகமாக இருப்பினும் கூட பெண்மை என்ற காரணத்தால் ஆணுக்கு அடுத்த நிலையிலேயே வைத்துப் போற்றியுள்ளது. ஆண் தனது கட்டுப்பாட்டுக்குள் பெண்மையைக் கொண்டு வந்துள்ளான் என்பதைப் பல இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.”[4] இலக்கயங்களில் தலைவியானவள் குடும்பம் என்ற அமைப்பிற்குக் கட்டுப்பட்டு, விட்டுக்குள்லேயே முடங்கிக் கிடப்பதையும், கற்பு என்ற சமூகக் கட்டுப்பாட்டிற்கு ஏற்ற வகையில் ஆடவன் வரவுக்காகக் காத்திருக்கும் ‘இருத்தல்’ என்ற நிலையும் சுட்டிக் காட்டுவதால் பாலியலில் பெண்மையை விட ஆணாதிக்க உணர்வுக்கே அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். “ஆண் நலம் சார்ந்த சமூகக் கட்டமைப்பில் பெண்ணின் நடமாடும் வெளி வரையறுக்கப் பட்டுள்ளது. தொடர்ந்து கண்காணிப்பதற்கும் உள்ளாக்கப்பட்டுள்ளது.”[5] இது ஆணாதிக்க வெளிப்பாட்டின் உச்சமாகும்.

**தலைவனின் உயர்வினைத் தலைவி தோழியிடம் கூறுதல்**

தலைவனும், தலைவியும் ஒருவர்பால் ஒருவர் இனக்கவர்ச்சி உடையவராகவே காணப்படுகின்றனர்.

**“கண்ணும், தோளும், தண் நறுங் கதுப்பும்**
**திதலை அல்குலும், பல பாராட்டி,**
**நெருநலும் இவணர்மன்னே! இன்றே**
**………………**

**இரந்தோர் மாற்றல் ஆற்றா**

**இல்லின் வாழ்க்கை வல்லாதோரே" (நற்.84:1-3,11-12)**

என்ற நற்றிணைப் பாடலடிகள் தலைவியின் உறுப்பு நலன்களைப் பாராட்டிய தலைவனைச் சுட்டிக் காட்டுகின்றன. என் கண்ணையும், தோளையும், குளிர்ச்சியுடன் மணம் பொருந்திய கூந்தலையும், தேமல் பொருந்திய அல்குலையும் பலவாறு பாராட்டிய வண்ணம் நேற்றையப் பொழுதில் இங்கே இருந்தவர் இன்று பிரிந்து செல்வதால் நான் எவ்வாறு தனித்திருப்பேன், என தலைவி தோழியிடம் கூறினாள். பாடலில் கண்ணையும், கதுப்பையும், அல்குலையும், தோளையும் பலபடப் பாராட்டி ஒரு பொழுது கூட இருந்தார் என்ற செய்தி தலைவன் தலைவியிடம் கொண்ட பிணைப்பானது அவர்களுக்குள் நடந்த செய்தியானது இனக்கவர்ச்சிக்கான பண்பாக சுட்டிக்காட்டப்படுகிறது. மற்றோர் பாடலில், தலைவி, தோழி சுனையில் நீராடும் பொழுது தலைவன் வர தலைவியும் இணைந்து நீராடி மகிழ்ந்துள்ளனர். இதனை,

**"அம் கண்அறைய அகல் வாய்ப் பைஞ் சுனை**

**உண்கண் ஒப்பின் நீலம் அடைச்சி**

**நீர் அலைக் கலைகிய கண்ணிச்**

**சாரல் நாடனொடு ஆடிய நாளே" (நற்.357:7-10)**

என்னும் பாடல் வழி அறியலாம். தலைவனும், தலைவியும் நீராடிய பொழுது அங்கு இருவருக்கும் புணர்ச்சி நிகழ்ந்துள்ளது. இதில் நேரடியாக இருவரும் சுனையில் நீராடியது இயற்கை சூழ்ந்த பின்புலத்தோடு விளக்கப்பட்டுள்ளது. புணர்ச்சி நடந்ததை நினைத்து இன்பம் அடைவதாகப் பாடல் அமைந்துள்ளது. இதுபோல் தற்கால கவிதைகளில் விரிவாக உடலரசியல் கலந்து எழுதப்பட்டு

வருகின்றன. அவற்றில் குட்டி ரேவதியின் கவிதையில் நதியில் நீராடும் பெண்ணுடன் மரத்தின் மறைவில் நின்று பார்த்த ஆண் ஒருவன் அவளுடன் நீராடுகிறான். அவை,

**‘எல்லைகளை மீறிக் கொந்தளிப்பது**
**நதிகளுக்குப் பொழுது போக்கு**
**…………**
**நீர்ப்பரப்பில் முலைகள் கொப்பளித்து மிதக்க**
**மல்லாந்து நீந்தினாள்**
**மரத்தோரம் மறைந்து நின்று யெளவனம்**
**ரசித்தவன்**
**தானும் நதியைக் கலைத்தான்’**

**குட்டி ரேவதி - கவிதை தொகுப்பு**

இக்கவிதையில் ஆற்றில் குளித்துக் கொண்டிருந்த பெண்ணைக் கண்ட ஆண், அவளுடன் ஆற்றில் குளித்து அவளிலும் குளிக்கிறான். இதற்கு முன் நதியின் அழகு கரையோர மரங்கள் என இயற்கைக் காட்சிப்படுத்தப் பட்டுள்ளது. முடிவில் ஆணும் பெண்ணும் இணைந்து குளித்து இன்பமுற்றதைச் சுட்டி நிற்கிறது இக்கவிதை, சங்கப் பாடல்களில் இருந்த மறைமுகமான உடல் சார்ந்த வருணணைகள் புதுக்கவிதைகளில் வெளிப்படையாகப் பேசப்படுகின்றன.

தலைவனைப் போல தலைவியும் தன்னுடைய நட்பின் ஆழத்தைக் குறிப்பாகக் குறுந்தொகையில் பல இடங்களில் வெளிப்படுவதைக் காண முடிகிறது. தலைவன் சிறைப்புறமாக இருக்கத் தோழி அவனைப் பழிந்துப் பேசுகிறாள். அதை மறுத்து தலைவி தலைவன் மேல் கொண்ட நட்பினை உயர்வாக மொழிகிறாள். இதனை,

**“நிலத்தினும் பெரிதே: வானினும் உயர்ந்தன்று :**
**நீரினும் ஆர் அளவின்றே - சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனோடு நட்பே”  (குறுந்.3:1-4)**

மலர்களிலேயே உயர்ந்த குறிஞ்சிப் பூவிலுள்ள பெரிய தேனை வண்டுகள் சேகரிக்கின்ற மலை நாட்டின் தலைவன் மேல் தான் கொண்ட நட்பினைத் தலைவி, நிலத்தை விடப் பெரிதாகவும், வானத்தைக் காட்டிலும் உயரமுடையதாகவும், கடல் ஆழத்தைவிட ஆழமுடையதாகவும் விளக்குகிறாள். பிறிதோர் பாடலில்,

தலைவி தன்னுடைய காதலின் உயர்வினைத் தன்னால் அறியப்பட்ட உயர்வான பொருட்களை அடையாளப்படுத்திக் காட்டுகிறாள். இதனை,

**“இன்மை மாறி மறுமை ஆயினும்,**
**நீ ஆகியர் எம் கணவனை**
**யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே”  (குறுந்.49:3-5)**

என்ற பாடல் வழி பரத்தையரை விரும்பி பிரிந்து சென்ற தலைவன் கண்ட வழி, தலைவி தான் தலைவன்மேல் கொண்ட அன்பின் ஆழத்தைக் காட்டுகிறாள். இப்பிறப்பு மட்டுமல்லாது மறுபிறப்பிலும் நீயே என்னுடைய கணவனாக வேண்டும் என்கிறாள். தலைவன் பரத்தையர் இன்றி தனக்கே உரியவனாக வேண்டும் என விரும்பினாள். இப்பிறவியிலும், தலைவன் பரத்தையர்க்குக் கணவன் ஆகான் என்பதும், தலைவன் நெஞ்சில் பரத்தையர் உள்ளனரேயன்றிப் பரத்தையர் நெஞ்சில் தலைவன் இல்லாமையும் குறிப்பிடப்பட்டுள்ளன.

இவ்வுலக வாழ்க்கையில் தலைவனோடு, இன்பத்தில் இன்பம் நுகர்தலேயன்றித் துன்பத்திலும் பங்கேற்பவளாகத் தலைவி விளங்குவாள். ஆனால் தேவர் உலகில் துன்பம் இல்லாமையால் இன்பத்தில் மட்டும் கூடி உறையும் நிலை ஏற்படும் என்பது நம்பிக்கை. தலைவனோடு கூடி வாழும் வாழ்க்கை, அவன் பிரியினும், அவன் நினைவினால் வாழ்ந்து கொண்டிருத்தலால், துன்பமாயினும் இன்பமாகவே உள்ளது என்பதை,

**"இனியன் : ஆகலின், இனத்தின் இயன்ற**
**இன்னாமையினும், இனிதோ –**
**இனிது எனப் படூஉம் புத்தேள் நாடே?" (குறுந்.28:3-5)**

என்னும் பாடல் காட்டுகின்றது. தலைவன் புணர்ந்தாலும், பிரிந்தாலும் அதன் நிலை ஒத்த இனிமையுடயவனவாக இருத்தலால் இன்பத்தில் மட்டும் ஒப்பதாய்த் தோன்றும் தேவருலகம் அவனுடைய இனிமைக்கு ஈடாகாது எனத் தலைவி கூறுவதைப் பாடலின் வழி அறியமுடிகிறது.

சிறைப்புறத்தானாக இருக்கும் தலைவனை அறியாதது போல தலைவி தோழியிடம் மலை நாட்டில் உள்ள மணிநிறம் கொண்ட மலையின் உச்சியில் இருந்து வீழும் தெளிந்த சுனை நீரிலும் அருவிநீரிலும் நானும் நம் தலைவரும் புனலாடி மகிழ்ந்திருந்தோம் அழகிய பூஞ்சோலைகளிலும் மகிழ்வுடன் விளையாடியிருந்தோம். இவ்வாறு நான் இற்செறிக்கப்பட்டதால் இனி நாங்கள் இருவரும் இணைந்து புனலாடுதல் என்பது அரிதாயிருக்கும் தலைவன் எம்மை விரைந்து திருமணம் செய்து கொண்டால் மட்டுமே இனி இருவரும் புனலாட முடியும் என்று கூறுகிறாள்.

**“துணி நீர் அருவி நம்மோடு ஆடல்**
**எளிய மன்னால், அவர்க்கு : இனி**
**அரிய ஆகுதல் மருண்டனென் யானே”  (ஐங்.224:3-5)**

இவ்வாறு தலைவி தன் தோழியிடம் தன் துன்பத்தைக் கூறி விரைவில் திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என வற்புறுத்துகிறாள். மேலும் தலைவி தன்னுடைய தலைவன் பற்றித் தோழியிடம் கூறுகிறாள். இதனை,

**“சுடர்த்தொடீஇ! கேளாய்! தெருவில் நாம் ஆடும்**
**மணற்சிற்றில் காலின் சிதையா, அடைச்சிய**
**கோதை பரிந்து வரிப்பந்து கொண்டு ஓடி**
**நோதக்க செய்யும் சிறுபட்டி மேல் ஓர் நாள்**
**...............**
**தன்னை அறியாது சென்றேன் : மற்று என்னை**
**வளைமுன் கைபற்றி நலிய, தெருமந்திட்டு”  (கலி.51:1-4,9-10)**

என்ற பாடல் அடிகள் மூலம் உணரலாம். தெருவில் நாம் கட்டிய மணல் வீட்டைத் தன் காலால் கலைத்துக் நம் கூந்தலில் சூடிய மலர் மாலையை அறுத்தும், வரியை உடைய பந்தை எடுத்து கொண்டு ஓடியும் நாம் வருந்ததக்க செயல்களைச் செய்யும் சிறியவன். கட்டுக்கடங்காத காவலின்றி வளர்ந்தவன். முன்னொரு நாளில் அன்னையும் நானும் வீட்டில் இருந்தபோது வந்தான். வீட்டில் இருப்பவரே, உண்ணும் நீரை உண்ண விரும்பினேன்' என்றான். அவ்வாறு வந்தவனுக்கு, அன்னையும் விளங்கும் அணியை அணிந்தவளே! உண்ணீரைத் தகட்டுப் பொன்னால் ஆன கலத்தில் எடுத்துக் கொண்டு போய் அவனை உண்ணச் செய்துவிட்டு வருவாய் என்று சொன்னாள். நானும் அவ்வாறு சென்ற போது அவன் என் வளையல் அணிந்த முன் கையைப் பிடித்து வருத்தினான்.

ஆதனால் நான் வருந்தி, அன்னையே இவன் ஒருவன் செய்த ஒரு செயலைக் காண்யாய் என்றேன். அன்னையும் அலறிக்கொண்டு ஒடிவந்தாள். அப்பொழுது அவன் செய்த செயலினை மறைத்து யான் 'இவன்நீா் குடிக்கும் போது விக்கல் எடுக்க அதனால் வருந்தினான்' என்று பொய் கூறினேன். நான் கூறியதைக் கேட்டுத் தாயும் அவனது முதுகைப் பலமுறை தடவினாள். அப்போது அவன் கள்வன் போல் என்னைப் பார்த்துத் தன் மகிழ்ச்சி தரும் புன்முறுவலால் என் உள்ளத்தில் புகுந்தான். என்று தோழியிடம் தலைவி கூறினாள். தலைவன் பால் தலைவிக்கு அமைந்த காதலுணர்வு வெளிப்படுவதோடு, உண்ணும் நீர் விக்கினான் எனத் தலைவி கூறிய பொய்க் கூற்றால் அவன்பால் தலைவிக்கிருந்த விருப்பத்தை அறியமுடிகிறது.

தலைவி, தலைவன் தனது மெய்தொட்டுப் பழகுதல் முதலிய எட்டையும் செய்தும் தலைவி தனது நாணம், மடம் முதலியவற்றை நீங்காதவளாய் இருந்ததைத் தனது தோழிக்குக் கூறுகின்றாள். இதனைக் கீழ்வரும் பாடலில் காணலாம்.

**"நில் என நிறுத்தான் நிறுத்தே வந்து**
**நுதலும் முகனும் தோளும் கண்ணும்**
**இயலும், சொல்லும், நோக்குபு நினைஇ,**
**ஐ தேய்ந்தன்று. பிறையும் அன்று**
**மைதீர்ந்தன்று, மறியும் அன்று" (கலி.55:6-10)**

தலைவன் தலைவியின் அருகில் நெருங்கி வந்து நெற்றியையும், முகத்தையும், தோளையும், கண்ணையும், சாயலையும் சொல்லையும் நோக்கி நின்றான். நின்றவன் நெற்றி வியப்புக் கொண்டதாய் தேய்ந்தது இருப்பினும் அது பிறைச்சந்திரன் அன்று முகம் களங்கமற்றது ஆயினும் முழு மதியும்

அன்று தோள் மூங்குலின் தன்மை நெருங்கியது. அது பிறக்கும் சுனையான இடமும் அன்று. சாயல் பொருந்த மெல்ல நடக்கும் மயிலும் அன்று. சொல்லானது சொல்லத் தளரும், ஆயினும் கிளியுமன்று என்று தன்னால் விரும்பிப்பட்டவளைப் பல்வேறு உவமையின் மூலம் வெளிப்படுத்துவதைக் கேட்டுத் தலைவி நானும் மடனும் நீங்காது நின்றேன் எனக் கூறுவதைக் காணமுடிகிறது.

தினைப்புனக் காவலுக்குச் சென்றிருந்த மங்கை வேட்டைக்காக அங்கு வந்த வேற்றுப்புல ஆடவனைக் கண்டு காதலித்து இணைந்ததனை,

**“……………… நம்மலை**
**அமைஅறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்**
**நறுவிரை ஆரம் அற எறிந்து உழுத**
**உளைக்குரல் சிறுதினை கவா்தலின், கிளை அமல்”**

**(அகம்.388:1-4)**

எனத் தொடங்கும் பாடலில் அறியலாம். மலையின் கண், மணம் மிக்க சந்தன மரங்களை வெட்டியழித்து உழுது நிலத்தில் விதைத்த தினைப்பயிரின் கதிா்களில் வந்து படியும் கிளிகளைத் தழல்தட்டை என்னும் கருவியால் ஓட்டினோம். பின் உயரம் மிக்க மலையில் வேங்கை மரத்தின் கிளைகளிடையே கட்டியுள்ள பரணில் இருந்து அம்மலா்களின் தேனையுண்ணும் வண்டுகள் எழுப்பும் இன்னிசையைச் செவியோடு கேட்டுக் கொண்டிருக்கும் வேலையில், கரிய கூந்தலையுடைய பெண்களே கூரிய அம்பு பாய்ந்த புண்ணால் வருந்திய நெடிய கொம்புகளையுடைய யானை நும் புனத்துள் வந்ததைக் கண்டீா்களா? என்று வில்லேந்திய இளைஞன் ஒருவன் வேட்டை நாயுடன் வந்து வினவிச் சென்றான். அவனது சந்தனம் பூசிய மாா்பினைக்

கண்டு காதல் கொண்டேன். அக்காதல் நோயால் பெரிதும் வருந்துகின்றேன் என்று தினைப்புனம் காத்த இளம்பெண் வேட்டைக்கு வந்த இளைஞனைக் கண்டு காதல் கொண்ட நிகழ்வை அகநானூறு சுட்டுகிறது.

காதலி காதலனைப் பகலில் வந்து கூடிக் களித்திட அழைத்ததனை அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. களவில் கூடி மகிழ்ந்த காதலர்கள், தினை அறுவடைக்குப் பின் காதலி வீட்டில் தங்கிவிட்ட நிலையில் இருவரும் இரவுக்குறியில் கூடி இன்புற்று மகிழ்ந்தனர். மேலும் இரவுக்குறியின் ஏதங்களுக்கு அஞ்சிய காதலி பகலில் கானகத்துக்கு வந்து கூடிக் குளித்துச் செல்க என்று தலைவனிடம் கூறியதை அறியமுடிகிறது.

**காமத்தால் தலைவியின் உடலில் பசலை உண்டாதல்**

தலைவன் தலைவி களவுக் காலத்தில் இன்புற்று. பிரிந்து சென்றபின் தலைவி தான் அடைந்த மாற்றத்தினைத் தோழியிடம் பொருள் வெளிப்படக் கூறும் நிலையினைக் கபிலர்,

**“மாசு அறக் கழீஇய யானை போலப்**
**பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல்**
**பைதல் ஒரு தலைச் சேக்கும் நாடன்**
**நோய் தந்தனனே – தோழி**
**பசலை ஆர்ந்த, நம் குவளை அம் கண்ணே” (குறுந்.13:1-5)**

எனக் குறிப்பிடுகிறார். தலைவன் தன்னைக் கூடிப் பிரிந்து சென்றுவிட்டான். சேறு படிந்த யானையை எவ்வளவு கழுவினாலும் அவை மீண்டும் தன்னை அழுக்காக்கிக் கொள்ளும் அதுபோல் தலைவன் பிரிந்து சென்று பசலை நோயை உண்டாக்கி விட்டான். மீண்டும் துய்மைப்படுத்துவது கடினம் எனத்

தலைவி தோழியிடம் புலம்புவதாக இப்பாடல் இடம்பெறுகிறது. திருக்குறளில் வள்ளுவர் - தலைவி தன்னுடைய கண் பசலையுற்று நீர் சொரிகின்றமையால் அவை தலைவனின் அன்பில்லாச் செயல்பாட்டைப் பிறருக்கு அறிவிப்பதை,

**"நயந்தவர் நல்காமை சொல்லுது போலும்**
**பசந்து பனிவாகும் கண்ணே" (குறள்.1232)**

என்ற குறள் வழி அறியலாம். பசலை நோயைப் பற்றி வள்ளுவர் திருக்குறளில் பல இடங்களில் கூறுகிறார். அவற்றில் அவர் தந்தார் என்னும் தகையால்.... மேனிமேல் ஊரும் பசப்பு' (குறள். 1182) சாயலும் நாணும்,,,, நோயும் பசலையும் தந்து, (குறள். 1183) என் துணைவர் தந்தார் என்னும் உரிமையில் இப்பசலை நோய் என் உடம்பில் ஏறிப்படர்கிறது. விளக்கின் வெளிச்சம் நீங்குவதைப் பார்த்துக் காத்திருக்கின்ற இருளைப்போல் என் துணைவரின் அணைப்பு எப்போது நீங்கும் என பார்த்துக் காத்திருக்கிறது பசலை, அணைத்துப் படுத்திருந்த நான் கொஞ்சம் விலகினேன் அவ்வளவு தான் உடனே பசலை என்னை அள்ளித்தழுவிக் கொண்டது என்கிறாள். பிரிவில் தலைவனை பழிக்கும் தலைவி அவன் வந்தவிடத்து அவனை ஏற்றுக் கொள்ளும் மனநிலை உடையவளாகக் காணப்படுகிறாள்.

வெள்ளிவீதியாரின் பாடல், காதல் வயப்பட்ட பெண்ணின் மனவுணர்வுகளை அழுத்தமாகச் சித்திரிக்கிறது.

**"கன்றும் உண்ணாது கலத்தினும் படாது**
**நல்ஆன் தீம்பால் நிலத்து உக்காஅங்கு**
**எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது**
**பசலை உணீயர் வேண்டும்**
**திதலை அல்குல் என் மாமைக் கவினே" (குறுந்.27:1-5)**

இனிய சுவையான பால் கன்றுக்கும் பயன்படாமல், கலத்திலும் கறக்கப்படாமல் வீணாகத் தரையில் சிந்தியதுபோல, தேமல் படர்ந்த அல்குல் தடத்து என் மாமை அழகு எனக்கும் பயனின்றி என் தலைவனுக்கும் உதவாமல் பசலை உண்ணும் நிலையைப் பெற்றுவிட்டதே என்று தலைவி வருந்துகிறாள். “பெண் என்றால் மடமகள், மென்மையானவள் என்ற மரபினைச் சிதைத்து மனத்தடைகளற்ற வெளிப்பாட்டின் மூலம் கொப்பளிக்கும் பெண்ணின் காமம் அருமையான கவிதை வரிகளாகியுள்ளன.”[6] இன்று நவீனப் பெண் கவிஞர்கள் கவிதையில் பயன்படுத்தும் யோனி, முலை போன்ற சொற்களினைச் சங்க காலத்திலேயே பெண் கவிஞர்களுள் ஒருவரான வெள்ளி வீதியாரும் பயன்படுத்தியுள்ளார் என்பது இவண் நோக்கத்தக்கது. இதேபோன்று “சங்கக் கவிதைகளிலும் பெண்களின் உடல் சார்ந்த உணர்வுகள் பேசப்படுகின்றன. தற்காலக் கவிதைகளிலும் உணர்வுகள் வன்மையாகப் பேசப்படுகின்றன.”[7] இதற்கு தற்கால நூல்கள் எடுத்துக்காட்டாக அமைகின்றது.

பழந்தமிழ் இலக்கியங்களில் அன்புடைய காதலர்கள் எந்நேரத்திலும் இணைந்திருக்க விரும்பியுள்ளதையும், ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு வாழ வேண்டும் எனவும், பெண்கள் பிறந்த இடத்தில் வாழும் இன்பத்தைவிட, கணவன் மனையில் வாழும் இன்பமே சிறந்தது எனவும் சாதி, மதம் கடந்து அன்பு கொண்டுள்ளதையும் காணமுடிகிறது. பண்பாட்டுப் பால்வேறுபாடானது மொழியால் கட்டமைக்கப்படுகிறது. அம்மொழி பெண்ணின் மொழியாக உருக்கொள்ளும்போது தன்னை எழுதுதல் என்ற நிலைக்கண் ஆட்பட்டுத் தனக்கான மன உணர்வாகவும், ஒட்டுமொத்தப் பெண்களின் மனவெளிப்பாடாகவும் அமைவது காலத்தியற்கை அவ்வகையில் பெண்பாற்

புலவரான வெள்ளிவீதியாரின் பாடல்களும் அவர் கையாண்ட உவமைகளும், பெண்ணுக்கான உடலரசியலைப் பேசுபவையாகவும், மாற்றுப் பண்பாட்டிற்கு வழிவகை செய்வதாகவும் அமைகின்றன.

தலைவன் கடம்ப மரத்தின் முன் பிரியேன் எனச் சூளுரைத்தான். அவன் சூள் பிழைத்தமையால் அவளைக் கடம்ப மரத் தெய்வம் துன்புறுத்தும் எனக் கருதிய தலைவி தன் நுதல் பசந்தமையும் தோள் நெகிழ்ந்தமையும் தானாக நிகழ்ந்தன. தலைவன் கொடியன் அல்லன் எனக் கூறித் தெய்வத்தை வணங்குவதை,

**“கொடியர் அல்லர் எம்குன்று கெழுநாடர்**
**பசைஇ பசந்தன்று நுதலே**
**நெகிழ நெகிழ்ந்தன்று தடமென் தோளே”   (குறுந்.87:1-5)**

என்ற குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது. தலைவியின் தோள் நெகிழ்ந்தமை கண்டு தலைவனைக் ‘கொடியர்’எனப் பிறர் பழித்தலுக்கு வருந்தும் தலைவியைக் குறள் மொழிகிறது. இவற்றினின்று சங்ககாலப் பெண்களின் நல்லெண்ணம் புலப்படுகிறது.

தலைவனால் ஏற்பட்ட துன்பம் தாங்காமல் தலைவி தன் தோள்கள் பசந்தன என்று,

**“மெய்யே, வாழி – தோழி – சாரல்**
**……………………………**
**கோட்டோடு போகியாங்கு, நாடன்**
**தான்குறி வாயாத் தப்பற்குத்**
**தாம் பசந்தன, என்தட மென்தோளே”   (குறுந்.121:1-4-6)**

கரிய முகத்தை உடைய ஆண் குரங்கு, மரக்கொம்பு தன் பாரத்தை ஏற்றுக் கொள்ளுமா என அறியாமல் பாய்ந்தமையால் அம்மரக்கொம்பு முறிந்து அக்குரங்குடன் வீழ்ந்ததைப் போலத் தலைவன் தான் அறியும் வண்ணம் குறி செய்யாதவற்றால் என்னுடைய பருத்த, மெல்லிய தோள்கள் பசலையை அடைந்தன எனத் தலைவி கூறினாள். இப்பாடலில் குரங்கின் செயலோடு தலைவனின் செயல் ஒப்பிடப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

பசலையால் வருந்திய தலைவி தோழிக்கு உரைக்கும் பாடலில்

**"சென்ற நாட்ட கொன்றைஅம் பசுவீ**
**நம்போல் பசக்கும் காலை, தம்போல்**
**சிறுதலைப் பிணையின் தீர்ந்த நெறி கோட்டு**
**……………………..**
**மென்மயில் எருத்தின் தோன்றும்**
**புன்புல வைப்பிற் கானத் தானே"  (குறுந்.183:1-3,6-7)**

காட்டில் முன்னர்ப் பொலிவு இழந்திருந்த காயாஞ் செடி, பூக்களோடு கூடிய பெரிய கொம்புகளுடன் மழை, பெய்த பின் மயிலின் கழுத்தைப் போலத் தோன்றுகிறது. தலைவர் சென்றுள்ள நாட்டில் கொன்றை நறுமலர்கள், நம்மைப் போலவே பசலைத் தோற்றம் அடைகின்ற காலம். அத்தகைய காட்டின் புல்லிய நிலப்பகுதியில், தன்னைப் போல தனித்த சிறிய தலையையுடைய பெண்மானின் நீங்கிய, நெறிந்த கொம்பினையுடைய ஆண்மானையும் நம் தலைவர் காண்பரோ? தன்னுடைய காதலியைப் பிரிந்திருத்தல் இயலாது என்று தலைவன் உணர்ந்து கொள்வான் எனத் தலைவி நினைத்தலை அறியமுடிகிறது. கொன்றையும் காயாவும், தலைவன் வருவதாகக் குறித்த கார்காலத்தில் மலர்வன. அவை, தலைவனுக்கு இல்லம் திரும்ப வேண்டும் என்ற அறிவினை

நல்குவனவாகும். பிரிதோர் பாடலில் வரைவு வேண்டிச் சென்ற தலைமகன் காலம் நீட்டித்தமையால் தலைவி தோழியிடம்,

**“ஊர்உண் கேணி உண்துறைத் தொக்க**
**பாசி அற்றே பசலை – காதலர்**
**தொடுவுழித் தொடுவுழி நீங்கி**
**விடுவுழி விடுவுழிப் பரந்தலானே” (குறுந்.399:1-4)**

ஊரார் நீர் உண்ணும் துறையில் பாசியானது நீரில் பரவிக் கிடப்பதைக் காண்பாறராயின், உடனே அதனை நீக்கி, உண்பதற்கு ஏற்ற நன்னீராக்க முயலுவர். அப்பாசி போன்று தலைவன் தலைவியைத் தொடுந்தோறும் பசலை நீங்கி விடுந்தோறும் பசலை பரவுதலை ஊர் உண் கேணியில் பாசிப் பரந்து இருத்தற்கு உவமையாகக் கூறுவதைப் போல, திருக்குறள் அதனை விளக்கின் கீழ் மறைந்திருக்கும் இருள் போல தலைவன் தழுவினால் மறைந்திருக்கும் பசலை படர்வதால் சோர்வு ஏற்படுகிறது.

**“விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கண்**
**முயக்கற்றம் பார்க்கும் பசப்பு” (குறள்.1186)**

என்ற உவமையால் திருவள்ளுவர் பாடலில் விவரிக்கிறார். பசலைக்குக் காரணமான தலைவனையும் பாணன் முதலாகிய பக்கத்தாரையும் இகழ்ந்து தலைவி,

**“தன் பார்ப்புத் தின்னும் அன்பு இல் முதலையோடு**
**வெண் பூம் பொய்கைத்து, அவன் ஊர் என்ப அதனால்**
**தன் சொல் உணர்ந்தோர் மேனி**
**பொன் போல் செய்யும் ஊர்கிழவோனே” (ஐங்.41:1-4)**

என்று குறிப்பிடுகிறார். அதாவது தான் ஈன்றெடுத்த பார்ப்பினைத் தானே உண்டு பசிதீரும் அன்புணர்ச்சியற்ற முதலையையும், வெண்ணிறப் பூக்களைக் கொண்ட

பொய்கைகளையும் கொண்டது தலைவனுடைய ஊர். அதனால் அவ்வூரின் தலைவனும் தன் மேனியில் பிரிவால் பொன்போலும் பசப்புத் தோன்றுவதற்குக் காரணமாகின்றான் என்று தலைவி கூறுகின்றாள். இப்பாடலின் மூலம் தலைவி பாணன், தலைவன் முதலியோரை இகழ்ந்திருப்பதைக் காணமுடிகிறது. அன்புக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைவது தாய்மையாகும். ஆனால் அப்பண்பிற்கு மாறாகிய செயலுடைமை பற்றித் தாய் முதலையைத் 'தன்பார்புத் தின்னும் அன்பில் முதலை' என்கிறாள். தான் என்று புறந் தருவதற்குரிய தன் பார்ப்பினைத் தானே தின்னும் முதலையினையும் அதனோடு உறையும் வெள்ளாம்பல்கலையும் உடைய ஊர் என்றதால் தான் தெளிவிப்பான் கூறிய சொற்களைத் தன் புறத்தெழுக்கத்தால் தானே சிதைத்தலையும், தன் கொடுமை நினையாது கூடியுறையும், அறிவில்லாத பரத்தையரை உடையவன் என்கிறாள் தலைவி.

அகநானூற்று ஔவை பாடலில் பிரிவின் காரணமாக வருந்திய தலைவி விண்ணில் வேகமாக எறியப்பட்ட கூதாளியின் மாலை போலப் பசிய கால்களையுடைய வெள்ளாங்குருகுகள், வளமைமிக்க கடற்கரை மருங்கில், காலைப் பொழுதில், தம் சிறகுகளை வளைத்து வரிசையாகப் பறந்து ஆரவாரத்துடன் பரவலாக வந்து அமரும். வயல்களில் கதிர் ஈன்று முடிந்தவுடன், புதிதாக வந்த முன்பனிக் காலத்தில், நம் பேரழகைப் பசலைநோய் உடல் முழுவதும் பரவி நம்மை வருந்துகிறது. இதனை,

**“முலையிடைத் தோன்றிய நோய்வளர் இளமுளை**
**அசைவுடை நெஞ்சத்து உயவுத்திரள் நீடி,**
**ஊரோர் எடுத்த அம்பல் அம்சினை,**
**ஆராக் காதல் அவிர்தளிர் பரப்பி**

**புலவர் புகழ்ந்த நார்இல் பெருமரம்**

**அலர் அரும்பு ஊழ்ப்பவும், வாரா தோரே'' (அகம்.273:11-16)**

இப்பாடலில், தலைவி நாம் அடைந்த துன்பத்தினைத் தலைவர் அறிந்தாரோ! அவ்வாறு அறிந்திருந்தும் நம் மனத்தின் மென்மைத் தன்மை அவர் மனத்தில் இல்லாது போயிற்றே! காதல் வயப்பட்ட என் நெஞ்சை அறிவாரோ! அவரின் உள்ளத்தை எவ்வாறு உணர்ந்து கொள்வேன் என அறிவு மயங்கித் தன் நெஞ்சுக்குக் கூறியது. "சங்க பெண் கவிஞர்களின் கவிதைகளில் தந்தை வழிச் சமூகப் போக்குகள் முதன்மையிடம் பெற்றாலும், தாய்வழிச் சமூகத்தின் எச்சங்களும் ஆங்காங்கே பதிவாகியுள்ளன. பெண் படைப்பாளர்கள் தம் உடலினைப் படைப்பின் வழியாகப் பதிவு செய்தல் சங்க காலத்திலேயே தொடங்கியுள்ளது. மரபினுக்கு மாறாகக் காதல் உணர்வையும் காம வேட்கையையும் மனத்தடைகளற்று வெளிப்படையாகக் கவிதையாக்கியிருப்பது பெண் கவிஞர்களின் தனிச்சிறப்பு. ஆண் மேலாதிக்கச் சமூகத்தில் அதிகாரத்தின் ஆளுமைக்கேற்ப, எல்லா நிலைகளிலும் ஒடுக்கப்படுவதற்குப் பெண் இணங்கியிருப்பினும், அவளுடைய எதிர்க்குரலும், தனித்தன்மைகளும் கவிதைகளில் பதிவாகியுள்ளன. சங்கப் பெண் கவிஞர்களின் மொழிவளமும், கவித்துவ வீரியமும் நவீன வாசகர்களையும் கவர்ந்திழுக்கின்றன."[8] இன்றைய இளம் கவிஞர்களிடமிருந்து கற்றுக் கொள்ள நிரம்ப சேதிகள் உள்ளன என்பர்.

**அலர் காரணமாகத் தலைவி துன்புறுதல் :**

காதலரின் மறை ஒழுக்கம் குறித்து ஊரவர் கூறும் பழிச் சொல் மூன்று வகைப்படும். அவை, 1. ஆம்பல், இது ஒருவருக்கொருவர் முறைமுகமாகச் சைகை வழித் தூற்றும் பழி. 2. அலர் இது ஒருவருக்கொருவர் சொல்வழியே

மறைமுகமாகத் தூற்றும் பழிச்சொல். 3. கௌவை இது ஒருவருக்கொருவர் வெளிப்படையாகத் தூற்றும் பழிச்சொல். ஆம் என்பது அலரின் முகிழ்நிலை, கௌவை என்பது அலரின் முதிர் நிலை, "அம்பல் என்பது பொது நிலை எனவும், அலர் என்பது தாதுவும் அல்லியும் வெளிப்பட மலர்ந்தற்போல நிற்கும் நிலை எனவும் வேறுபடுத்தப்படுகிறது."[9] அலர் குறித்துத் தொல்காப்பியர் கற்பியலில்,

**"அலரின் தோன்றும் காமத்து சிறப்பே" (தொல்.கற்.1109)**

என்றும்,

**"களவுங் கற்பும் அலர்வரை வின்றே" (தொல்.கற்.1108)**

எனக் கூறுகின்றார்.

அலரால் தலைவனுக்கோ தலைவிக்கோ காமம் சிறப்பதாகச் சங்க இலக்கியத்தில் பாடல்கள் காணப்படவில்லை. திருக்குறள் தொல்காப்பிய இலக்கணத்திற்கு இலக்கியமாக அமைகிறது. முன்னோர் பொருளைப் பொன்னே போல் போற்றும் வள்ளுவர். தொல்காப்பியரின் கருத்தை ஒட்டி, அலரினால் தலைவனும் தலைவியும் இன்புறுவதாகக் காட்டுகிறார்.

சங்க இலக்கியத்திலிருந்து, திருக்குறள் அலர் தூற்றலில் மாறுபடுகிறது. சங்க இலக்கியத் தலைவி அலரை வெறுக்க, வள்ளுவத் தலைவியோ விரும்புகிறாள். வள்ளுவத் தலைவி, நாணுடையளாயினும் திருமணம் விரைவில் மேற்கொள்ளக் கருவியாக, அமைவதால் அலரை விரும்புகிறாள். சங்க இலக்கியத் தலைவன் அலரை விரும்புவதாகவே வெறுப்பதாகவோ, சான்றுகளில்லை. ஆனால் தன்னையும் ஊரவர் தொடர்புபடுத்திக் கூற, அலர் ஒரு வாய்ப்பாக இருப்பதால் தலைவனும் விரும்புவதாகக் காட்டுகிறார்

வள்ளுவர். இவ்வாறு பழைய அக இலக்கியக் காதலர் வாழ்வில் இடம்பெற்ற 'அலர் தூற்றல்' வள்ளுரால் புதுமையாக்கப்பட்டிருக்கிறது. அதற்கு அவர் முதலிடம் கொடுக்கும் முகமாக ஓர் அதிகாரத்தையும் வகுத்து மதிப்பளித்திருக்கிறார்.

பிரிவை ஆற்றாத தலைவி நிலவை நோக்கி என் காதலர் உறையும் இடம் நீ அறிவாய். இருந்தும் எனக்கு நீ அதனைக் கூறவில்லை. பாலை மொண்டு வைத்ததைப் போலக் குளிர்ச்சியைக் கொண்ட வெண்மையான நிலா ஒளியையும், பல கலைகளும் நிறைவுற விளங்கும் திங்களே! நீ சான்றாண்மையும் செம்மைக் குணங்களும் உடையதாயினும் உனக்குத் தெரியாது உறையும் உலகம் ஒன்றும் இல்லை. எனக்குத் தெரியாதவாறு ஒழுகும் என்னுடைய காதலர் இருக்கும் இடத்தை எனக்கு இப்போது காட்டுவாயாக,

**''நற் கவின் இழந்த என் தோள் போல் சாஅய்**
**சிறுகுபு சிறுகுபு செரீஇ**
**அறி கரி பொய்த்தலின், ஆகுமோ அதுவே''** **(நற்.196:7-9)**

எனத் தலைவி நிலவினை வினவிய பிறகு நீ அறிந்த அளவில் சாட்சிக் கூறாது பொய்யை மேற்கொண்டாய் திங்களே, ஆகவே நல்ல அழகிழந்த என்தோள் போல நீயும் வாட்டமுற்று நாள்தோறும் சிறுகச் சிறுகக் குறைத்து மறைவாய் எனக் கூறுகின்றாள். ஊரார் தூற்றும் அலரினாலும், தலைவனின் பிரிவுத் துயராலும் அன்னை தன்னை வருத்துவதாலும், அமுதக்கலை நிரம்பிய மதியாகிய நிலாவையும் குறைகூறும் நிலைமைக்குத் தள்ளப்பட்டவளாய் தலைவி விளங்குகிறாள்.

**“பருக்கோட்டு யாழ்ப்பக்கம் பாடலோடு ஆடல்**
**அருப்பம் அழிப்ப அழிந்தமனக் கோட்டையர்**
**ஒன்றோ டிரண்டா முன் தேறார் வென்றியின்” (பரி.10:56-58)**

பரிபாடலில் வையை குறித்து “பருத்த கோட்டினையுடைய யாழின் இசையோடு பாடலும் ஆடலும் சேர்ந்து மக்களின் மனதில் காம விருப்பத்தை மூண்டெழச் செய்ய, அதன் காரணமாகக் கண்ணிடத்துக் களி வெறியும் எழுந்த காலத்தும் ஊரிடத்து மிக்கெழும் அலருக்கு அஞ்சி, அதனை அடக்கியவராகவே நின்றார்”[10] மற்றோர் பாடலில் ஆரவாரமுடைய பழைய ஊர் அலரினை மிகுத்தக் கூறுவதாய்க் கல்லாடனார்.

**“இளங்கள் கமழும் நெய்தல் அம் செறுவின்**
**வள கெழு நல் நாடு அன்ன என் தோள் மணத்து**
**அழுங்கல் மூதூர் அலர் எடுத்து அரற்ற**
**நல்காது துறந்த காதலர் என்றும்**
**..................**
**மெய் இவண் ஒழியப் போகி, அவர்**
**செய்வினை மருங்கில் செலீஇயர் என் உயிரே” (அகம்.113:6-9,26-27)**

என்று கூறும் அடிகளில் அன்ன சிறப்பினைக் கொண்ட, புதிய கள் மணங்கமழும் கோசரது நெய்தலஞ் செறு என்னும் வளமை சார்ந்த நல்ல நாட்டை ஒத்த தலைவன் என் தோளினைத் தழுவி ஆரவாரமுடன் பழைய ஊரில் வாழும் பெண்டிர் அலர் தூற்ற, தலைவன், தலைவியோடு இல்லாமல் பிரிந்து சென்றான். பருத்த அடிப்பகுதியில் கிளைத்த, அசையும் இயல்புடைய அழகிய கிளைகளில் உள்ள தன் கூடு தனித்துக் கிடப்ப, பறவை தான் செல்ல நினைத்த இடத்துக்குப் பறந்து செல்வதைப் போல, என்னுடைய உடம்பு இவ்விடத்தில் தனித்து கிடக்க, என் வருத்தம் தீருமாறு என் உயிர்

பிரிந்து சென்று. என் தலைவர் வினைபுரியும் இடத்துக்குச் செல்வாயாக! அவ்வாறு சென்றால் தாம் எந்தக்காலத்திலும் தலைவனை எண்ணி அழாது வாழ்வோமாக என அலர் காரணமாக ஊரார் பழி தூற்றுவதால் உயிர் பிரிந்தாவது தலைவனுடன் சேர்தல் வேண்டும் என தலைவி சொல்லியதாகும்.

**தலைவி உடல் மெலிந்து வருந்துதல் :**

தலைவன் வருமளவும் தலைவி மெலிய வண்ணம் ஆற்றுவிக்கும் தோழியிடம் தலைவி,

**"குறு நிலைக் குரவின் சிறு நனை நறுவீ**
**............**
**ஏதிலொட்டி இவள் எனப்**
**போயின்று கொல்லோ, நோய் தலைமணந்தே"** **(நற்.56:1-9-10)**

என்கிறாள். நமது தலைவன் வருமளவும் நான் காத்திருப்பேன் என்றாலும் என்னுள்ளம் என்னிடமிருந்து பிரிந்து சென்று அவரிடத்தே சென்று விட்டது. இனி தலைவனுடனே வந்து சேருமா? என தோழியிடம் தலைவி வருந்திக் கூறுகிறாள். அவன் பிரிவை ஆற்றிக்கொள்ள முடியாத தலைவி அவனை நினைத்து உடல் மெலிந்து போகிறாள்.

தோழிக்குத் தலைமகள் தலைவனின் செயலை எண்ணி உரைத்தது.

**"மன்னர் குழீஇய விழவினானும்**
**மகளிர் தழீஇய துணங்கை யானும்**
**யாண்டும் காணேன், மாண் தக்கோனை:**
**யானும் ஓர் ஆடுகள மகளே : என்கைக்**
**கோடு ஈர் இலக்கு வளை நெகிழ்ந்த**
**பீடுகெழு குரிசிலும், ஓர் ஆடுகளமகனே"** **(குறுந்.31:1-6)**

சிறப்பிற்குரிய என் தலைவனை வீரர் கூடியுள்ள விழாவிடத்தும், மகளிர் தம்முன் தழுவியாடுகின்ற துணங்கைக் கூத்திடத்தும், இவையன்றிப் பிறவிடங்களிலும் தேடி காண இயலவில்லை. அத்தலைவனைத் துணங்கை நடக்கும் இடமெல்லாம் சென்று தேடுவதனால், நானும் ஓர் ஆடுகள மகளாகவே தோன்றுகின்றேன். எனது கையிலுள்ள சங்கு வளைகளை நெகிழவைத்து, என்னையும் மெலிய வைத்த என் தலைவனும் ஓர் ஆடுகள மகனாக மாறி விட்டான்.

மிகுதியான காமத்தால் பெண் தன்னுடைய உள்ளம், அறிவு, மனவலிமை அழிந்ததை,

**"வேதின வெரிநின் ஓதி முது போத்து**
**ஆறுசெல் மாக்கள் புள்கொள, பொருந்தும்**
**சுரனே சென்றனர், காதலர் : உரன் அழிந்து**
**ஈங்கு யான் அழுங்கிய எவ்வம்**
**யாங்கு அறிந்தன்று - இவ் அழுங்கல் ஊரே" (குறுந்.140:1-5)**

வரண்ட பாலை வழியில் என் காதலர் சென்றார். அவரை எண்ணி, என் ஆற்றலை இழந்தவளாக இங்கிருந்து பெரிதும் வருந்தும் துன்பத்தைத் தாங்கியவளானேன். காதலரைப் பரிந்து வலியழிந்து அவர் வருவார் என்ற ஆசையால் துன்பத்தைத் தாங்கித் தான் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பதாகத் தலைவி கூறினாள். இரக்கமுடைய இவ்வூரார் அத்தன்மையை எப்படி அறிந்தனரோ? எனத் தலைவி காமத்தால் புலம்பி தவிப்பதைக் காணமுடிகிறது. தன்னைப் பிரிந்து சென்ற காதலரை எண்ணி தலைவி வாடுவதை,

**"பைதல் ஒருகழை நீடிய சுரன் இறந்து**
**ஏய்தினர் கொல்லோ பொருளே – அல்குல்**

**அவ்வரி வாடத் துறந்தோர்**
**வன்பர் ஆகத் தாம்சென்ற நாட்டே''    (குறுந்.180:4-7)**

பெரிய யானைக் கூட்டங்கள், பேயின் பற்களைப் போன்ற பருத்த நகங்களையுடைய நிலத்தே பாவி நடக்கும் அடியினை உடையவை. யானைக் கூட்டத் தலைவன் வந்து சேரின் அவை அழிந்து வயலின்கண் உள்ள கரும்புகள் முறிந்து வீழ்ந்தன. அந்தக் கரும்பைப் போன்றே வருத்தமுறும் ஒற்றை மூங்கில் தனியாக நீண்டு காணப்படும். அத்தகைய பாலை நிலத்தைக் கடந்து அல்குலின் அழகுத் தேமல் வாடுமாறு நம்மைத் துறந்து சென்ற காதலர் தாம் சென்ற நாட்டில் பொருளினைப் பெற்றாரோ இல்லையோ என குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. யானைகளின் காலிற் தப்பிய ஒற்றை மூங்கில், பருமை குறைந்து வாடிச் சிறுகோலாய்த் தனித்து நிற்பது போலத் தலைவன் செய்த சிறுமைகளால், தான் ஒருத்தி தனித்து வாடும்படி பிரிந்து சென்றார் என தலைவி துன்பத்தின் மிகுதி ஆற்றாது வருந்துகிறாள்.

தோழியிடம் தலைவி நம்முடைய நாணத்தை இழந்து விட நேரிடுமோ என அஞ்சுவதாகவும், அதற்குக் காரணம் காமவேட்கை பெரிதாக உள்ளது உடம்பிலுள்ள உயிரோ மிகமிகச் சிறிதாக உள்ளது. மேலும், வருத்தத்தைத் தரும் யாமங்களும் பலவாயின. அத்தகைய யாமங்களில் உறங்காகபடி, தலைவனைப் பிரிந்து வருந்துவதை,

**''அரிதே தோழி நாண் நிறுப்பாம் என்று உணர்தல்**
**பெரிதே காமம் என் உயிர் தவச் சிறிதே**
**,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,**
**தீயினால் சுடுதலோ இலர் மன் ஆயிழை**
**தீயினும் கடிது, அவர் சாயலின் கனலும் நோய்'' (கலி.137:1-2,21-22)**

என்னும் பாடலில் தலைவி, நெருப்பிலே சுட்டு ஒட்டவைத்த பொன்னாற் செய்த அணிகலன்கள் ஒலிக்கும்படி, உடம்பு மெலிந்து, நாணத்தால் நடுங்கி, படுக்கையில் கிடக்கும் போது உடல் முழுவதும் காமத்தீ பரவியது. வலிமையற்ற நெஞ்சு வருந்தும் படி நின்னிற் பிரியேன் என்று தெளிவித்த சொல்லால் வருத்தியது வல்லவனால் வடிவமைத்த கடிய வில்லினால் எய்தால் ஏற்படும் வலியை விட கடிதாய் இருந்தது அவர் சொல்லினாற் பிறந்த நோய் என தலைவி தோழியிடம் கூறினாள். இதனை வள்ளுவர்,

**“தீயினால் சுட்டபுண் உள்ளாரும் ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு”  (குறள்:129)**

எனக் குறிப்பிடுவதை அறியலாம்.

**காம மிகுதியால் தலைவி உறக்கமின்றித் தவித்தல் :**

தலைவனைப் பிரிந்து வாழும் தலைவியின் உள்ளத்தினைப் படம்பிடித்துக் காட்டுவதாய் இப்பாடல் அமைந்துள்ளது.

**“அதுகொல், தோழி! காம நோயே?**
**வதிகுருகு உறங்கும் இன்நிழற் புன்னை**
**உடைதிரைத் திவலை அரும்பும் தீம்நீர்**
**மெல்லம் புலம்பன் பிரிந்தென,**
**பல்இதழ், உண்கண் பாடு ஒல்லாவே”  (குறுந்.5:1-5)**

கடற்கரையில் நிழல்தரும் புன்னை மரங்களில் தங்கியிருக்கும் நாரைகள் கவலையின்றி உறங்குகின்றன. கடல் அலைகள் மோதுவதால் புன்னை மரங்களில் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. அத்தகைய கடற்கரையை உடையவன். நம்மைப் பிரிந்து சென்ற தலைவன், அவன் இடத்தில் நன்கு துயில் கொள்வார். நான் மட்டும் இங்கு உறக்கமின்றித் தவிக்கின்றேன் என்ற

பாடலின் கருத்து தலைவியின் உள்ளத்து உணர்வினையும், உலகியல் பாங்கினையும் வெளிப்படுத்துகிறது.

காதல் கொண்ட பின் தலைவன் தலைவியை வரைவிடை வைத்துப் பிரிந்து சென்றான். தலைவன் குறித்த காலத்தில் வராததை எண்ணி வருந்தும் தலைவி தோழியிடம்,

**"நள்ளென் நன்றே யாமம் சொல்அவிந்து**
**இனிது அடங்கினரே மாக்கள் முனிவு இன்று**
**நனந்தலை உலகமும் துஞ்சும்**
**ஓர்யான் மன்ற துஞ்சா தேனே" (குறுந்.6:1-4)**

என்கிறாள். இருள் செறிந்த நடுவாகிய யாமத்தில் மனிதர்கள் பேச்சு அடங்கினர். உலக உயிர்கள் அனைத்தும் வெறுப்பின்றி உறக்கத்தில் மூழ்கி விட்டன. தலைவன் பிரிவு என்னைத் துன்பக் கடலில் ஆழ்த்துவதால் இந்த இரவில் உறங்காதவளாக நான் மட்டுமே உள்ளேன். தலைவனை எண்ணி தலைவி உறக்கமில்லாது தவிப்பதை அறிகிறோம். உறக்கம் என்பது உழைத்த உடலுறுப்புகளுக்கு ஓய்வு தருவதே ஆகும். மனம் உறங்காத நிலையில்தான் சிந்தனைவரும். சிந்தனைதான் மனிதனுக்குக் கனவாக வருகிறது. கனவு வாழ்வுடன் நினைவு வருகிறது. அதனால், விழியுறங்கவில்லை சிந்தனை உறங்கவில்லை என்பது கவிஞரின் அனுபவத்தைக் காட்டுகிறது. ஒருவர் மனமும் விழியும் சேர்ந்து உறங்கினால் தான் உறக்கம் முழுமையானதாக அமையும்.

தலைவனில்லாது வருந்தும் தலைவியின் தனிமைத் துயரை அனைவரும் உறங்கும் இரவுப் பொழுது மிகுவிக்கும் தன்மையை இலக்கியங்கள் பதிவு

செய்துள்ளன. காமநோய் கொண்டு துயிலாது துன்பத்தில் உழலுதலும், இரவுப்பொழுது உலகத்து உயிர்களையெல்லாம் துயிலச் செய்கிறது. யான் ஒருத்தியே உறங்காமல் உள்ளேன் எனக் குறுந்தொகையில் தலைவி வருந்துவதைப் போன்று திருக்குறளில் வள்ளுவர்,

**“காமக் கரும்புனல் நீந்திக் கரைகாணேன்**
**யாமத்தும் யானே உளேன்” (குறள்.1167)**

எடுத்துரைப்பதைக் காண முடிகிறது.

பருவ வரவின்கண் கவன்ற தோழிக்குக் தலைவி உரைத்தது

**“ஆர்கலி ஏற்றொரு கார்தலை மணந்த**
**கொல்லைப் புனந்த முல்லை மென்கொடி**
**எயிறுஎன முகையும் நாடற்குத்**
**துயில் துறந்தனவால் - தோழி ! – எம் கண்ணே” (குறுந்.126:1-4)**

தலைவி தோழியிடம் இடி முழக்கத்துடன் கார் காலமும் தோன்றியது. முல்லை நிலத்தின் கொல்லைப் புறங்களில் மழையும் பெய்தது. மெல்லிய கொடிகள் முறுவலிக்கும் பற்களைப் போல மொட்டுகள் அரும்புகின்ற நாட்டை உடைய தலைவனுக்காக என்னுடைய கண்கள் உறக்கத்தைத் துறந்தன என்ற தலைவி மற்றோர் பாடலில் தலைவனை எண்ணி துன்பத்தால் கண்கள் உறங்காத நிகழ்வைத் தலைவி தோழியிம் கூறுதல்,

**“துஞ்சா வாழி – தோழி! – காவலர்**
**கணக்கு ஆய் வகையின் வருந்தி, என்**
**நெஞ்சுபுண் உற்ற விழுமத்தானே” (குறுந்.261:6-8)**

எள்ளின் குருட்டுக் காய்களுக்கு இனியவாகச் சிலமழை தூவும் கார்ப்பருவத்தின் இறுதிநாட்களில் சேற்றில் நிற்பதை விரும்பாத சிவந்த

கண்களையுடைய எருமை, நள்ளிரவில் 'ஐ' என ஒலியெழுப்பும். இத்தகைய அச்சத்தைத் தரும் கூதிர்பருவத்தும், இரவுக்காவலர், நொடிப் பொழுதையும் கணக்கிட்டு ஆராயும் தன்மையைப் போல தானும் இரவைக் கணக்கிட்டு வருந்தி, நெஞ்சமும் புண்பட்டுப் போனது. இரவின் துன்பத்தால் என் கண்கள் உறங்கவில்லை என தலைவி வருந்தி கூறினாள்.

**தலைவி தன் நெஞ்சுக்குக் கூறியது**

அம்மூவனார் பாடிய பாடல், தலைவி தன்னுடைய ஆற்றாமையைக் கடலின் மேல் ஏற்றிக் கூறும் மரபு பற்றியதாக அமைகிறது.

**"யார் அணங்குற்றனை – கடலே! பூழியர்**
**சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன**
**மீன் ஆர் குருகின் கானல் அம் பெருந்துறை,**
**வெள்வீத் தாழை திரைஅலை**
**நள்ளென் கங்குலும் கேட்கும், நின் குரலே!" (குறுந்.163:1-5)**

பாடலில் கடலே பூமி நாட்டாரது சிறிய தலையையுடைய வெள்ளாட்டுக் கூட்டம் எங்கும் பரவினாற் போல மீனை உண்ணும் கொக்குகள் பரவி நிற்கும், கடற்கரைச் சோலைகளையுடைய பெரிய நீர்த் துறைக்கண், தழையின் வெள்ளை நிறப்பூவைக் கடல் அலைகள் வந்து மோதி அலைக்கும் இருள் செறிந்த நள்ளிரவிலும், உன் குரல் எங்கும் கேட்கின்றது. என்னைப் போல நீயும் யாரால் துன்புறுத்தப்பட்டதைச் சொல்வாயாக என்று தலைவி தன்னுள் பேசுவதாகப் பாடல் அமைகிறது. தனக்கேற்பட்ட மிகுந்த துன்பத்தால் செயலற்று வருந்தி எதனுடனாவது தானாகப் பேசுகின்ற இந்நிலையினை உளவியல் சார்ந்து தலைவி பல்வேறு துன்பத்துடன் குறிப்பிடுவதைக் காணமுடியும். காமம் மிக்க கழிபடர் கிளவிக்குரிய விளக்கத்தில் தலைவி

என்பவள் தன்நிலை மறந்து இயற்கைப் பொருள்களோடு பேசுவதாக அமைகின்றது. தலைவனின் பிரிவைத் தாங்க மாட்டாத தலைவியின் வருத்தமானது இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாக அமைகின்ற குறிப்புகளாக இப்பாடல்களில் வெளிப்பட்டுள்ளதனைக் காண்கிறோம்.

தலைவியானவள் தலைவனைச் சந்திக்க இயலாத நிலையில் அதனை ஆற்றாத நிலையில், தலைவனிடத்துச் சென்ற நெஞ்சினை நோக்கி,

**“எல்லையும் இரவும் துயில் துறந்து, பல்ஊழ்**
**அரும்படர் அவல நோய் செய்தான் கண்பெறல் நசைஇ,**
**இருங்கழி ஓதம் போல் தடுமாறி,**
**வருந்தினை – அளிய என் மடம் கெழு நெஞ்சே”  (கலி.123:16-19)**

அறியாமை பொருந்திய அளிக்கத்தக்க என் நெஞ்சமே, பொறுத்தற்கரிய வருத்தத்தைக் கொடுக்கும் காமநோயைச் செய்தவனை எண்ணி இரவும் பகலும் என் உறக்கத்தைக் கைவிட்டேன். தடுமாறும் தன்னைப் போல், பல்வேறு நிலைகளில் பல முறை அவனை அடைய விரும்பி, வீணாக அலைந்து நிலை தடுமாறி வருத்தமடைந்தேன். அவனிடத்து நீ பெற்றது என்ன? என்று மனம் அழிந்து தலைவி கூறியது தலைவியின் நெஞ்சம் அவளுடைய கட்டுப்பாட்டிலிருந்து நீங்கித் தலைவனையே நாடிச் சென்றதனை இங்கு உணர முடிகிறது. அதனால்தான் மட நெஞ்சே என்று தலைவி ஒவ்வொரு தடவையும் விளிக்கின்றாள். நெஞ்சை உணர்வுடையது போல் சுட்டிக் கூறினாள் தலைவி.

அகநானூற்றில் ஔவையின் பாடலில் தலைவி பல சிறப்புகளை உடைய காமம் நம்மையும் அறியாதபடி மற்றவர்க்குப் புலனாகிறது. வெற்றி பொருந்திய வேலையும் வீரம் மிக்க படையையும் பசும் பொன்னாலான பூண்களையும் உடைய சேர மன்னனின், மேகம் விரும்பி மழை பெய்த

தெய்வம் விரும்பி வாழும் அகன்ற இடத்தையுடைய கொல்லி மலை உச்சியில் பரவிச் செறிந்து விழும் அருவியின் ஒலியினைப் போல் தலைவன் பால் கொண்ட காதல் அலராகி வெளிப்படுமாறு நம் தலைவர் நம்மைப் பிரிந்து சென்றார். வள்ளல் பாரி தம்முடைய அறிவினையே பற்றுக் கோடாகக் கொண்டு பரிசிலர் வருவராயின் அவர்களுக்கு மலைபோலும் களிறுகள் பலவுடன் நல்ல அணிகலன்களைப் பரிசாகக் கொடுப்பவன். அம்மலையில் வரிசையாயப் பறக்கும் குருவிக்கூட்டம் காலையில் பறந்து சென்று முற்றிய நெற்கதிர்களைத் கொணரும் பொருட்டு அந்நெற்கதிர்கள் உள்ள இடத்தை ஆராய்ந்து திரியும் தன்மையுடையனவாய், கதிரவன் மறையும்போது, துன்பத்தைத் தரும் மாலைப் பொழுதில் திரும்ப வரும். அவற்றைப் போன்று தலைவர் திரும்ப வருவர் என்று நினைத்த அறியாமை பொருந்திய நெஞ்சமே! உன் ஐயம் நீங்கப் பெற்றுத் தெளிவு அடைவாயாக! என தலைவி கூறுகிறாள்.

**"இடைபிறர் அறிதல் அஞ்சி, மறை கரந்து**
**பே எய் கண்ட கனவின். பல்மாண்**
**நுண்ணிதின் இயைந்த காமம் வென்வேல்**
**மறம் மிகு தானை, பசும்பூண், பொறையன்**
**கார்புகன்று எடுத்த சூர்புகல் நனந்தலை"     (அகம்.303:1-5)**

என்பது பாடல். தன் நெஞ்சிற்கு வற்றல் மரங்களிலே பொருந்தியுள்ள சீள்வீடு என்னும் வண்டுகள், உப்பு வணிகருடைய கூட்டமாகச் செல்லும் எருதுகளின் கழுத்தில் கட்டிய மணிகளின் ஒலியினைப் போல் ஒலிக்கும். பாலை நிலத்தைக் கடந்து, நீர்வற்றும் பொழுது அதிலுள்ள மீன் நீருள்ள இடத்துக்கு மீண்டும் சென்றாற் போல, யானும் எம் தலைவர் சென்றவழி செல்வதற்குத் துணிந்துவிட்டேன் என நெஞ்சுக்குத் தலைவி உரைத்தாள்.

**மாலைப் பொழுதில் தலைவி துன்பமடைதல்**

தலைவனுடன் இணைந்து இருந்த சோலை அவன் பிரிந்து சென்றவுடன் பாலைவனம் போன்று தோன்றுகிறது எனத் தலைவி வருத்தம் படக் கூறுகிறாள்.

**"மெய்ம் மலி காமத்து யாம் தொழுது ஓழிய**
**தேரும் செல் புறம் மறையும் ஊரொடு**
**யாங்கு ஆவதுகொல் தானே - தேம் பட" (நற்.187:5-7)**

பலவாகிய மலர்களைக் கொண்ட கடற்கரைச் சோலையும் தன் தோற்றப் பொலிவை இழந்தது. இப்பொழுது என் உடம்பில் மிகுந்து தோன்றிய காம உணர்வால், அக்காம உணர்வைத் தணிக்கும் செயலறியாது பின்னே நின்று தொழுது நீங்குமாறு மாலைப் பொழுதும் மறைந்தது. தேனை விரும்பி மலர்களிற்படுகின்ற வண்டுகள் ஒலிக்கும் மாலையை அணிந்த மார்பினிடத்து ஒளிவிடும் வளைந்த பூணை உடைய நம் தலைவனுடன் நாம் இனிய மகிழ்ச்சி பெருக விளையாடிய சோலையில் தலைவனுடன் ஒன்று சேர்ந்து முயங்காத விடத்துச் சோலை தனக்கு எத்தகையதான துன்பத்தைத் தருமே என தலைவி கருதினாள்.

**தலைவியின் வருத்த மிகுதி**

செவிலியர் தேற்ற மொழிகளைக் கூறுமிடத்து, துயரம் மிக்கு வருந்தும் நிலையில்,

**"உரோகிணி நினைவனள் நோக்கி நெடிது உயிரா**
**மாஇதழ் ஏந்திய மலிந்து வீழ் அரிப்பணி**
**செவ்விரல் கடைக்கண் சேர்த்தி சில தெறியா**
**புலம்பொடு வதியும் நலம் கிளர் அரிவைக்கு" (நெடு.160:65)**

எனும் பாடலில் குறிப்பிடுவதிலிருந்து தலைவனைப் பிரிந்த தலைவி தனிமை தாங்காது வருந்திய பொழுதும் கற்பறத்தைப் பேணிகாக்க வேண்டிய சூழலில் பெண் இருக்கிறாள் என்பதைக் காட்டுகிறது. குடும்பத்தின் மைய அச்சாக ஆண் செயல்படுகையில் அந்த மைய அச்சைச்சுற்றியே சுழலும் இயல்புடையவளாகப் பெண் இருந்துள்ளாள் என்பதையும் அறிய முடிகிறது. திருக்குறளில் காதலி “காதலர் என்னுடன் இருந்தபோது மாலைநேரம் எனக்கு இன்பம் தந்து கொண்டிருந்தது. இப்போது காதலர் என்னைப் பிரிந்துள்ள போது கொலைக் களத்திற்குக் கொலைஞர்கள் வருவதுபோல என்னுடைய உயிரைக் கொண்டு போவதற்கென்றே வருகிறது”[11] எனத் தலைவி மாலையின் துயரத்தைக் குறிப்பிடுவதைக் காணலாம்.

தலைவனைப் பிரிந்து தனித்திருக்கும் தலைவியானவள் தன் பிரிவினைப் பொறுக்க மாட்டாதவளாய்த் தன்னைக் கட்டுப்படுத்த இயலாத மனத்தினளாய் பெரிதும் துயருற்றுத் தலைவனை நினைத்துப் பார்த்துக் கூறும் கிளவிகள் காமம் மிக்கக் கழிபடர் கிளவிகள் என அழைக்கப்படுகின்றன. தலைவி தன் நாணம் துறந்து இத்தகைய பேச்சுகளைப் பேசும் போக்கினை நெய்தல் திணைப் பாடல்களில் மட்டும் காணமுடிகின்றது. அதற்கொப்பக் குறுந்தொகையின் நெய்தற்கலி 92 ஆம் பாடல், தலைவனின் பிரிவினால் ஏற்பட்ட காமநோயினைப் பொறுத்துக் கொள்ள இயலாத தலைவியானவள் தனித்திருக்கும் தன் நிலைமையை எண்ணி வருந்திப் பாடுவதாக அமைந்துள்ளது.

**“ஞாயிறு பட்ட அவல்வாய் வானத்து**
**அளியதாமே – கொடுஞ்சிறைப் பறவை**

**பிள்ளை உள்வாய்ச் செரீஇய**
**இரை கொண்டமையின் விரையுமால் செலவே'' (குறுந்.92:2-5)**

இவ்வாறு பாடுவதே காமம் கழிபடர் கிளவிகள் எனச் சொல்லப்பட்டுள்ளன. ஆணும் பெண்ணுமாகிய இரண்டு பறவைகளும் காதல் செய்து இன்புற்றுப் பிள்ளைப்பேறு எய்தி அவைகளுக்காக இரைதேடி மாலைப் பொழுதில் தம் கூடு நோக்கி வந்து தத்தமது குஞ்சுகளை இனிது பாதுகாப்பது போலத் தானும் தன் தலைவனை மணம் முடித்து மகப்பேறு எய்தி இனிது பாதுகாத்து மகிழ்தல் வேண்டும் என்று விரும்புகின்ற தலைவியின் காமம் குறிப்பு இப்பாடலில் நன்றாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. மென்மையான இரக்கத்திற்குரிய பறவைகள் கூடத் தம்குஞ்சுகளை நினைத்துக் கூடுகளுக்குத் திரும்ப கூடிய இம்மாலைப் பொழுதினில், பொருளீட்டும் பொருட்டுத் தம்மை விட்டுப் பிரிந்த நம் தலைவன் உரிய காலத்தில் இன்னும் வரவில்லையே? என்ற ஏக்கக் குறிப்பும் இப்பாடலின்வழி புலனாகிறது.

மாலைப் பொழுதின் துன்பத்தினைக் கண்டு தலைவி தோழியிடம் கூறுதல்.

**''புள்ளும் மாவும் புலம்பொடு வதிய**
**நள்ளென வந்த நார்இல் மாலை**
**பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்**
**வருவீர் உளீரோ? எனவும்**
**வாரார் - தோழி! - நம் காதலோரே'' (குறுந்.118:1-5)**

பறவைகளும், விலங்குகளும் மாலை பொழுதில் தம் இருக்கைகளை அடைவதைக் கண்ட தலைவி, நள்ளென ஓசையுடன் வந்தது. அன்பில்லாத மாலைப் பொழுது பலரும் புகுவதற்குரிய வாயிலை அடைப்பதற்கு எண்ணிக்

குரல் கொடுப்பவர் உள்ளே வருவதற்கு எவரேனும் உள்ளீரோ? என்றனர். அவ்வாறு குரல் கொடுத்தும் நம் காதலர் வரவில்லையோ! தலைவி பறவைகளைப் போலவும், விலங்குகளைப் போலவும் இரவில் புணர்ச்சியின்றிக் கிடக்கும் தன்னுடைய தனிமையை எண்ணி, மாலைப் பொழுதினை, 'அன்பில்லாத மாலைப்பொழுது' என தலைவி இழித்துரைத்தாள்.

தான் அடையும் துன்பத்தைத் தலைவி தோழி வாயிலாகக் கூறியது.

**"தாஅவல் அஞ்சிறை நொப்பாறை வாவல்**
**பழுமரம் படரும் பையுள் மாலை**
**,,,,,,,,,,,,,,,,,,,,,,,,,**
**உலைவாங்கு மிதிதோல் போலத்**
**தலைவரம்பு அறியாது வருந்தும் என் நெஞ்சே" (குறுந்.172:1-2,6-7)**

வலியும் வனப்பு மிகுந்த சிறகுகளையும் மெம்மையாகப் பறத்தலையும் கொண்ட வெளவால் தனிமைக்குத் துன்பம் தரும் மாலைப் பொழுதிலே, பழங்கள் பழுத்த மரத்தை நாடிச் செல்லும். அந்நேரத்திலே நான் மட்டும் தனியாக இருக்குமாறு என்னை இங்கு வைத்துப் பிரிந்து சென்றவர். அனைத்து மக்களுக்கும் பொதுவாகிய தொழிலுக்காக, ஓர் ஊரில் அமைக்கப் பெற்ற உலையில் உள்ள, வலிந்து அமுக்கும் துருத்தியின் தோல் போல என் உள்ளமும் அளவற்ற 'துன்பத்தை' பெறுகின்றதே என்றும் மாலை பொழுது, இரவினை உடன் கொண்டு வருவதாகலின் மாலை தோன்றிய உடனே பிரிவுத் துயரம் தோன்றிற்று, ஆதலின் அதனைத் துன்பம் தரும் மாலை என்றார். இன்று மாலை உணவு கிட்டுமோ என்ற வருத்தம் வெளவால்களுக்கு இருப்பது போல, இன்று மாலை, தலைவர் தன்னுடைய தனிமையைத் தீர்க்க வருவாரோ என்ற வருத்தம் தலைவியிடம் துன்பமாக இருப்பதைக் காணமுடிகிறது.

தலைவன் பிரிந்த நிலையில் ஆற்றாத தலைவி, மாலைப் பொழுதில் தனியே வருந்தி நிற்க, அதனைத் தோழி கேட்பத் தலைவி கூறியது.

**"வெல்புகழ் மன் னவன், விளங்கிய ஒழுக்கத்தால்,**
**நல் ஆற்றின் உயிர்காத்து, நடுக்கற தான் செய்த**
**..........................**
**ஆய்சிறை வண்டு ஆர்ப்ப, சினைப்பூப் போல் தளை விட்ட**
**காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்**
**தகைமிக்க புணர்ச்சியார், தாழ்கொடி நறுமுல்லை**
**முகை முகம் திறந்தன்ன, முறுவலும் கடிகல்லாப்"**

**(கலி.118:1-2,11-14)**

களவுக் காலத்தில் தலைவியைப் பிரிந்து சென்றான் தலைவன். தலைவி அதனால் மிகவும் வருந்தி உடல் மெலிந்தாள். மயக்கத்தை உடைய மாலைக் காலமும் வந்தது. மந்தைகளும் வீடு திரும்பின. பறவைகளும் வீடு திரும்பின. அவள் உள்ளம் வீடு திரும்பாத கணவனை நினைத்து வருந்துகிறது. மாலையை நோக்கி மனம் வருந்திப் பேசுகிறாள் என்பதைப் பாடல் அடிகளில் காணமுடிகிறது. பிரிந்து என்னை நினைக்காது அன்பு இல்லாத உள்ளத்துடன் இருப்பவரை, எண்ணி, எண்ணி உள்ளம் தவிக்கிறது. வருகின்ற மாலைப் பொழுதில் ஊரார் கூறும் அலரையும் தாங்காது நெஞ்சமும் நம்மை விட்டுப் போகாது வருந்தி நின்றது. இனி நான் என்ன செய்வேன் என தலைவி வருந்தினாள்.

**தலைவி கண்களில் நீர் வடிதல்**

தலைவனைப் பிரிந்த தலைவியின் கண்கள் கண்ணீர் சொரிந்தமையால், மலர் போன்ற அழகினை இழந்தமையைக் குறுந்தொகை,

**"புனவன் துடவைப் பொன்போல் சிறுதினைக்**

**..........................**

**சூர்மலை நாடன் கேண்மை**

**நீர்மலி கண்ணொடு நினைப்பு ஆகின்றே" (குறுந்.105:1-5-6)**

என்கின்றது. பாடலினைப் போன்று, மலரும் நாணும்படியான அழகை உடைய தலைவியின் கண்கள் தலைவனைப் பிரிந்தமையால் அழகிழந்தமையை,

**"சிறுமை நமக்குஒழிய சேண்சென்றார் உள்ளி**

**நறுமலர் நாணின் கண்" (குறள்.123)**

என்ற குறளின் வழி வள்ளுவர் எடுத்தியம்புவதைக் காணமுடிகிறது.

தலைவன், தலைவியைப் பிரிந்து வினையின் கண் செல்கிறான். அவன் வந்த பின்பு அவனுக்குத் தலைவி விருந்து படைக்கின்றாள். இருப்பினும் அவளது கண்கள் காதலால் பெறும் கொடுமையைக் காட்டுகின்றன.

**"அரும்பெறற் காதலர் வந்தென, விருந்து அயர்பு**

**மெய்ம்மலி உவகையின் எழுதரு**

**கண்கலிழ் உகுபனி அரக்குவோரே" (குறுந்.398:6-8)**

என்னும் பாடல் அடிகளின் மூலம் அறியலாம். மாலைப்பொழுது தலைவியை மிகுந்த துன்பத்தில் ஆழ்த்தியது. கண்களில் நீர் பெருகிய நிலையில் அதனைத் துடைப்பதற்குத் துணையாக வருபவரைப் பெற்ற நான், அவர் பிரிந்து சென்ற நிலையில் ஆற்றாமையால் பெருகும் கண்ணீரைத் துடைப்பவரைப் பெறவில்லை எனத் தலைவி வருந்தினாள். இப்பாடலில் காதலர்கள் ஒருவரை ஒருவர் நோக்கும் பொழுது காமமிகுதியைக் 'கண்ணானது காட்டிவிடுதலை' உணர்த்துகிறது.

பிரிவினைத் தாங்காது வருந்திய தலைவி மெலிந்து தோழியிடம் உரைத்தது.

**“சேறும் சேறும் என்றலின், பண்டைத் தம்**
**மாயச் செலவாத் செத்து மருங்கு அற்று**
**……………………..**
**கருங்கால் வெண்குருகு மேயும்**
**பெருங்குளம் ஆயிற்று என் இடைமுலை நிறைத்தே” (குறுந்.325:1-2,5-6)**

தலைவன் முன்னா் கூறிய பொய்ச் செலவென எண்ணி என்னிடமிருந்து நீங்கி நிலையாகப் போய்விடுக என்றேன். அதலால் தனிமையால் வருந்தும் எனக்குத் துணையாக விளங்கிய தலைவன். தற்போது எங்கு இருக்கின்றானோ? பிரிவின் துயரால் என் முலைகளின் இடையே நான் அழுத கண்ணீா் நிரம்பி. கருங்கால் வெண்ணிற நாரைகள் மேயும் பெருங்குளம் போல ஆனது என காம மிகுதியைத் தலைவி வெளிப்படுத்துவதைப் பாடலில் காணமுடிகிறது.

தலைவி தோழியிடம் வானில் இயங்குகின்ற ஒளியினைக் கொண்ட ஞாயிற்று மண்டிலம் நெருப்பைப் போன்று செந்நிறங் கொண்டு சுட்டெரிக்கும். வெப்பம் மிகுந்த காட்டகத்தே, இலைகளே இல்லையாக அரும்பு இல்லையாகப் பலவும் ஒருங்கே மலா்ந்த இலவம் பூக்கள், ஆரவாரத்தைக் கொண்ட மகளிா் கூட்டம் சோ்ந்து மகிழ்ந்து எடுத்த அழகிய காா்த்திகை விளக்கின் நெடிய வரிசை போலப் பொலிவு பெற்றுத் தோன்றும். அங்குக் குளங்கள் துகள்பட்டுப் படிந்திருக்கும். மழை வளம் தவறிய காட்டில் தலைவா் என்னை உடன் அழைத்துச் சென்றால், கச்சினை விரித்துப் பரப்பி வைத்தமை போன்று விளங்கும் மணல் மிக்க காட்டாற்றில் மிகுந்த பூங்கொத்துகளையுடைய பெரிய மரக் கிளைகள் தாழ்ந்து மணல் மேட்டில், உடல்கள் ஒன்றுடன் ஒன்று

புகுவதைப் போன்று கைகளால் கவர்ந்து தழுவுதலை அன்பு தோன்ற அவரும் பெற்று மகிழ்வர். மேலும்,

**“மெய் புகுவு அன்ன கை கவர் முயக்கம்**
**அவரும் பெறுகுவர் மன்னே! நுயவர**
**நீர் வார் நிகர் மலர் கடுப்ப ஓ மறந்து**
**அறு குளம் நிறைக்குற போல, அல்கலும்**
**அழுதல் மேவல ஆகி**
**பழிதீர் கண்ணும் படுகுவமன்னே” (அகம்.11:10-15)**

எனும் இப்பாடலில் என் குற்றம் இல்லாத கண்களும் நீரைச் சிந்தும் மலரைப் போன்று ஒழிதலின்றி நீர் வற்றிய குளத்தை நிறைக்கும் கால்வாய்களைப் போன்றது. நாள்தோறும் அழுது கண்ணீர் வடித்தலைப் பொருத்தாதனவாய் இன்பம் உண்டாகத் துயில்கொள்வோம். இவ்வாறு இருவகையிலும் இன்பம் உண்டாகும் செயலைச் செய்திலர் என்பதற்கே வருந்துகிறேன். பிரிவினைப் பொறுக்காமல் வருந்த மாட்டேன் என தலைவி கூறுவதைப் பாடலால் அறியலாம்.

கபிலர் பாடிய அகநானூற்றுப் பாடலில் எழில்மிகு ஆடவன் ஒருவன் தினைப்புனத்தின் அருகில் வருகின்றான். அவனைப் பலரும் கண்டனர். தலைவி அவனது எழிலைக் கண்டு வியந்து காமத்தால் உடல் மெலிந்து இரவில் தூக்கமில்லாமல் கண்ணீர் விடுகிறாள். இதற்குக் காரணம் என்னவோ? என்று தோழியிடம் கேட்டாள். தோழி,

**“நனவுப் புகு விறலியின் தோன்றும் நாடன்**
**உடுவ வல் விற் பற்றி, அம்பு தெரிந்து**
**செருச் செய் யானை செல் நெறி வினாஅய்**

...............................

..............................

**ஓர் யான் ஆகுவது எவன் கொல்**

**நீர் வார் கண்ணோடு, நெகிழ் தோளேனே"  (அகம்.82:10-12,16-17)**

என்கிறாள். இப்பாடலில் அழகான எழில்மிகு ஆடவனைக் கண்ட தலைவி புதுமை என்னும் மெய்ப்பாட்டு உணர்வினை உணருகின்றாள்.

**காமத்தால் தலைவிக்கு நோய் உண்டாதல்**

காமத்தால் துடித்த தலைவி தோழியிடம் நம்மைக் கைவிட்ட அவரை இனி நினைத்தல் வேண்டாம். எனது உள்ளம் அவரோடு சென்றதனால் என உடம்பின் பொலிவு அழிந்தது. இனி அவரே வந்தாலும் நம் நோய்க்கு மருந்தாக அமையாது. ஆதலால் அவர் அங்கேயே இருக்கட்டும். நம் நோயினை நம்முடைய அவர் காணாதிருக்கட்டும் என்பதை,

**"அறிவும் உள்ளமும் அவர் வயின் சென்றென,**
**வறிதால் இருளை! என் யாக்கை இனி அவர்**
**வரினும் நோய் மருந்து அல்லர் வாராது**
**அ வணர் ஆகுக, காதலர் இவண் நம்"  (நற்.64:8-11)**

எனத் தலைவி மேற்கண்ட பாடலின் மூலம் தோழிக்குக் கூறுகிறாள். இதனை "என் யாக்கை காமத்தால் மெலிந்து ஓங்கி வறிதாயிற்று. இனி அவர் வரினும் என் நோய்க்கு மருந்தாகார். போன இடத்திலேயே அவர் இருப்பாராக என்று மொழிகின்றாள். இல்வாழ்க்கையில் காதல் நுகர்ச்சிக்கு ஒத்த மதிப்புக் கொடாது, இளமையை வேண்டுமளவு நுகராது. பொருள் முதலாயவற்றில் நாட்டம் கொண்டு ஒழுகுவது மிகையாதலின் இளமை தீர்திறம் பெருந்திணையாயிற்று"[12] என வ.சுப.மாணிக்கனார் குறிப்பிடுவதை அறியலாம்.

தலைவன் பொருள் தேடிப் பிரிந்தான். அவன் காலம் நீட்டித்தமையால் அதனைத் தாங்காது வருந்திய தலைவியை நோக்கித் தோழி தலைவன் விரைந்து வருவான் வருந்தாதே என்றாள்.

**“தோளே தொடி கொட்டி ஆனா, கண்ணே**
**வாள் ஈர் வடியின் வடிவு இழந்தனவே**
**நுதலும் பசலை பாயிற்று - திதலைச்**
**சில் பொறி அணிந்த பல் காழ் அல்குல்**
**……………**
**இரும்பு செய் கொல்லன் வெவ் உலைத் தெளித்த**
**தொய் மடற் சீல் நீர் போல**
**நோய் மலி நெஞ்சிற்கு ஓமம் ஆம் சிறிதே” (நற்.133:1-4,9-11)**

என்பது பாடல். தலைவன் பிரிவால் வாடும் எனக்கு அவர் விரைந்து வருகின்றார் எனக் கூறும் தோழியின் அன்புமிக்க இச்சொல்லானது; இரும்பு வேலை செய்கின்ற கொல்லன் தனது வெம்மை மிகுந்த உலையிலே பனைமடலில் தோய்த்துத் தெளிக்கும் சிலவாகிய நீர்த்துளிகள் உலையின் நெருப்பினைச் சிறிதே குறைப்பது போல; காமநோய் மிகுந்த என் நெஞ்சில் அந்நோயைச் சிறிது தணிந்துப் பாதுகாப்பைச் செய்வதாயின என தலைவி கூறினாள்.

புன்னை மரங்களில் வெள்ளியைப் போல மலர்ந்து விளங்கும் பூங்கொத்துக்களின் நடுவிலிருந்து பொன் துகளைப் போன்று மணமுடைய, மகரந்தம் உதிரும், வரியையுடைய வண்டுகள், புன்னை மலர்களில் வந்து தேனை நுகர்ந்து உண்ணும். அப்பொழுது எழுந்த வண்டின் இசையைப் புலியின் ஓசையே எனத் தேரில் பூட்டப்பெற்ற குதிரைகள் அஞ்சுவதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

**“நோய் அலைக் கலங்கிய மதன் அழி பொழுதில்**
**காமம் செப்பல் ஆண்மகற்கு அமையும்**
**யானே பெண்மை தட்ப நுண்ணிதின் தாங்கி –**
**...........................**
**மண்ணாப் பசு முத்து ஏய்ப்ப குவி இணர்ப்**
**புன்னை அரும்பிய புலவு நீர்ச் சேர்ப்பன்**
**என்ன மகன்கொல் - தோழி! – தன்வயின்**
**ஆர்வம் உடையர் ஆகி**
**மார்பு அணங்குறுரை அறியாதோனே”** **(நற்.94:1-3,5-9)**

காமநோய் நம்மை வருத்துகின்ற போது நாம் மனம் கலக்கமுற்று வலிமை அழிகின்ற காலத்தில் நமக்கு அன்புகூறி அனைத்து நம்மை ஆற்றுவித்தல் ஆண்மகனுக்கு உரிய பண்பாகும். நான் அத்தகு காமநோயால் வருந்திய பொழுதில் தலைவன் என்னை ஆற்றினானல்லன். கைத்தொழில் வல்ல கம்மியன் அழகுபெறக் கழுவித் தூய்மை செய்யாத பசியமுத்து தனது ஒளியை வெளியே செலுத்தாது மறைந்தாற் போல நானும் புணர்ச்சியால் நிகழ்ந்த மிக்க நலனைப் புலப்படாமல் அரிதாகத் தாங்கிக் கொண்டு என் பெண்மையால் தடுத்துக் கொண்டேன். குவிந்த இதழ்களை உடைய பூங்கொத்துக்களைக் கொண்ட புன்னை மரத்தில் புலவு நாற்றத்தைக் கொண்ட நீர் தெறித்து விழுவதால், அம்மரத்தின் மலர்கள் மலர்கின்ற கடற்கரைக்குத் தலைவன் என் உணர்ச்சியை, உள்ளத்தின் காம உணர்வினை மறைத்துக் கொள்ளுமாறு செய்தான். அவனது மாற்பிற் கொண்ட காதலால் வருத்தமுறும் என் இயல்பை அறியாத என் காதலன் என்றாள். களவுக் காலத்துத் தலைவி தான் கொண்ட காமநோயை வெளிப்படச் சொல்லாமல் மண்ணாப் பசுமுத்திற்கு உவமை கூறினாள்.

தென்றல் காற்று காதல் நோயின் கொடுமையை அறியாமல் என்னை வருத்துகின்றது. என் துன்பத்திற்குக் காரணமாகிய காமநோயின் கொடுமையை உணராமல் இவ்வூராரும் கவலையின்றி உறங்குகின்றனர். இந்த ஊரார்க்கு என் நிலைமையை எவ்வாறு கூறுவேன் என ஔவை குறிப்பிடும் பெண், காம நோயால் புலம்புகிறாள். அவை,

**“முட்டுவேன் கொல்? தாங்குவேன் கொல்?**
**ஓரேன் யானும் ஓர் பெற்றி மேலிட்டு**
**ஆஅ ! ஓல் எனக் கூவுவேன் கொல்**
**அலமரல் அசைவளி அலைப்ப, என்**
**உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே”   (குறுந்.28:1-5)**

என்னும் இப்பாடலில் இடம்பெற்றுள்ளது. இரவு வேளையில் தனித்திருக்கும் பெண் தன்னுடைய மனத்தில் பொங்கிடும் காமத்தைத் தாங்கிட இயலாமல் முட்டுவேனோ, தாக்குவேனோ, குரலெடுத்துக் கூவுவேனோ என்பது மரபு வழிப்பட்ட காதல் போக்கினைச் சிதைக்கிறது.

காமநோயின் கொடுமையை அடக்க முடியாமலும் பிறரிடத்து வெளியிட முடியாமலும் தவிக்கின்றேன் என தலைவி,

**“ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்**
**கை இல் ஊமன் கண்ணின் காக்கும்**
**வெண்ணெய் உணங்கல் போல**
**பரந்தன்று, இந்நோய் : நோன்று கொளற்கு அரிதே?”   (குறுந்.58:3-6)**

என்கின்றாள். வெண்ணெய் ஞாயிற்றின் வெப்பத்தால் உருகிப் பரந்தாற் போலக் காமநோயானது உருகிப் பரந்தது. வெண்ணெய் உருகாமல் காக்க முயலும் கையில்லாத ஊமையன் அதனைக் கையில்லாமையால் எடுத்துச் சென்று பிறிதோர் இடத்தில் வைத்துப் பாதுகாக்கவும் இயலாது. தன் ஊமைத்

தன்மையால் பிறரை அழைத்துப் பாதுகாக்கச் சொல்லவும் இயலாமை போலக் காம நோயை அடக்கிப் பாதுகாத்தற்கரிய யான் அதை அடக்க முடியாமலும் பிறிடத்து வெளியிட முடியாமலும் தவிக்கின்றேன், என்பதால் மிகுதியான காம நோயின் தன்மையை அறிய முடிகிறது. கை, கால், கண் ஆகிய எல்லா உறுப்புக்களைப் பெற்றிருந்தும், நீ என்னுடைய காமத்தின் மெலிவை போக்க உதவவில்லையே என்ற தலைவியின் எண்ணம் இங்குப் புலப்படும்.

அள்ளூர் நன்முல்லையாரின் பாடல் அடிகள், தலைவியின் பிரிவுத் துயரினை விளக்குவதாக அமைந்துள்ளன.

**“உள்ளார் கொல்லோ – தோழி ! – இள்ளை**
**வளைவாய்க் கொண்ட வேப்ப ஒண்பழம்**
**புதுநாண் நுழைப்பான் நுதிமாண் வாள் உகிர்ப்**
**பொலங்கல ஒருகாசு ஏய்க்கும்**
**நிலம்கரி கள்ளி அம் காடு குறந்தோரே” (குறுந்.67:1-5)**

என்ற பாடலில் வேம்பின் நண் பூ மலர்ந்து உதிர்வதற்குள், இளவேனில் தொடங்கும் பருவத்தில் வருவதாகத் தெரிவித்துச் சென்றவர் வேம்பின் பழம் தொடங்கிய பின்னரும் வரவில்லை எனத் தலைவி வருந்தினாள். தலைவன் சென்ற நாட்டில், இக்காட்சியை அவன் கண்டிருத்தல் கூடும் எனவும் தலைவி நினைத்தாள். அள்ளூர் நன்முல்லையாரின் அடி, தலைவியின் வருத்தத்தை எடுத்துரைக்கிறது. மேலும் தலைவனைப் பிரிந்து வருத்தம் மேலிட்டு நிற்கும் தலைவி, தன்னுடைய நோய் தீரவேண்டுமெனில் தலைவனைச் சேர வேண்டும் என்று கூறுவதைப் பாடலின் வாயிலாக அறியமுடிகிறது.

அள்ளூர் நன்முல்லையார் பாடலில் பிரிவிடைக் கிழத்தி மெலிந்து கூறியது.

**“பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தின்**
**ஊழ்ப்பாடு முதுகாய் உழையினம் கவரும்**
**அரும்பணி அற்சிரம் தீர்க்கும்**
**மருந்து பிறிது இல்லை அவர் மணந்த மார்பே”   (குறுந்.68:1-4)**

குறும்பூழ்ப் பறவையின் கால் போன்ற செம்மையான தாள் கொண்ட உழுந்தின் முற்றிய காய்களை, மான்கள் தின்னும் பொருட்டுக் கவர்ந்து செல்லும் அரிய பனிபடரும் முன்பனிக் காலத்தால் உண்டாகும் இக்காம நோயின் துன்பத்தைப் போக்கும் மருந்து என்னைத் தழுவிச் சென்ற அவருடைய மார்பேயன்றி வேறு எதுவும் இல்லை. குறுந்தொகையில் தலைவனைப் பிரிந்த தலைவியின் கூற்றாக இப்பாடல் இடம்பெறுகிறது. திருக்குறளில் வள்ளுவர் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் இடந்தலைப்பாட்டில் மீண்டும் தலைவியை எதிர்ப்பட்ட தலைவன்.

**“பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை**
**தன் நோய்க்குத் தாமே மருந்து”   (குறுள்.1102)**

என குறிப்பிடுவதாகத் திருக்குறளில் அமைந்துள்ளது.

தலைவனது பிரிவு நீட்டிப்பின் மெல்ல மெல்ல உயிரை இழப்பேன் என்று தலைவி குறிப்பிடுவதனை,

**“காமம் தாங்குமதி – என்போர் தாம் அ∴து**
**அறியலர் கொல்லோ? அனைமதுகையர் கொல்?**
**யாம், எம் காதலர்க் காணேம் ஆயின்**
**சிறிதுனி பெருகிய நெஞ்சமொடு, பெருநீர்க்**
**கல்பொரு சிறுநுரை போல,**
**மெல்ல மெல்ல இல்லாகுதுமே”   (குறுந்.290:1-6)**

என்ற பாடலால் அறிய முடிகிறது. காமநோயைப் பொறுத்து ஆற்றுவாயாக என்று குறிப்பிடுபவர் தாம் அக்காமத்தின் தன்மையை அறிந்திலரோ! அத்துணை வன்மை உடையவரோ! யாம் என் தலைவரைக் காணாதனால் செறிந்த துயர் மிக்க நெஞ்சத்தோடு மிக்க வெள்ளத்தில் பாறையின் மேல் மோதிச் சிதறும் சிறிய நுரையைப் போல மெல்ல மெல்ல இல்லாமல் ஆயினோம் என்பதால், நான் தலைவனின்றி உயிர்வாழ்வது அரிது என்பதைக் காணமுடிகிறது.

தலைவனைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டித் தோழியிடம் தலைவி, வேண்டுதல், அவை,

**“தீம்பால் கறந்த கலம்மாற்றி, கன்று எல்லாம்**
**தாம்பின் பிணித்து மனைநிறீஇ யாய் தந்த**
**……………………….**
**ஆயர் மகளிர் இயல்பு உரைத்தது எந்தையும்**
**பாயும் அறிய உரைத்தீயின், யான் உற்ற**
**நோயும் களைகுவை மன்”   (கலி.111:1-2,22-24)**

காதல் கொண்ட தலைவன் தலைவியிடம் உரிமையோடு சிற்றில் தருவதாகவும் கூந்தலுக்கு மலர் சூட்டித் தருவதாகவும் மார்புக்குத் தொய்யில் எழுத விரும்புவதாகவும் கூறுகின்றான். தலைவி அவனுக்கு மனைவியாகாமல் எதையும் ஏற்றுக் கொள்ள மாட்டேன் என்கிறாள். இதனைக் கேட்ட அவன் மனச்சோர்வடைகின்றான். எனவே தோழியிடம் அறத்தோடு நிற்குமாறு வேண்டுகின்றான். இதன் மூலம் தங்கள் இருவருடைய நோயும் தீரும் எனக் கூறுகின்றான். நேரடியாகத் தலைவனிடம் திருமணம் செய்து கொள் எனக் கூறுவதற்கு அவளுடைய அச்சமும், நாணமும், தடுக்கின்றன என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

**பொருள் பிரிவில் தலைவன் அச்சம்**

களவில் தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டுப் பிரிந்து செல்லுதல் உண்டு. அவ்வாறு பிரிந்து சென்ற தலைவனை நினைத்துத் தலைவி வருந்தி தன் ஆற்றாமையை வெளிப்படுத்துவாள். ஆற்றாமை என்பது ஒருவகையில் கவலை என்பதாகும். “கவலை என்பதை அச்சம், பெருந்துயரம் (Distress) நாணம், குற்ற உணர்வு, ஆர்வக் கிளர்ச்சி ஆகிய பல்வேறு அடிப்படை உணர்வுகளின் இணைப்பு அல்லது தொகுப்பு அமைப்பு”[13] என்கிறது உளவியல். இவ்வரையறை தலைவியின் பிரிவுத் துயரத்திற்குச் சரியாக பொருந்தி அமைகிறது. பிரிந்து சென்ற தலைவனை நினைத்து வருந்துமிடத்து அச்ச உணர்வு வெளிப்படுகிறது. தலைவன் காலம் தாழ்த்தினால் அதன் வழி பிறர் தன்னை இழிவுபடுத்த நேரிடும் என்பதை நினைத்துத் தலைவி பொருள்வயிற் பிரிவில் அச்சத்துடன் இருப்பதைக் காண முடிகிறது.

தொல்காப்பியர் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியலில் எண்வகை மெய்ப்பாடுகள் குறித்து விளக்குகிறார். புறத்தார்க்குப் புலனாகும் மெய்ப்பாடுகள் (அவைகள்) எட்டு வகைகள் என்கிறார். இதனை,

**“நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று**
**அப்பால் எட்டே மெய்பாடு என்ப”  (தொல்.பொருள்.நூற்.1197)**

என வரும் தொல்காப்பிய நூற்பாவால் அறிய முடிகிறது. இவற்றில் “உடலில் மெய்ம்மயிர் சிறத்தல், கண்ணீர் அரும்பல், வியர்த்தல் என வெளிப்படும் போதுதான் அவை புறத்தார்க்குப் புலனாக அமைகின்றது. அவ்வாறு புலனாகும் அவைகள் எட்டு என்ற விளக்கத்தின் வழி புலனாகிறது.”[14] மேலும் அச்சம்

என்ற சுவையானது உருவாவதற்குரிய நான்கு காரணங்களையும் தொல்காப்பியர் விளக்குகிறார். மற்றொரு ஆசிரியர்,

**“இளிவே இழவே அசைவே வறுமை என**
**விளிவில் கொள்கை அழுகை நான்கே”  (தொல்.பொருள்.நூற்.1199)**

என வரும் நூற்பாவில் “அழுகை எனும் அவலச் சுவை பிறரால் தாழ்வுபடுத்தப்பட்டு எளியவராய் நிற்றல், பொருள், உயிர் இழப்பு வறியவரான சூழல் இவையெல்லாம் அடிப்படைக் காரணங்கள்”[15] என விளக்குவதன் மூலம் உணர முடிகிறது. பிறரால் தாழ்வுபடுத்தப்பட்டு எளியராய் நிற்கக்கூடிய சூழலில் அழுகை தோன்றும். பொருள் தேடச் சென்ற தலைவன் பிரிந்ததை எண்ணித் தலைவி வருந்தியதைக் கீழ்க்கண்ட பாடல் சுட்டுகின்றது.

**“வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்ப**
**பாட்டம் பொய்யாது பரதவர் பகர,**
**……………………**
**ஓலி காவோலை முள் மிடை வேலி,**
**பெண்ணை இவரும் ஆங்கண்**
**வெண் மணற் படப்பை, எம் அழுங்கல் ஊரே”  (நற்.38:1-2,8-10)**

இனிமையைத் தந்த இவ்வூர் தலைவனைப் பிரிந்த சூழலில் துன்பத்தைத் தருவதாயிற்று, மழைவளம் பொய்யாது மிகுதியாகப் பொழியும் நீரால் கடலும் தப்பாத வருவாய் நல்கும் அதனால் மக்கள் எல்லோரும் மகிழ்வர். ஆதலால் நம்முடைய ஊர் இனிமையுடையதாயினும் நமது தலைவன் பிரிந்தவுடன் அவன் இல்லாதது பொலிவிழந்தாற் போல வருத்தம் உடையதாயிற்று. இதனைக் காணும் போது நான் எங்ஙனம் வருந்தாது ஆற்றிருப்பேன் எனத் தலைவி கூறுகின்றாள்.

தலைவனைப் பிரிந்து ஏற்பட்ட வருத்தத்தால் இருக்கும் தலைவிக்குக் குயில்கள் கூவும் ஓசை ‘பிரியாதீா்’ என்பது போலமைந்தது.

**“தேம் படு சிலம்பில் தெள் அறல் தழீஇய**
**துறுகல் அயல தூ மணல் அடைகரை,**
**அலங்கு சினை பொதுளிய நாவ வடி மா அத்துப்**
**பொதும்புதோறு அல்கும் பூங் கண் இருங்குயில்**
**கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை இட்டு**
**…………………**
**பிரியல் ஆடவர்க்கு இயல்பு எனின்**
**அரிது மன்றமே, அறத்தினும் பொருளே”   (நற்.243:1-5,10-11)**

எனக் காமக் கணிப்பசலையாா் பாடிய பாடலில் தலைவன் பொருள்வயிற் பிரிதலால், அசைகின்ற கிளைகள் தோறும் நறுமணமிக்க மாவடுக்கள் செறிந்த மாமரங்கள் நிறம்பிய சோலை விளங்கும். இத்தகைய சோலைகள் தோறும் பூப்போன்ற கண்களையுடைய கரிய குயில்கள் தங்கியிருக்கும், சோலையில் தலைவி அமா்ந்து இருக்கும் போது குயில்கள் எல்லாம் எப்போதும் இணைந்து இருக்கும். நீங்கள் ஏன் பிரிந்து இருக்கின்றீா்கள். உங்கள் அன்பைவிட பொருள் பெரிதாகப் போயிற்றோ என்று கூறுவது போல கூவாமல் நின்றது எனத் தலைவி பாடலில் தனது துயரினைக் குயில் மூலம் எடுத்துக் கூறுகின்றாா்.

தலைவன் வருவதாகக் குறித்த பருவத்தே வராமை கண்டு, தலைவி, தலைநிமிா்ந்து விரைவாக நடக்கும் கொடிய ஆண்யானைகளை உடைய நெடுமான் அஞ்சி அருள் நெஞ்சத்தோடு நெடுங்காலம் தன் புகழ் செய்மையிலும் விளங்கிட, இரவலா்களுக்குத் தோ்களைப் பரிசாகக் கொடுக்கின்ற நாளவையைப் போல, மேகம் மழையைப் பொருந்தி மாறாது ஒரே நிலையில்

பெய்வதான கார்காலம் வந்துற்றது. நான் தங்குவதற்கு அரிய துயரத்தைப் பெற்று வருந்துவதால், அதன் அறிகுறியாக நான் இறக்க நேரிட்டால் அவர் மீது அன்புடையேன் என்பது உறுதியாகும். அவ்வாறு இறக்காமையினால் நான் அன்பிலேன் அல்லவா? எனினும் கரையை முட்டி, காட்டாற்றின் இடிந்த கரையிலே வேர்களெல்லாம் அசைந்து பிடிப்பற்றுத் தோன்றிக் காற்றால் அசையும் மரத்தினது அழகிய தளிரைப் போல நடுங்குகிறேன் என்கிறாள்.

**“அருந் துயர் உழத்தலின் உண்மை சானம் எனப்**
**பெரும் பிறிது இன்மையின் இலேனும் அல்லேன்**
**கரை பொருது இழிதரும் கான் யாற்று இகுகரை**
**வேர் கிளர் மராஅத்து அம் தளிர் போல**
**நடுகல் ஆனா நெஞ்சமொடு இடும்பை” (நற்.381:1-5)**

நடுங்குதல் நீங்காத நெஞ்சத்தோடு இந்தப் பிரிவுத் துன்பத்தை நான் எவ்வாறு தாங்குவேன் எனத் தலைவி கூறினாள்.

பிரிவினைப் பொறுத்துக் கொள்ளும் வலிமையுடையோர்க்குப் பிரிவு நன்மையுடையதாகும். வரைவு நீட்டிக்கும் தலைவன் வருந்தும் நிலையினை,

**“நன்றுமன் வாழி தோழி – உண்கண்**
**நீரொடு ஓராங்குத் தணப்ப**
**உண்ணாது ஆற்றல் வல்லு வோர்க்கே” (குறுந்.38:4-6)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. பிரிவு உணர்த்தியபோது பிரிவிற்கு உடன்பட்டு, அதனால் வரும் துயரினைத் தாங்கி உலகில் உயிர் வாழும் மகளிரைக் கூறி ஆற்றுவிக்கும் தோழியை,

**“அரிதாற்றி அல்லல் நோய் நீங்கிப் பிரிவாற்றிப்**
**பின்இருந்து வாழ்வார் பலர்” (குறள்.1160)**

என்ற திருக்குறள் விளக்குகிறது. குறுந்தொகையில் வரைவு நீட்டித்தலால் வருந்தும் தலைவி கூற்றாக இயம்புவது குறளில் தலைவியை ஆற்றுவிக்கும் தோழி கூற்றாக அமைந்துள்ளது.

தலைவனைப் பிரிந்த தலைவி பலவிதமான துன்பங்களில் இருப்பதைக் காணமுடிகிறது. தலைவன் தன்னருகில் இல்லாமல் பிரிந்து சென்றுள்ளதால் வேதனை மிகுந்து, தலைவன் சென்றுள்ள வழியில் உள்ள துன்பங்கள், பாலைவழியின் வெப்பமிகுதி, கொடிய விலங்குகள் பற்றிய பயம், உயிருக்கு ஊறு நேரிடுமோ என்ற கள்வர்பயம் ஆகிய எண்ணங்கள் தலைவியின் மனத்தில் தோன்றின.

**"கற்புடை மருங்கில் கடுமுடை பார்க்கும்**
**காடு நனி கடிய என்ப**
**நீடி இவண் வருநர் சென்ற ஆறே" (ஐங்.335:3-5)**

பாடலில் உளவியல் ரீதியாக மனநிலையில் தலைவிக்கு, தலைவன் பிரிந்து சென்றதால் பாதிக்கப்படுவதை அறியலாம்.

தலைவியானவள் தன் தோழியிடம் நம் தலைவன் நம்மைப் பிரிந்தமையால், பலவற்றையும் வெறுத்து, உண்ணாத வருத்தத்தால் என் உயிர் நீங்குமளவுக்கு உடல் மெலிந்தது, எனது தோள்களும் பழைய அழகும் கெட்டன. தம்மைப் பிரிந்து சென்ற தலைவரின் நீக்கத்துக்குப் பிரிவாற்றாது அழுது அதனைப் போக்குவதற்கு வேறு மருந்து இல்லாமையால் செயலற்று விட்டேன். பெண் புலியானது உயர்ந்த மலையின் பக்கமலையின் கண் பாறையின் பிளப்பாகிய குகையின் முடுக்கிலே, பிடவுடன் மலர்ந்த வேங்கையின் மணங்கமழும் மலருடன் கூடிய தழையை வேறு வேறாக வகுத்து வைத்தாற் போன்ற தசையின் மறைப்பு நீங்காத வளைந்த நகத்தையுடைய குட்டிகள்

மூன்றை ஒரு சேர ஈன்றுள்ளது. அதனால் வலுவிழந்த ஓய்ந்து போன பெண்புலி பசியுடன் இருந்தது. அதனை உண்ணச் செய்யப் புள்ளிகளையுடைய பிரிந்த வாயையுடைய ஆண்புலி, அறல்பட்ட கொம்பையுடைய ஆண் மானின் குரலைத் தன் செவியால் கேட்கும். என்பதை,

**“செலவு அயர்ந் திசினால் யானே பலபுலந்து**
**உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்**
**தோளும் தொல்கவின் தொலைய நாளும்**
**பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி**
**மருந்துபிறிது இன்மையின், இருந்துவினை இலனே”**

**(அகம்.147:10-14)**

என்ற ஔவையின் பாடல் வழி அறிய முடிகிறது. மேலும் அத்தகைய கவா்ந்த வழிகளைக் கொண்ட, கடந்து செல்வதற்கரிய நெடிய காட்டிலே, தன் கணவனைத் தேடிச் சென்ற வெள்ளி வீதி போல்; நானும் என் தலைவனைத் தேடிச் செல்வதற்குப் பெரிதும் விரும்பினேன். என தலைவி தன் தோழியிடம் கூறுவதைக் காண முடிகிறது. செலவழுங்குதலை மேற்கொள்ளவில்லை என்பதும், தலைவன் செலவு மேற்கொள்ளும் பாதை இன்னல்கள் பறவற்றை உடைய கொடுமையான பாதை என்ற எண்ணமுமே பிரிவுத்துயரத்தைத் தலைவிக்கு ஏற்படுத்துகின்றன என்பதை அறியமுடிகிறது.

தலைவியின் வருத்தமானது பல நிலைகளில் அமைந்துள்ளது. சங்க இலக்கியப் பாடலில் மலை நிலமான குறிஞ்சி மற்றும் காட்டு நிலமான முல்லை ஆகியன இடம் பெற்றுள்ளன. இதில் முல்லை நிலமானது நெருங்கிய வளா்ந்துள்ள மரங்களைக் கொண்டிருந்தும் அவை சிறிய இலைகளைக் கொண்டவை. ஆகையால் வெப்பத்தால் காய்ந்து கிடக்கும் கற்களைக் கொண்ட

கடினமான நிலமாகப் படைக்கப்பட்டுள்ளது. ஆனால் குறிஞ்சி நிலமானது பூக்கள் நிறைந்த மரங்களை உடையதும் விலங்குகளும் பறவைகளும் வாழ்கின்றதுமான வளமான நிலமாகக் காட்டப்பட்டிருப்பதோடு அவ்வழிச் செல்வோர்க்கு வருத்தத்தைத் தரக்கூடிய உயர்ந்த சிகரங்களையும் பண்பற்ற விலங்குகளையும் கொண்டதாகவும், புலவர் படைத்துள்ளார். இதன் மூலம் பூக்கள், பறவைகள், விலங்குகள் போன்றவை தலைவியின் எண்ணத்தைத் தலைவனுக்கு நினைவூட்டக் கூடிய கருப்பொருட்களாகும். அவன் பார்த்த பின்னரும் பொருளீட்டச் சென்ற தலைவன் தான் திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற காலம் வந்துற்ற போதும் திரும்பி வராமல் காலம் தாழ்த்துவதை எண்ணி தலைவி வருந்துவதைக் காணலாம்.

தலைவன் திரும்பி வரும் போது நடைபெறும் நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்ட பாடல்களை ஆராயும் போது அவன் வரும் பாதையின் கொடுமையை நினைத்து தலைவி வருந்தும் நிலையைக் காணமுடிகிறது. இவற்றுள், கழுகு போன்ற துன்பம் தரும் பறவைகள் புலால் உணவுக்காகக் காத்திருக்கும் இடமாக தலைவன் வரும் பாதையின் தன்மை விளக்கப்பட்டுள்ளது. இந்த எண்ணமே தலைவிக்கு உளவியல் சார்ந்த துன்பத்தைத் தருகிறது. தலைவன் தான் குறித்துச் சென்ற காலத்தைக் கடந்து வருபவனாகவும் காட்டப்பட்டுள்ளான். இது தலைவிக்குப் பிரிவுத் துன்பத்தை மேலும் அதிகரிப்பதாக அமைந்துள்ளது.

### தலைவிக்குத் தலைவனால் துன்பம் உண்டாதல்

தலைவி தன் தோழியிடம் பலிச்சோறு உண்ணும் காக்கை, வெற்றியடையும் போரைச் செய்யும் சோழருடைய ‘கழார்’ என்னும் ஊரில்

கொள்ளப் பெறும் நல்ல பற்பல வகை மிகுந்த பலிச் சோற்றுக் கொடையோடு அளிக்கப்பெறும் அளவில்லாத பெருஞ் சோற்றுத் திரள்களை நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும். அதுபோல காதலரின் செயல் உள்ளதை,

**"மழை அமைந்து உற்ற மால் இருள் நடு நாள்**
**தாம் நம் உழையராகவும், நாம் நம்**
**பனிக் கடுமையின், நனி பெரிது அழுங்கி**
**துஞ்சாம் அகலும் அறிவோர்**
**அன்பிலர் - தோழி – நம் காதலோரே" (நற்.281:7-11)**

என்ற பாடல் விளக்குகின்றது. மழைபெய்து உண்டான மயக்கத்தை உண்டாக்கும் இருள் பரந்த நடு இரவில் தலைவர் நம் பக்கத்தில் இல்லாமல் இருக்கவும், நாம் நமக்குண்டான கடுங்குளிரால் மிகப்பெரிதும் வருத்த முற்றிருப்பதோடு கண் உறங்காமலும் இருப்போம். இதனை அவர் அறிந்தும் வராத காரணத்தால் அவர் இப்பொழுது அன்பில்லாதவரே ஆவார் எனக் குறித்த பருவத்து வராத தலைவனை எண்ணித் தலைவி வருந்தி தோழியிடம் உரைத்ததாகும்.

தோழியிடம் கனவுவந்து என்னைத் துன்புறுத்தியது என தலைவி கூறுதல்,

**"பொய் வலாளன் மெய் உற மரீஇய**
**வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட, ஏற்று எழுந்து**
**அமளி தைவந்தனே : குவளை**
**வண்டுபடு மலரின் சாஅய்த்**
**தமியென் : மன்ற அளியென் யானே" (குறுந்.30:2-6)**

பொய்யினை மெய்போலக் கூறுவதில் வல்லவன் என்னுடைய உடம்பின் ஊற்றின்பத்தைப் பெறுவதற்கான, இரவுக்காலத்தில் பொய்யாகிய கனவில்

வந்து மயங்கியதை உண்மை நிகழ்ச்சி போல் நினைத்தேன். அம்மயக்கத்தினின்றும் விடுபட்டு, விழித்தெழுந்து, அருகில் அவன் உள்ளானோ எனத் தடவிப் பார்த்தேன். வண்டுகளால் உழக்கப்பட்ட குவளை மலரைப் போல நிலைகுலைந்த நான் அவரைக் காணாது, தனித்தவளாய் தவித்தேன். தலைவி தன் காதலனைக் கனவில் கண்டு. நனவில் காணப்பெறாது கலங்கினாள். தலைவன் தான் குறிப்பிட்ட நாளில் தலைவியை மணம் புரியாமல் நீட்டியத்தமையால், கனவில் வந்தும் நனவில் காணப்பெறாது மறைந்தமையாலும் தலைவி அவனைப் பொய் சொல்வதில் வல்லவன் என்றாள். அதுவே அவள் நிலை குலைவிற்குக் காரணமாயிற்று. கனவில் மெய்யாகவும், நனவில் பொய்யாகவும் ஆயிற்று என்றாள். கனவினால் தலைவி 'இன்பம் இழந்து' வருந்தியமைக்கு வண்டுகளால் உழக்கப்பட்ட குவளை மலர் உவமையாயிற்று.

தலைவன் சென்ற நெறியருமை நினைத்துத் தலைவி ஆற்றாளாயினாள். அதனைப் பாடலில்,

**"வெந்திறல் கடுவளி பொங்கர்ப் போந்தென**
**நெற்று விளை வழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்**
**மலையுடை அடுஞ்சுரம் என்ப – நம்**
**முலையிடை முனிஞர் சென்ற ஆறே" (குறுந்.39:1-4)**

என வெளிப்படுத்தியுள்ளனர். பெண், தன் முலைகளிடையே துயிலுதலை வெறுத்தவர் சென்ற வழியானது வெம்மையும், வலிமையும் மிக்க காற்று வீசும் பாலைச் சுரவழி என்று குறிப்பிடுவதிலிருந்து இன்ப வெம்மை அளிக்கும் முலையானது பிரிந்து போனவரைச் சார்ந்தே அதன் இன்பம் பெற வேண்டிய நிலையினை ஆற்றாமை யோடு விவரிப்பதாகக் கருதலாம்.

தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி தோழியிடம் தலைவர் நம்மைப் பிரிந்து சொல்லாரென்று எண்ணி இருந்தேன். அவர் நம் பிரிவை இவளுக்கு அறிவித்தால் அதற்கு இவன் உடம்படாளென்று எண்ணி என்னிடம் சொல்லாமல் சென்றார். அவ்வாறு அவர் செய்த செயலானது இருவரிடத்துமுள்ள இரண்டு பெரிய ஆமைகள் செய்த போரினால் எனது துன்பத்தையுடைய நெஞ்சு நல்ல பாம்பு கவ்விக் கடித்ததினால் வருந்தப்படுவதைப் போல இப்பொழுது மிக்க கலக்கத்தை உடையதாய் நின்றது என்று கூறுகிறாள். இதனை ஔவையார் தனது பாடலில்,

**“ஆயிடை இருபே ரான்மை செய்த பூசல்**
**நல்லராக் கதுவி யாங் னென்**
**அல்லன் நெஞ்ச மலமலக் குறுமே” (குறுந்.43:4-6)**

எனப் புலப்படுத்தியுள்ளார். தலைவன் சொல்லாமல் பிரிந்தமையால் தலைவி வருந்தி தன் ஆற்றாமையின் மூலம் துன்பத்தை வெளிப்படுத்துவதை அறியலாம்.

தலைவனும் தலைவியும் உடலில் இருவரும் உயிரால் ஒருவருமாக வாழ்கின்றனர். தலைவிக்கு அவள் இல்லத்தில் காவல் மிகுதியாகிறது. தலைவனைப் பிரிந்த தலைவி, அவளின் பிரிவு ஆற்றாமையைத் தோழியிடம் கூறுகிறாள்.

**“பூ இடைப் படினும் யாண்டு கழிந்தன்ன**
**நீர்உறை மகன்றில் புணர்ச்சி போலப்**
**பிரிவுஅரிது ஆகிய தண்டாக் காமமோடு**
**உடன் உயிர் போகுகதில்ல – கடன் அறிந்து**
**இருவேம் ஆகிய உலகத்து**
**ஒருவேம் ஆகிய புன்மை நாம் உயற்கே” (குறுந்.57:1-5)**

என்ற சிறைக்குடி ஆந்தையார் பாடலில், அன்றில் பறவைகள் நீர்வாழ்ப் பறவைகள், ஆணும், பெண்ணும் சிறிது பொழுதுகூட, பிரியாமல் வாழ்கின்ற தன்மையுடையன. இவை இரண்டும் இணைந்து நீரில் நீந்திவரும்போது, இடையே பூவொன்று தோன்றி பிரிப்பினும், ஓர் ஆண்டு கழிந்ததுபோல எண்ணுகின்றன. அப்பறவைகளின் புணர்ச்சி போல, தலைவன் தலைவியின் காதலும் காணப்படுகிறது. தலைவனின் பிரிவைத் தலைவியால் தாங்க இயலாததால், உடனுயிர் போகுக என்கிறாள் தலைவி.

காமம் மிகுந்ததால் தோழியிடம், எங்ஙனம் நான் ஆற்றுவேன் என தலைவி கூறியதை,

**"உள்ளின், உள்ளம் வேமே : உள்ளாது**
**இருப்பின், எம் அளவைத்து அன்றே : வருந்தி**
**வான் தோய்வற்றே, காமம் :**
**சான்றோர் அல்லர், யாம் மரீஇயோரே"  (குறுந்.102:1-4)**

எனும் பாடல் விளக்குகின்றது. காதலரை நினைத்தால், அவர் பிரிவு என்றும் தீயினால், நினைக்கின்ற என்மனம் வேகாநிற்கும். அவரை நினைக்காமல் உயிர் வைத்திருத்தல் எம்முடைய ஆற்றலுக்குக் கட்டுப்படுவதன்று. எனது காமநோயோ, மிக்க வருத்தமடையச் செய்து, விண்ணளாவி வளர்கின்றது. ஆதலின் யான் யாது செய்வேன் எனக் கலங்கினாள். என்ற குறுந்தொகை பாடலினைப் போன்று வள்ளுவரின்

**"மறப்பின் எவன் ஆவன் மற்கொல் மறப்பு அறியேன்"**
**உள்ளினும் உள்ளம் சுடும்"  (குறள்.1207)**

என்ற குறட்பாவும் இயம்புகின்றது. பாடலில் குறுந்தொகை அடி சிறு மாறுபாட்டுடன் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

தலைவியின் வருத்தததை எண்ணி உரைத்த தோழிக்குத் தலைவி கூறியது பின்வருமாறு:

**“ஈங்கே வருவர், இனையல் அவர் என**
**ஆழாஅற்கோ இனியே? – நோய் நொந்து உறைவி**
**…………**
**நறுந்தாறு கொழுதும் பொழுதும்**
**வறுங்குரல் கூந்தல் தைவருவேனே”** **(குறுந்.192:1-2,5-6)**

காமநோய் காரணமாக வருந்தி இருப்பவளே! தலைவர் இங்கே திரும்பி வருவார். எனவே நீ வருந்தாதே என்று நீ சொல்வதனால் நான் அழாமல் இருப்பேனா? கரிய குயிலின் கண்ணுக்கு இனிய மின்னும் சிறகுகள், பொன்னின் உரைத்த துகள் விளங்கும் உரைகல்லைப் போலத் தன்னுடல் விளங்குமாறு மாமரக்கிளையில் இருந்து நறுமணப் பூந்தாதினைச் சுவைத்து மகிழும் இளவேனிற் பருவத்தும் அவர் வராமையால், புனையப்படாத எனது வெறுமையான கூந்தலைத் தடவுவேன். உந்தல் பாயலில் தலைவனால் தைவரப் பெறுவதற்குரிய கூந்தல், அவன் வராமையால் தன்னால் தைவரப் பெறுவதாயிற்று எனத் தலைவி வருந்தினாள்.

துன்பம் தரும்படி கார்காலத்தை அறிவிக்க இடி, மின்னல் முதலிய கருவிகளுடன் மழையும் வாடைக்காற்றும் சேர்ந்து கூதிர் பருவத்தின் எமன் என் உயிரைக் கொல்ல வருகின்றது. அதிலிருந்து நான் தப்புவதற்கு என்ன செய்வேன் என்று தலைவி கீழ்வருமாறு கூறுகிறாள்.

**“யாது செய் வாங்கொல் தோழி நோதக**
**நீர் அதிர் கருவிய கார் எதிர் இளை மழை**
**ஊதை அம் குளிரோடு பேதுற்று மயங்கிய**

**கூதிர் உருவின் கூற்றம்**
**காதலர்ப் பிரித்த எற்குறித்து வருமே"** **(குறுந்.197:1-5)**

இப்பாடலின் மூலம் தலைவன் இல்லாமையால் உடல் வேறுபட்டு உள்ளம் கலங்கிய தலைவியைக் கொல்வதை நோக்கமாகக் கொண்டு கூதிர் பருவத்தில் வந்தது என்று கலங்கினாள். தலைவன் உடன் இருக்கும் போது இன்ப நிகழ்விற்குத் துணைசெய்த கூதிர் தலைவன் பிரிந்த வழி தன்னைக் கொல்ல வருவதாக எண்ணினாள். அதிலிருந்து தப்புவதற்குத் தலைவன் இருக்கும் இடத்திற்குச் செல்லுவதா. அல்லது கூற்றுவன் தன் உயிரைக் கொல்ல உடன்படுவதா? என்ன செய்வதன்று தெரியவில்லை. கூதிர்காலத்தில் வந்திலராதலின் நான் உயிர் வாழேன் எனத் தலைவி வருந்தி உரைத்தாள்.

தலைவி தலைவனை எண்ணி அடையும் துன்பத்தைக் கீழ் வரும் பாடலில் காணலாம்.

**"நோம், என்நெஞ்சே! நோம், என்நெஞ்சே!**
**புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்**
**கட்குஇன் புதுமலர் முட்பயந்தாஅங்கு,**
**இனிய செய்த நம் காதலர்**
**இன்னா செய்தல் நோம் என் நெஞ்சே!"** **(குறுந்.202:1-5)**

அன்புத் தோழியே! எனது நெஞ்சம் வருந்துகிறது. முல்லை நிலத்தில் நெருங்கி முளைத்த சிறிய இலைகளையுடைய நெருஞ்சியின் மலரானது இனிய தோற்றம் உடையதாயினும், நெருங்குவார்க்குத் துன்பம் தரும் முட்களையும் கொண்டிருக்கும். அது போலக் களவுக் காலத்தில் நமக்கு இனியனவற்றைச் செய்த நம் காதலர், கற்புக் காலத்தில் இன்னாத செயல்களைச் செய்தலால்

அதனை எண்ணி எனது நெஞ்சம் மேலும் வருத்தமடைகிறது என்று தோழியிடம் தலைவி எடுத்துரைத்தாள்.

தலைவிக்குத் தலைவனைக் காணாது, வருந்தும் செயல் மிகுந்த துன்ப நிகழ்வாக அமைவதை,

**"அகல்இலைப் பலவின் சாரல் முன்னி,**
**பகல்உறை முதுமரம் புலம்பப் போகும்**
**சிறுபுன் மாலை உண்மை" (குறுந்.352:3-5)**

என்று இப்பாடல் சுட்டுகின்றது. தலைவன் பிரிவை எண்ணிய தலைவி வௌவால் கூட்டம் பகல் பொழுதில் வராத மரம் தனிமையில் வாடித் தவிப்பது போலத் தானும் தலைவன் இரவில் தன்னோடு இல்லாததை எண்ணி வருந்துகிறாள். தலைவனைக் காணும் போதே நான் மகிழ்ச்சி அடைகிறேன் என்று தலைவி குறிப்பால் உணர்த்துகின்றாள். கணவனைப் பிரிந்த பெண்களுக்குக் காலை, மாலை இரண்டும் மிகுந்த துன்பம் தருதலை உணரமுடிகின்றது.

குறுந்தொகைப் பாடலினைப் போன்று ஆற்றாமையால் தலைவி வருந்துவதை வள்ளுவர்,

**"மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத**
**காலை அறிந்தது இலேன்" (குறள்.:1226)**

என எடுத்துரைப்பதைக் காணலாம். வேனில் பருவம் வந்துவிட்டது. ஆனால் பிரிந்து சென்ற கணவன் வரவில்லை. மனைவி வேனிலைக் கண்டு வேனில் வரவினை நினைத்து மிகுந்த வேதனை கொண்டாள். மனைவி துயர் மிகுதியால் உறக்கமின்றி இரவுப் பொழுதை மிகவும் வருந்திக் கழிக்கின்றாள். கணவனோ

மயில் போன்ற சாயலையுடைய பரத்தை மகளிரோடு கூடி, குளிர்ந்த குளத்தில் நீராடி மகிழ்ந்திருந்தான். அதனால் மனைவியை மறந்து தங்கிவிட்டதாக, அவள் நினைப்பதாகப் பாடல் அமைகிறது.

**"பிரிந்து ஆர்க்கும் வண்டோடு, புலம்புதீர்ந்து எவ் வாயும்**
**இருந் தும்பி, இறை கௌ எதிரிய வேனிலான்**
**துயில் இன்றி யாம் நீந்த, தொழுவை அம்புனல் ஆடி**
**மயில் இயலார் மரு உண்டு, மறந்து அமைகுவான் மன்னோ"**
**(கலி.30:3-6)**

தலைவி இளவேனிற் காலம் வந்துவிட்டதைத் தன் கணவனுக்குச் செய்தியனுப்ப முயன்றாள். அதுகேட்ட பாணன், மீளாத காம நோயினால் உன் மனைவி இவ்வாறெல்லாம் புலம்பி வருந்தினாள். பணிந்து உன் அழகிய திருவடியைச் சேராத பகைவர் நீ அவர்க்குக் கொடுக்கும் தண்டனையை எண்ணி எண்ணி நடுங்குவதைப் போல, அவள் தன் உள்ளமும் நடுங்கி நின்றாள். அவள் தன் அழகை மீண்டும் பெறுவதற்கு, அழகுடன் திகழும் உன் நெடிய தேரைச் செலுத்துவாயாக என பாணன் தலைவனிடம் கூறினான்.

அயலார் சிலர் தலைவியை மணம் முடிக்க கூறிய போது தலைவனின் மலைநாட்டின் வளமையும் அவனின் நற்பண்பினையும் எடுத்துரைத்து அவன் மீது களவு ஏற்பட்டதை வெளிப்படுத்தும் வகையில் தலைவி தோழிக்கு அறத்தோடு நிற்கிறாள். இதனை,

**"நரத்தம் நாறு இருங் கூந்தல் எஞ்சாது நனிபற்றி**
**பொலம் புனை மகரவாய் நுங்கிய சிகிழிகை**
**நலம்பெறச் சுற்றிய குரல் அமை ஒருகாழ்**
**விரல் முறை சுற்றி மோக்கலும் மோந்தனன்**
**நறாஅ அவிழ்ந்தன்ன என்மெல் விசற் போது கொண்டு" (கலி.54:5-9)**

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது. குறிஞ்சிக்கலிப் பாடலில் நரந்தம் பூ மணம் வீசும் எனது கரிய கூந்தலை அவனது உடல் முழுவதும் பற்றிக் கொண்டு தனது அன்பிற்குரிய பெண் யானைக்குக் கருணை செய்யும் ஆண் யானையைப் போல் தொய்யில் எழுதிய என் இளமுலைகளை இனிதாகத் தடவினான். தொய்யில் கொணர்ந்த தன் அழகிய அகன்ற கையால், தன் பிடியை மையல் கொண்டு தழுவும் களிறு போல, என் மேனி முழுவதும் தடவினான். என்னை அவன் வசமாக்கி மயக்கியும் விட்டான். அச்செயலாலே தோழி நான் காமவதையால் பட்ட துன்பத்தை நீக்கி தான் மலைநாட்டுத் தலைவனின் கரம் பிடிக்க துணைபுரிய வேண்டுமென தலைவி அறத்தோடு நின்றாள். காமத்தால் தலைவி அடைந்த வேதனையும், அதனால் அவள் அடையும் துன்பத்தையும் அறியமுடிகிறது.

தலைவி தன் மகனிடம் அழகானத் தந்தையைப் போல் ஒத்திருப்பினும் தந்தையின் குணங்களுள் ஏற்கும் குணங்கள், ஏற்கத்தகாத குணங்களை முன் வைக்கிறாள். பகைவரை வென்று களத்திலே வெற்றி கொள்ளும் வெற்றிக் குணத்திடத்து அவனைப் போல ஒத்திருப்பாயாக! மற்ற குணங்களில் ‘யாம் இவனோடு ஒன்றிவிட்டோம்’ என்று உணர்ந்திருந்த மகளிரை நுந்தை மென்தோள் மெலிய விடுமாறு போல, நீயும் அவர்கள் மெல்லிய தோள்கள் மெலியும் படி கைவிட்டுச் செல்வதில் ஒத்திருக்க வேண்டாம் எனக் கூறுகிறாள்.

**“ஒன்றினேம் யாம்! என்று உணர்ந்தாரை, நுந்தை போல்**
**மென் தோள் நெகிழ விடல்**
**பால் கொளல் இன்றி, பகல்போல், முறைக்கு ஒல்காக்**

**கோல் செம்மை ஒத்தி பெரும! – மற்று ஒவ்வாதி**
**கால் பொரு பூவின் வாட, நுந்தை போல்**
**சால்பு ஆய்ந்தார் சாய விடல்" (கலி.86:15-20)**

பொருளை விரும்பியவர்க்குக் கொடுத்தலில் உன் தந்தையைப் போல விளங்குவாய்: காதலை உடைய மெல்லிய நோக்கினை உடைய இளைய மகளிர் நோய்யுற்று நிற்க, நுந்தை அவரை நோக்காது விடுமாறுபோல, நீயும் அவர்களை நோய் மிகாநிற்கப் பாராது விடுத்தலாகிய பரத்தமையை ஒவ்வாதே கொள், .இங்கு "சங்கத் தலைவனின் குணத்தைப் பிரதிபலிக்கும் மகன் வீரம், கொடை போன்றவற்றை உள்வாங்கப்பட வேண்டியவனாகக் காட்டப்படுகிறான். மேலும் தாயின் கூற்றில் ஆண் பாலினத்திற்குரிய பண்புகளும், நீக்கப்பட வேண்டிய பண்புகள் சுட்டிக்காட்டப்படுவதை நாம் சமூகத்தின் குரலாகவும், பாலின வரையறையாகவும் ஏற்றுக் கொள்ளலாம்"[16] என்பர். தலைவன் பால் ஏற்படும் பிரிவால் உண்டாகும் காமநோயின் துன்பத்தைக் குறிப்பதோடு தன் மகன் செயல்பட வேண்டிய நிலையினையும் தலைவி கூறுவதைக் காண முடிகிறது.

தலைவனை எண்ணி வருந்திய தலைவியிடம் தோழி தலைவன் வரும் வரை ஆற்றியிருத்தல் வேண்டும் என வற்புறுத்தினாள். அது கேட்ட தலைவி,

**"எனக்கே வந்தனை போறி! புனற்கால்**
**அயிர் இடு குப்பையின் நெஞ்சுநெகிழ்ந்து அவிழ,**
**கொடியோர் சென்ற தேஎத்து, மடியாது**

**இனையை ஆகிச் செல்மதி**
**வினைவிதுப் புறுநர் உள்ளலும் உண்டே" (அகம்.163:10-14)**

என்கிறாள். பலவகைப்பட்ட மலர்களின் அழகு அழியுமாறு, வானத்தில் ஒன்று கூடி இடி முழக்கம் செய்த குளிர்ந்த மேகம் மழையைப் பொழிவித்த பின்னர், கூதிர்காலத்தின் இறுதி நாளில் பிரிவுத் துன்பம் நெஞ்சத்தில் மிகுந்திட நான் தனித்திருக்குமாறு என்னை விட்டுப் பிரிந்து சென்ற தலைவரை நினைத்து. எஞ்சியிருந்த சில வளையல்களும் கழன்று வீழ்ந்தன. இதற்குக் காரணமான துன்பத்தோடு, பேரார்வம் கொண்ட உள்ளத்துடன் மீண்டும் அவர் வரும் திசையை நோக்கி வருந்தியிருந்தேன்.

இத்தகைய என்னை இவள் இரக்கத்துக்குரியவள் என எண்ணாமல் நீரைக் குடித்த யானை பெருமூச்சு விட்டாற்போன்று கண் பார்வையை மறைக்குமாறு வீசும் பனித்துளியால் தாமரை மலரும் கந்தழியும் பனிப்பருவத்தின் நள்ளிரவில், மலையையும் நடுங்கச் செய்யும் குளிரைக் கொண்ட வாடைக் காற்றே! நீ என்னை வருத்துவதற்காகவே வந்தாய் போலும்? நீர் ஓடும் வாய்க்காலிடத்துள்ள நுண்மணல் மேடு கரைந்து அழிவது போல, என் நெஞ்சமும், நிலைகுலைந்து நெகிழ்ந்து போக, கொடியவரான அவர் சென்றுள்ள திசை நோக்கி, இதே வருந்தும் தன்மையினைக் கொண்டு தவிர்க்காமல் செல்வாயாக! அவ்வாறு சென்றால் விரைந்து பொருளீட்டும் தொழிலை மேற்கொண்டுள்ள எம் தலைவர் என்னை நினைத்து வருதலும் கூடும். என வாடைக் காற்றால் காமமானது தலைவியைக் கொஞ்சம், கொஞ்சமாக கொள்வதை எண்ணித் தலைவி தன் தோழியிடம் புலம்பித் தவிப்பதைக் கழார்க்கீரன் எயிற்றியார் பாடலால் அறியமுடிகிறது.

மழையினைப் பெய்து விட்டு உலக உயிர்களைப் பாதுகாப்புச் செய்திட்ட பொங்குதலையுடைய வெண்ணிற மேகம் கடையப்பட்ட பஞ்சினது துகள் பரந்து

தோன்றினாற் போன்ற சிறிய மழைத் துளியும் தூவுதலை விட்டொழித்தது. அகன்ற வயலிலுள்ள நீண்ட தண்டையுடைய கரும்பின் பெரிய பூக்கள் கோடைக் காலத்துப் பூளைப் பூப்போன்று வாடைக் காற்றால் அசைந்தது. பசிய இலை அடர்ந்த புதர்தோறும் பகன்றை நீலம் ஊட்டப் பெற்ற தோலின் நிறம் மறையுமாறு கிடுக்கின் மேல் பதித்த வட்டக் கண்ணாடியைப் போல் வெண்மையாய் மலர கொழுந்து இலையையுடைய அவரைக் கொடியின் அரும்புகள் விரிந்தன.

மருதோன்றியின் ஒள்ளிய பூக்கள் கட்டவிழ புலங்கள் தோறும் நாரைகளின் கூட்டம் கல்லென்று ஒலிக்க, தம் தலைவரைப் பிரிந்த மகளிர் அழகிழந்து நடுங்கப் பனிப்பருவம் வந்தது. இப்பனிக் காலம், பொருள் ஈட்டப் பிரிவார்க்கு ஏற்ற காலம் என்று எண்ணி, எத்தகைய பெரும் பொருளைப் பெறுவதாயின் எம்மை விட்டுப் பிரியாதீர் என்று தலைவனிடம் கூறுமாறு எனக்குத் துணையாய் உள்ள உன்னிடம் யான் கூறவும். அதைக் கேட்டும் எமக்கு அருள் செய்யாத காதலர் பிரிந்து செல்வாரானால், நமது பெண்மை நலத்தினை நுகர்ந்து அவரால் கைவிடப் பட்ட பாழாய்ப் போன இம் மேனியைக் கண்டு காமநோய் மேலும் வருத்துவதாலே வலிமையற்றுத் தானே உடைந்து அழியும் உள்ளத்துடன் அவர் புணர்தலை விரும்பினேன் என்கிறாள்.

**“நல்காக் காதலர் - நலன்உண்டு துறந்த**
**பாழ்படு மேனி நோக்கி, நோய்பொர**
**இணர்இருபு உடையும் நெஞ்சமொடு, புணர்வு வேட்டு**
**எயிறுதீப் பிறப்புத் திருகி**
**நடுங்குதும் - பிரியின்யாம் கடும்பனி உழந்தே”  (அகம்.217:16-20)**

என்பது பாடல். கடும்பனியால் மிக வருந்திப் பற்களை நறநறவென்று தீப்பொறி பறக்கக் கடித்து நடுக்கம் கொள்வோம். அதுவன்றி எம்மால் யாது செய்ய இயலும் என தலைவி தன் ஆற்றாமை மிகுதியைத் தோழிக்கு எடுத்துச் சொல்கிறாள்.

**தலைவனின் பரத்தமைச் செயலிற்குத் தலைவி மருந்து கூறுதல்**

மருதம் என்பது பண்டைத் தமிழகத்தில் பகுத்து ஆறாயப்பட்ட ஐந்துவகைத் தமிழர் நிலத்திணைகளில் ஒன்றாகும். வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் என அழைக்கப்பட்டது. மருத நிலத்தில் வாழ்ந்தோர், உழவுத் தொழில் புரிவோராவர். மருதநில மக்கள் மள்ளர் எனப்பட்டனர்.

**மக்கட் பெயர்கள்**

மருத நிலத்தில் வாழும் மக்கட் பெயர்கள் ஊரன், மகிழ்நன், கிழத்தி, மனைவி போன்றோர் உயர்ந்தோர் எனவும், உழவர், உழத்தியர் தாழ்ந்தோர் எனவும் கூறப்படுகிறது. தொல்காப்பியர் மக்கட் பெயரைப் பற்றி,

**“பெயரும் வினையுமென்று ஆயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே”  (தொல்.பொருள்.22)**

எனவும்,

**“ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை**
**ஆனா வகைய திணைநிலைப் பெயரே”  (தொல்.பொருள்.24)**

என்றும் கூறுகிறார்.

**தலைவியின் மாண்பு**

மருதத் திணைத் தலைவி, இல்லறம் சிறந்து ஒழுகும் பண்புடையவள். தலைவன் தரும் பிரிவுத் துன்பத்தைப் பொறுத்துக் கொள்பவள். நாடும், நாட்டு

மக்களும் நன்மையுற வேண்டும் என நினைக்கும் குணம் உடையவள். தன் பிரிவுத் துன்பத்தைத் தோழியிடம் பலவாறு கூறித் தலைவனுக்கு வாயில் மறுத்தலும் பின்பு தன் களவுக் காலத்தே துய்த்த இன்பத்தை நினைப்பவள். தலைவன் செயல் கண்டு ஊடலும், தன் காதல் உண்மையால் ஊடல் நீங்கலும் எனும் பண்பினை உடையவளாகவும் காட்சியளிக்கின்றாள். "கணவனுடைய பரத்தையிற் பிரிவு காரணமாகக் கண்ணீர் வடிக்கும் மனைவிக்கு ஊடல் உரிமை உண்டு. அதிலே கட்டுப்படாவிட்டால் கணவனைச் சாடும் உரிமையும் மனைவிக்கு உண்டு என்று மணநெறி வகுத்திருந்தது தமிழ்ச் சமுதாயம்"[17] என்பதில் தலைவனின் மாண்பை அறியமுடிகிறது.

தலைவி, தலைவன் ஈட்டிவரும் பொருட்கள் அனைத்தையும் தான் மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்று எண்ணாமல் அனைவருக்கும் பகுத்துக் கொடுத்து வாழ விருப்புவதை,

**"விளைக வயலே! வருக இரவலர்" (ஐங்.2:2)**

என்ற பாடல் அடி சுட்டுகிறது.

உலக மக்களின் நன்மை கருதி மழை வளமும் செல்வ வளமும் பெருக வேண்டும் என,

**"பால் பல ஊறுக ! பகடு பல சிறக்க**
**என வேட்டோளே, யாயே! யாமே" (ஐங்.3:2-3)**

தலைவி வணங்குகிறாள். மற்றோர் பாடலில்,

**"பகைவர் புல் ஆர்க! பார்ப்பார் ஓதுக !**
**என வேட்டோளே, யாயே! யாமே" (ஐங்.4:2-3)**

என அனைவரும் அனைத்து வளமும் சிறப்புப் பெற வேண்டும் என்ற மருதத்திணைத் தலைவியின் மாண்மை அறியமுடிகிறது.

தலைவனின் பரத்தமை செயலினைக் கண்டு தலைவி, தோழி ஆகிய இருவரும் வருந்தி உரைப்பதைப் பாடலில் காணமுடிகின்றது.

**“சென்ற காதலர் வந்து இனிது முயங்கி**
**பிரியாது ஒரு வழி உறையினும், பெரிது அழிந்து**
**உயங்கினை, மடந்தை! என்றி – தோழி !**
**அற்றும் ஆகும் அஃது அறியாதோர்க்கே**
**விழாக் கொள்கை வீழ்ந்த கொண்டி**
**மல்லல் மார்பு மடுத்தனன்**
**புல்லு மற்று எவனோ, அன்பு இலங்கடையே” (நற்.174:5-11)**

என்பது பாடலின் உவமைகள் மூலம் ஆசிரியர் விளக்குகின்றார். கற்றையாக அமைந்த ஈந்தினது முற்றிய குலையைப் போன்று மக்கள் எவரும் இல்லாத வழியிடையே அமைந்த தாளிப்பனையினது குலைகளை உடைய நெடிய மடலிலிருந்து ஆண் பறவை தன் பெண்பறவையைக் கூவி அழைக்கின்றது. அவ்வாறான ஒலியைக் கேட்ட புலி எதிரோசை எழும்படியாக முழங்கும். தலைவன் நம்மோடு ஒன்றியவனாய் இருப்பினும், அவன் முன்பு இருந்த நிலையில் இல்லை. முன்பு பரத்தையுடன் செல்லவில்லை.

இப்போது வேறு ஒருத்தியுடன் அன்பு கொண்டொழுகும் அவன் பால் எனக்கு எவ்வாறு அன்பு தோன்றும். அன்பு இல்லாத இடத்தில் அவன் என்னைத் தழுவிக் கொள்வதிலும் நான் அவனைத் தழுவிக் கொள்வதிலும் என்ன பயன் என்று தலைவி கூறுவதை அறியமுடிகிறது. “பாலுணர்ச்சி திருமண வாழ்வில் முதன்மையாகக் கருதப்படுகிறது. அதுவே அடிப்படையானதுமாகும்.

அனைத்துச் சமயத்தவர்களும் அதை உறுதிப்படுத்துகின்றனர். திருமணத்தில் பாலுறவு கணவன் மனைவி ஆகியோரிடையே ஓர் இணைப்புச் சக்தியாக விளங்குகிறது”[18] என்ற கூற்றுக்கிணங்க இணைப்புச் சக்தியாக இருக்கவேண்டிய பாலுறவு, தலைவனின் பரத்தமையால் சிக்கலுக்கு உள்ளாவதைக் காணமுடிகிறது.

தலைவிக்குப் பரந்தையின் இல்லத்தில் ஒலிக்கும் மணவோசை மிகுந்த மன உளைச்சலைத் தருகிறது. தலைவி தூக்கம் இன்றித் தவிக்கிறாள். பரத்தைமைத் தொடர்புகொண்ட தலைவன் மீண்டு தலைவியிடம் வந்து அன்பு பாராட்டுவதைத் தலைவி முழுமணதோடு ஏற்றுக் கொள்ள முடியாமல் இருக்கிறாள் என்பதைக் கீழ்க்கண்ட பாடல்வழி அறியமுடிகின்றது.

**“ஒலி பல் கூந்தல் நலம் பெறப் புனைந்த**
**முகை அவிழ் கோதை வாட்டிய**
**பகைவன்மன் யான் மறந்து அமைகலனே”   (நற்.260:8-10)**

தலைவியின் துன்பத்திற்குக் காரணமான செயல்களைச் செய்த தலைவனின் புறத்தொழுக்கத்தைத் தலைவி மறக்கவில்லை என்பதை மேற்குறித்த பாடலின் மூலம் அறிய முடிகிறது. “தலைவி அவளுடைய ஊடலை எதிர்கொள்ள முடியாமல் நாணி நின்ற அவனை மரம் ஏறி விழுந்தவனை மாடு ஏறி மிதித்தது போல மேலும் தள்ளி மிதிக்க விரும்பாததாலேயே அவள் ஏற்றுக் கொள்கிறாள்”[19] என்பர். மற்றொரு பாடலில் மருதத்திணைத் தலைவி தன் கணவன் பரத்தையோடு உறவாடுவதை எந்தச் சூழலிலும் ஏற்றுக்கொள்ளவில்லை. கணவனின் தகாத நடத்தையால் மனம்

வெறுக்கிறாள் மீண்டு வரும் தலைவனுக்கு வாயில் மறுப்பதோடு, பாலுறவிற்கும் மறுப்புத் தெரிவித்து தன் உச்சக்கட்ட எதிர்ப்பைத் தெரிவிக்கிறாள். இதனை,

**“தொல் கவின் தொலையினும் தொலைக! சார**
**விடே என் : விடுக்குவென் ஆயின் கடைஇக்**
**கவவுக் கை தாங்கும் மதுகைய குவவு முலை**
**சாடிய சாந்தினை வாடிய கோதையை**
**ஆசு இல் கலம் தழீ இயற்று**
**வாரல் வாழிய சுவைஇ நின்றவளே” (நற்.350:5-10)**

என்ற பாடல் மூலம் இதனை உணரமுடிகின்றது. தலைவி தலைவனிடம் நீ என் அருகில் வர வேண்டாம். நீயோ வலிமைமிக்க பரத்தையின் குவிந்த மார்பகத்தால் மோதப்பட்ட சந்தனத்தைக் கொண்டுள்ளாய். அவளாலே தழுவப்பட்டமையால் துவண்ட மாலையையும் கொண்டுள்ளாய், என்னுடைய பழைய அழகு தொலைந்தாலும் தொலையட்டும். பரத்தையரை நீ தீண்டியதால் அது இடுகாட்டில் கழித்தெறிந்த தாழியைத் தீண்டுவது போலாகும் என்கிறாள். “பரத்தையர் உறவு பற்றி வரும் கொடுமை, பிழைத்து வந்த கிழவன் எனும் சொற்கள் பெண்டிரின் மனநிலை வெளிப்பாடுகளாக இருப்பது மற்றொன்று இந்தபிரிவு பெண்டிரால் வெறுப்புக்குரியதாகக் கருதப்பட்டிருந்ததையும் இந்தச் சொற்றொடராட்சிகள் வெளிப்படுத்துகின்றன”[20] என பரத்தையின் தொடர்பால் தலைவி பெறும் துன்பத்தையும், தலைவனை ஏற்காமல் மறுப்பதையும் பாடலால் அறியலாம்.

மற்றோர் பாடலில் வாளை மீன்கள் வாள் போல பிறழ அவற்றை உண்ணாது அப்பொய்கையிலேயே நீர்நாய் தங்கித் துயில்கொள்ளும். அத்தகைய பொய்கைகள் உள்ள ஊர். கோயில் வெண்ணி. அதன் அரசன்

கொடையில் சிறந்த கிள்ளிவளவன். அவ்வூரைச் சுற்றியுள்ள வயலில் வெள்ளையான ஆம்பல் மலர் நிரம்பியிருக்கும். அம்மலரின் அழகிய நெளிவையுடைய தழையுடையை மெல்லிதாய் அகன்ற அல்குலில் அழகு பெற அணிந்துகொண்டு நாமும் விழாவுக்குச் செல்ல வேண்டும். விழாக்களத்தில் புதிய பரத்தையருள் ஒருத்தி தோற்றப் பொலிவுடன் செல்லுதலைப் புதிய வருவாயையுடைய ஊரன் காண்பானாயின் ஏனையோரைக் காணாது இவளையே மணம் புரிவான். அன்றி அவளை விடுதலும் அரிதாகும். இதனை,

**"வாளை வாளின் பிறழ, நாளும்**
**பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்**
**கை வண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த**
**வயல் வெள் ஆம்பல் உருவ நெறித் தழை**
**ஐது அகல் அல்குல் அணி பெறத் தைஇ**
**விழவின் செல்இயர் வேண்டும் மன்னோ" (நற்.390:1-6)**

எனும் பாடல் உணர்த்துகின்றன. மணம் முடித்துக் கொண்டால் மலை போன்ற யானையும் வாய்மையும் உடைய முடியனுடைய மலையில் உள்ள மூங்கில் போன்று அழகுற விளங்கும் நல்ல தோளுடைய மாதர்கள் இரக்கத்தக்கனர். அந்த இல்லுறை மாதர்கள் தோள்பாவும் நலனிழக்குமாறு செய்வான் எனத் தலைவி தோழிக்கு உரைப்பாளாய் பாங்காயினர் கேட்பக் கூறியது.

பரத்தையரை நாடி தலைவன் சென்ற அளவிலே அவனை எண்ணி தலைவி, தோழியிடம் கூறுவதை,

**"உட்கை சிறுகுடை கோலி, கீழ் இருந்து**
**சுட்டுபு நக்கியாங்கு, காதலர்**
**நல்கார் நயவார் ஆயினும்,**
**பல்கால் காண்டலும், உள்ளத்துக்கு இனிதே" (குறுந்.60:3-6)**

பாடலில் கால் இழந்து எழுந்து நிற்க முடியாது அமர்ந்திருக்கும் முடவன். தன்னுடைய உள்ளங்கையைச் சிறிய உண்கலத்தைப் போலக் குழித்துக் கொண்டு, அம்மலையின் கீழ் இருந்தபடியே, அத்தேன் கூட்டைக் கைவிரலால் சுட்டிக்காட்டி தன் உள்ளங்கையை நாவினால் நக்கி இன்புற்றாரைப் போல, நம் காதலுக்கு உரியவர் அத்தேன் போலத் தன்னைத் தருதலும் செய்யாது நம்மை விரும்புதலும் செய்யாது, பல காலங்களில், தலைவனைக் கண்ணால் கண்டிருத்தல் நம் உள்ளத்திற்கு இனிமை தருவதாய் உள்ளது. காதலர் தண்ணளி செய்யாவிட்டாலும், முடவன் தேன் கிடைக்கப் பெறாவிடினும் கற்பனையாகத் தேன் கிடைத்தது போல தேனடையைப் பார்த்து இன்புறுதல் போல இன்புறுவதாகக் குறிப்பிடுகிறாள்.

தலைவன் பரத்தையருடன் உறவாடித் தலைவியைப் பிரிந்திருந்த காலத்தில் தலைவி புணர்ச்சி விரும்பி அது கிடைக்காது மிகவும் வருந்தினாள். அதனை உணர்ந்த தோழி, தலைவன் கொடுமையை எண்ணி அவனை வெறுத்தலை விடுத்து அவன் மார்பை விருப்புவது என்ன காரணம் எனக் கேட்ட தோழிக்குத் தலைவி கூறியது.

**“கொடிப் பூ வேழம் தீண்டி, அயல்**
**வடிக் கொள் யாஅத்து வண் தளிர் நுடங்கும்**
**அணித் துறை ஊரன் மார்பே**
**பனித் துயில் கொள்ளும் இன்சா யற்றே” (ஐங்.14:1-4)**

ஒழுங்குபட அமைந்த பூக்களைக் கொண்ட வேழம் தீண்டியதனால், அயலே உள்ள வடுக்களை உடைய மாமரத்தின் வளமான தளிர்கள் அசைந்து ஆடுதற்கு இடனான அழகிய நீர்த்துறைகளை உடைய தலைவனின் மார்பு குளிர்ந்த துயிலைத் தரும் இனிமையான மென்மையினை உடையது.

அத்துயிலைப் பெறாமையால் ஆற்றேனாகின்றேன் என்றாள். பாடலில் நீண்ட பூவையுடைய வேழம் தீண்டுவதால் மாமரத்தின் தளிர் அசையும் என்றதனால் தலைவனின் மார்பினைப் பரத்தையர் தீண்டுவதால், தலைவி பொறுமையிழந்து ஆற்றாள் என்ற உள்ளுறையில் 'வடுக்கொள் மா அத்து வண் தளிர்' தலைவன். கொடிப்பூ வேழம் என்பது பரத்தையைக் குறிப்பிடுகின்றது. கற்பொழுக்கத்தில் சிறந்து விளங்கிய கணவனுக்கும் மனைவிக்கும் ஊடல் இயல்பாக ஏற்படுகிறது. "ஊடலைத் தீர்க்கும் பொருட்டுத் தலைவன் பலவாறாக இரங்கிப் பேசித் தலைவியின் ஊடலைத் தணிக்க முற்படுவான். தலைவி மனம் இரங்கி அவனுக்குத் தன்னைத் தந்து மகிழ்கின்றாள்."[21] இது கற்புக்காமம் ஆகும். கற்புப் புணர்ச்சியில் இன்பத்தைத் துய்க்குமாறு செய்வது திருப்பரங்குன்றம் ஆகும். இதனை,

**"காதற் காமம், காமத்துச் சிறந்தது**
**விரும்போர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி**
**புலத்தலின் சிறந்தது, கற்பே அது தான்**
**இரத்தலும் ஈதலும் இவை உள்ளீடாப்**
**பரத்தை உள்ளதுவே : பன்புறு கழறல்"** **(பரி.9:14-18)**

என்கிறது பரிபாடல்.

தலைவனுக்கு மிக அன்புடைய பரத்தை ஒருத்தி தலைவனுக்கு வேறு பரத்தையருடன் உறவு இருப்பதை அறிந்து அவனுடன் ஊடி நின்றாள். இதனை அறிந்த தலைவி தன் கணவன் தன் இல்லத்திற்கு மீண்டபொழுது அச்செய்தியைத் தான் அறிந்ததாகக் கூறுவதை,

**"மகிழ் மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ**
**யாணர் ஊர – நின் மாண் இழை அரிவை**

**காவிரி மலிர் நிறை அன்ன நின்**

**மார்பு நனி விலக்கல் தொடங்கியோளே'' (ஐங்.42:1-4)**

என்னும் பாடலால் அறியலாம். இங்குத் தலைவன் மூன்று பெண்களுடன் பாலியல் உறவு கொண்டிருந்ததைக் காணமுடிகின்றது. இது ஒருவனுக்கு ஒருத்தி என்னும் சங்க அகக்கோட்பாட்டைக் கேள்விக்குறியாக்குகின்றது. நாளும் புதுப்புது பரத்தையரை நாடி நுகர்பவன் தலைவன். புதுவருவாய்க்கான அதிகமான காரணமே தலைவன் ஒழுகலாற்றுக்குக் காரணமாயிற்று தனக்கே உரிமை உடையவன் போலக் கருதி பரத்தையொருத்தி ஊடினாள் என்பது அறிந்ததால் தலைவி, தலைவனை விலக்கினாள் என்பதை அறியமுடிகிறது. பிரிதோர் பாடலில் தலைவன் பரத்தையர் இல்லத்திலிருந்து அவரோடு சேர்ந்து செய்த குறிகளோடு தன் இல்லம் நோக்கி வந்தான். அப்பொழுது தலைவி, தலைவனை வினவியதை,

**''வலைவல் பாண்மகன் வால் எயிற்று மடமகள்**

**வராஅல் சொரிந்த வட்டியுள், மனையோள்**

**யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊரே!**

**வேண்டேம், பெரும! – நின் பரத்தை**

**ஆண்டுச் செய் குறியோடு ஈண்டு நீ வரலே'' (ஐங்.48:1-5)**

என்பதன் மூலம் அறியலாம். வலைவீசி மீன் பிடிப்பதில் வல்ல பாணனுடைய வெண்மையான பற்களை உடைய இளமகள் வரால் மீனைக் கொண்டுவந்து சொரிந்த வட்டியுள் உழவர் மனைக் கிழத்தி முந்தைய ஆண்டு விளைந்த பழைய வெண்ணெல்லைச் சொரிதற்கு இடமான ஊரானே! நீ உன் காதற் பரத்தை முதலிய அடையாளங்களுடனே நம் மனைக்கு வருதலை யாம் விரும்பவில்லை. ஆகையால் இங்கு இருந்து உடனே நீ செல்வாயாக என்று தலைவி புலந்து கூறியதைக் காணமுடிகிறது.

தலைவனின் மீது தலைவி ஊடல் கொண்டதால் ஊடலைப் போக்க பாணனை வாயிலாக அனுப்பினான். ஊடல் தணிந்ததனை அறிந்த தலைவி, என்னர்த் தன்னோடு கூடுவதற்காகப் பாணன் துணையோடு தலைவன் வந்த போது தலைவி புலந்து கூறியதைக் கீழ்க்கண்ட பாடல் சுட்டுகின்றது.

**"அம் சில் ஓதி அசை நடைப் பாண்மகள்**
**சில் மீன் சொரிந்து பால் நெற்பெறூஉம்**
**யாணர் ஊர நின் பாண்மகன்**
**யாணர் நலம் சிதையப் பொய்க்குமோ, இனியே!" (ஐங்.49:1-4)**

பாணன் தன் பொய் மொழிகளால் பலரையும் மயக்கித் தலைவனொடு சேர்த்து வைப்பான். பொய் சொல்லுவதும் அதன் மூலம் பல பெண்களை ஏமாற்றுவதும் அவன் வழக்கம். அதனைப் போன்று என் நலத்தையும் சிதைக்க வந்துள்ளான் அதற்கு நான் எப்போழுதும் இடம் தர மாட்டேன் என்று தலைவி தலைவனைப் புலந்து கூறுவதைக் காண முடிகிறது. "தலைவன் தலைவியை விட்டு நீங்கிப் பொருட் பெண்டீருடன் சென்று உறவாடி பின் மீண்டு வரும்போது தலைவி அவனுடன் ஊடல் கொள்ளுதல் மரபு"[22] என்கிறார் ம.வெண்ணியா. இதே கருத்தினைப் போன்று,

**"பாணன் பொய்யன் என்பது**
**யாரினும் இனியன் பேரன்பினனே" (குறுந்.85)**

என்ற குறுந்தொகைப் பாடலில் பாணனைப் பொய் கூறுபவன் எனக்கூறி வாயில் மறுப்பதை இங்கு நினைவு கூறத்தக்கதாக அமைந்துள்ளது.

தலைவன் தலைவியின் மெலிவுக்குக் காரணம் என்ன என வினவினான். இம்மெலிவு நின் ஒழுக்கத்தினால் ஏற்பட்டது. தலைவன் மீண்டு வந்து விட்டாலும் தலைவிக்குப் பரத்தையோடு தலைவன் இருந்த நாட்களில் நிகழ்ந்த

நினைவுகளே நெஞ்சில் நிற்கின்றன. தலைவனோடு சோலைக்குப் போனாலும் நீராடப் போனாலும் முன்பு தலைவன் பரத்தையோடு சோலையில் இன்பம் துய்த்ததும் புனலாடியதுமே அவளது நினைவுக்கு வந்து துன்பம் தந்தன என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

**"துறை எவன் அணங்கும் யாம் உற்ற நோயே**
**சிறை அழி புதுப் புனல் பாய்ந்தெனக் கலங்கிக்**
**கழனித் தாமரை மலரும்**
**பழன ஊர – நீ உற்ற சூளே"** **(ஐங்.53:1-4)**

எனினும் அதை மறைத்துத் தலைவனின் பொய்ச்சூளே தன் துன்பத்திற்குக் காரணம் என்று கூறுகிறாள். "பரத்தைமையால் குலமகளிர் பெருந்துன்பம் அடைந்தனர் என்பது தெரியவருகிறது. பரத்தைமை மனைவியரினுடைய துன்ப நிலைகளின் வெளிப்பாடுகளாற் கண்டிக்கப்பட்டாலும் சங்க காலத்தை ஒட்டிய பதிணென்கீழ்க்கணக்கு நூல்கள் காலத்தில் நேரடியாகக் கண்டிக்கப்பட்டது போல் கண்டிக்கப்படவில்லை."[23] என்ற கூற்றுக்கிணங்க இல்லற மகளிர் கணவனின் பரத்தமையால் துன்பமடைந்தார். சமுதாயத்தின் கட்டாயத்தினால் ஊடல் தீர்ந்தாலும் தலைவி மனம் ஒன்றி வாழ முடியாமல் பாதிக்கப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

பரத்தையரிடம் சென்று வந்த தலைவனைக் கண்டு தலைவி அண்மையில் தான் புதல்வனை ஈன்ற என் மேனியை முயங்குதலை ஒழிப்பாயாக. நீ என்னைத் தழுவினால் உன் மார்பின் அழகினை என் தீம்பால் சிதைக்கும் என்று தான் குழந்தை பெற்றமையால் வயதானவளாகவும் அழகிழந்தவளாகவும் அவனுக்குத் தெரிவதைக் காட்டுகிறாள்.

**“கரும்பு நடு பாத்தியில் கலித்த ஆம்பல்**
**சுரும்பு பசி களையும் பெரும் புனல்ஊர**
**புதல்வனை ஈன்ற எம் மேனி**
**முயங்கன்மோ தெய்ய : நின் மார்பு சிதைப்பதுவே”  (ஐங்.65:1-4)**

கரும்பு நடுதற்குச் செய்த பாத்தியில் ஆம்பல் முதலின தழைத்துச் சுரும்பினத்தின் பசிகளையும் எற்றாற் போல பரத்தையர் தங்குதற்குரிய இல்லத்தில் யானிருந்து விருந்தினை உபசரிக்கலானேன் என்ற இகழ்ச்சிக் குறிப்பினைக் காட்டுகிறாள் தலைவி. என்னுடைய மார்பினை அணைத்தால் உன் அழகு கெட்டுவிடும் என்று தலைவனை விளிக்கும் போது தலைவனது தீய ஒழுக்கத்தைக் கடிந்து அவன் நெஞ்சுற உணர்த்திய முறையினைக் காணமுடிகிறது.

பரத்தையரோடு பொழுதுபோக்கி நெடிது துய்த்து வந்த தலைமகனைப் புலந்து கூறும் தலைவி கூற்றில் அமைந்துள்ள பாடலில்,

**“பழனப் பல்மீன் அருந்த நாரை**
**கழனி மருதின் சென்னிச் சேக்கும்**
**மாநீர்ப் பொய்கை யாணர் ஊர,**
**தூயர் நறியர் - நின் பெண்டிர்**
**பேஎய் அனையம் யாம் சேய் பயந்தனமே”  (ஐங்.70:1-5)**

குழந்தை பெற்றமையால் தான் பேய் போன்ற காட்சியளிப்பதாகக் கூறி ‘தூயர், நறியர் நின் பெண்டிர்’ என்று கூறுவது வெளி ஒப்பனையுடன் இருப்பதால் நின் பரத்தையர் உனது கண்களுக்கு அழகாகத் தோற்றமளிக்கின்றனர். உண்மையில் அத்தகைய அழகுடையவர் அல்லர் என்ற குறிப்புபடத் தலைவனின் பரத்தைமையச் சாடுகிறாள் தலைவி. நாரை பொது

நிலத்திலுள்ள பல்வேறு மீன்களையும் பிடித்துத்தின்று விட்டு வாளா தங்குதற் பொருட்டே நன்செய் நிலத்திலுள்ள மருதமரத்தின் உச்சிக்கு வருதல் போன்று நீயும் பொழுதெல்லாம் பல்வேறு பரத்தை மகளிரை ஆராய்ந்து கூடியிருந்து தூய இல்லத்திற்கு வாளா உளஇயல்பு குறித்தே வருகின்றனை எனப் பொருள் காண்பார் பெருமழைப்புலவர். மருதத்திணை மகளிரின் வாழ்வு கொடுமை வாழ்வாகவே அமைந்திருந்தது. இயல்பாகவே ஒரு பெண் கணவனின் பிற பிரிவுகளைவிடப் பரத்தைமைப் பிரிவை அதிகமாகவே வெறுத்தாள். கணவனின் பரத்தமைக்குத் தான் குழந்தைப் பெற்று வயதாகிவிட்டதே காரணம் எனத் தாழ்வு மனப்பான்மை கொண்டாள் இதனைப் பாடலின் வழி அறியமுடிகிறது.

பரத்தமை குறித்த மற்றோர் பாடலில் தலைவன் பரத்தையிடமிருந்து மீண்டு வந்தாலும் பரத்தை நினைவாகவே இருக்கிறான். எப்போதாவது தலைவியின் இல்லத்திற்கு வரும் தலைவன் பரத்தையையே நினைத்துக் கொண்டுருப்பதைக் தலைவியால் பொருத்துக் கொள்ள இயலவில்லை. பிரிந்திருந்து துன்பத்தைக் செய்த தலைவன் சேர்ந்திருக்கும் போதும் துன்பத்தையே தருகிறான் என்று தலைவி வருந்துவதை,

**“எக்கர் ஞாழல் நறுமலர்ப் பெருஞ்சினைப்**
**புணரித் திளைக்கும் துறைவன்**
**புணர்வின் இன்னாள் அரும் புணர்வினனே”      (ஐங்.150:1-3)**

என்ற அடிகளின் வழி அறிய முடிகிறது. மேலும் தலைவியோடு அரிதாகப் புணரும் போதும் பரத்தையை நினைக்கும் தலைவனுக்குத் தலைவி வாயில் மறுப்பதையும் காணமுடிகிறது.

தலைவன் பரத்தமையொழுக்கம் காரணமாகத் தலைவி புலவி கூர்ந்தாள், தோழி பல நிகழ்வுகளைக் காட்டி அவள் ஊடல் தீர்க்க முயன்று தோற்றாள். இதனை,

**"வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தென**
**காணிய சென்ற மட நடை நாரை**
**பதைப்ப, ததைந்த நெய்தல் கழிய**
**ஓதமொடு பெயரும் துறைவற்குப்**
**பைஞ்சாய்ப் பாவை ஈன்றனென் யானே" (ஐங்.155:1-5)**

என்ற பாடலில் தலைவியின் மீது உண்மையான அன்பில்லாமல் உலகியலுக்காகத் தலைவியின் பூப்பிற்குப்பின் பரத்தையிடமிருந்து தலைவன் வருகிறான். இதையறிந்த தலைவி பாலுறவிற்கு எதிர்ப்பு தெரிவிப்பதோடு மகப்பேற்றையும் மறுத்துரைக்கிறாள். பிள்ளைப் பேற்றிற்காக வரும் தலைவனோடு புணர தலைவி விரும்பவில்லை என்றும் பைஞ்சாய்க் கோரையால் செய்த பாவையே தனக்குப் போதும் என்று தலைவி கூறுவதைப் பாடலின் வழி அறியமுடிகிறது. மேலும் தலைவி தன் கணவனோடு அன்பான இல்லறம் நடத்தவே விரும்புகிறாள் என்பதும் புலப்படுகிறது.

தலைவன் தன் முதல் மனைவி இருக்கும் பொழுதே தன் தகுதிக்கு ஏற்பத் தன் குலத்தாள் ஒருத்தியை இரண்டாம் மனைவியாக ஏற்று, அவளைத் தன் இல்லத்திற்கு அழைத்து வந்தபோது முதல் மனைவி அவளை மகிழ்ந்து ஏற்றுக் கூறியது இது,

**"மயில்கள் ஆல, பெருந் தேன் இமிர**
**தண் மழை தழீஇய மா மலை நாட**
**நின்னினும் சிறந்தனள், எமக்கே – நீ நயந்து**
**நன் மனை அருங்கடி துயர" (ஐங்.292:1-4)**

மயில்கள் மழையினால் மகிழ்ந்து ஆடவும், மரஞ்செடி கொடிகள் தழைத்துப் பூத்தலால் அதனைத் தேனீக்கள் மகிழ்ந்து உணவாக உண்டு ஆராவரிக்கவும் குளிர்ந்த மழைமுகில்கள் முகட்டைத் தழுவிக் கிடக்கும் பெரிய மலையை உடைய நாட்டின் தலைவனே! நீ விரும்பி நம் நல் மனையின்கண் கொணர்ந்து வதுவை செய்து கொண்டமையின், அம்மணத்தால் எம் நலமும் சிறந்தலான். இப்பொழுது யாம் பெற்ற இவள் எமக்கு நின்னினும் மேலானவளாவாள் என மகிழ்ந்து தலைவி கூறுகின்றாள். "சங்க காலத்தில் வழக்கத்திலிருந்த பல மனைவியர் மண முறை பற்றி மேலும் சில பாடல்கள் மூலம் அறிந்து கொள்ளலாம். அவ்விதம் இங்குப் பரத்தையரைப் பற்றிய சிறு குறிப்பு சுட்டிக்காட்டத் தக்கது. ஏனெனில் சங்க காலத் தலைவன் பரத்தையரை மணந்த செய்தி நமக்குப் பல பாடல்களின் வழி காணக்கிடைக்கின்றது"[24] என்பர். தலைவன் வேறு ஒரு திருமணம் செய்து கொண்டு வரும் பெண்ணைத் தலைவி வரவேற்று மகிழ்வதை அறியமுடிகிறது.

தலைவன் பரத்தையோடு சென்று நீராடி அயர்ந்து மீண்டும் தன் இல்லம் திரும்பித் தலைவியைப் பாராட்டுகிறான். தலைவி, தலைவன் பரத்தையுடன் நீராடிய செயலை அறிந்ததால் அவனுடன் ஊடல் கொண்டு, தலைவி,

**"சுடர்ப் பூந் தாமரை நீர் முதிரி பழனத்து**
**அம் தூம்பு வள்ளை ஆய் கொடி மயக்கி**
**வாளை மேய்ந்த வள் எயிற்று நீர் நாய்**
**முள் அரைப் பிரம்பின் மூதரில் செறியும்" (அகம்.6:16-19)**

என்கிறாள். நீர்நாயானது வாளைமீனுக்குக் காவலாய் இருந்த வள்ளைக் கொடியை நெகிழ வைத்துப் பின்னர் அம்மீனை உண்டு, பிரப்பந்தூரிலே தங்கியது. அதுபோல தலைமகன், பரத்தைக்குக் காவலாய் இருந்த தாய்

முதலியோரது காவலை நெகிழ்த்து, குலமகளிர் அல்லாத விலைமகளிரை அனுபவித்துவிட்டு ஒரு பயனும் இன்றி தங்கிட மாத்திரமே தலைவியின் வீட்டிற்கு வந்ததாக மேலே கண்ட அடிகளால் அறியப்படுகிறது.

தலைவி தன் தலைவனை நோக்கி நீர் நாய்களையுடைய நீர் நிலையின் கண் செழித்து வளர்ந்த தாமரையின் அல்லியாகிய விளக்கம் பொருந்திய இதழினை ஒத்த குற்றமற்ற உள்ளங்கையினையும், பவளம் போன்ற அழகிய வாயினையும், நாவால் திருத்தமாகப் பேசப்படாத கேட்டார்க்கு மகிழ்ச்சியைத் தரும் இனிய குதலைச் சொற்களை உடைய, பகைவரும் விரும்பும் பொற்றொடி அணிந்த நம் புதல்வனைப் பொன்னாலான அணிகலன்களைத் தாங்கிய கூரிய பற்களையுடைய நின் பரத்தை அவன் தெருவில் சிறுதேர் உருட்டிக் கொண்டு தனியனாய் நிற்பதைக் கண்டாள். நின் உருவ ஒப்புமை கருதிப் போற்றி, காண்பார் யாரும் இல்லாமையால் அவனைச் சென்றடைந்து மிக மகிழ்ச்சியுற்று என் உயிரே வருவாயாக' எனப் பூண் அணிந்த இளைய முலையிடத்து அணைத்துக் கொண்டு நின்றவளைக் கண்டேன். பின்,

**"நாயுடை முது நீர்க் கலித்த தாமரைத்**
**தாதின் அல்லி அவிர் இதழ் புரையும்**
**மாசு இல் அங்கை, மணி அருள் அவ் வாய்**
**நாவொடு நவிலா நகைபடு தீம் சொல்**
**யாவரும் விழைம் பொலந்தொடிப் புதல்வனை**
**தேர் வழங்கு தெருவில், தமியோற் கண்டே" (அகம்.16:1-6)**

அது கண்ட யான் விரைந்து வந்து அவளைத் தழுவிக் கொண்டு குற்றமற்ற இளமகளே ஏன் மயங்கினாய்? இவனுக்கு நீயும் தாயாகுவை என அவளிடம் கூறினேன் என்றாள். தலைவன் பரத்தையரிடையே இருந்த

உறவானது வதுவை முறையிலும் அமைந்திருந்தது. தலைவி பரத்தையைத் தன் புதல்வனின் தாய் என்றும் தங்கை என்றும் கூறிய வழி தலைவியானவள் பரத்தையை வெறுக்கவோ, ஒதுக்கவோயில்லை என்பதை அறியலாம். “தலைவனின் இரண்டாம் மனைவியாக இப்பரத்தை இருப்பதால் தலைவி, பரத்தையரிடையேயான உறவு அக்காள் தங்கை உறவாகி விடுகிறது.”[25] என்ற தமிழரின் பாலியல் முறைமைகள் என்ற நூலின் ஆய்வுக் கூற்று இங்குச் சுட்டிக் காட்டத்தக்கது.

தலைவன் பரத்தமை நாடி சென்றமையால் தலைவியோ தலைவன் மீது ஊடல் கொண்டிருந்தாள். தலைவியின் ஊடலைத் தீர்க்க தோழியிடம் வேண்டிய தலைவன் வாயில் மறுக்கவே நேரில் தலைவியை அணுகிப் பொய்ம்மொழி பல கூறினான்.

**“சிறுபுறம் கவையினனாக, உறு பெயல்**
**தண் துளிக்கு ஏற்ற பல உழு செஞ் செய்**
**மண் போல் நெகிழ்ந்து, அவற் கலுழ்ந்தே**
**நெஞ்சு அறைபோகிய அறிவினேற்கே” (அகம்.26:23-26)**

என்ற பாடலில் பரத்தையரிடமிருந்து மீண்ட தலைவன் தோழி வாயில் மறுத்ததால் தானே தலைவியின் ஊடலைத் தீர்க்க முனைந்தான். தன் மகன் மூலம் ஊடலைத் தணித்தான் தலைவன், இதையறிந்த தோழியிடம் தான் ஊடல் தீர்த்தலைக் கூறும் தலைவி. தலைவன் பணிந்தபோது குளிர்ந்த மழைத்துளிகள் பலவற்றை ஏற்ற பலமுறை உழப்பட்ட வயலின் மண்ணைப் போல் என் நெஞ்சம் கலங்கியது என்று தலைவி கூறுவதாகப் பாடல் அமைகிறது. சங்கப் பாடல்கள் பெரும்பாலும் தலைவியின் தாய்மைப் பேற்றிற்குப் பிறகே தலைவன் பரத்தையரிடம் சென்றதாகக் கூறுகின்றன.

திருமணமான புதிதில் தலைவி வேண்டாமென்றாலும் புணர்ந்த தலைவன், தலைவி குழந்தை பெற்றதும் வெறுக்கிறான். தலைவனோடு புணரத் தலைவி விரும்பினாலும் தலைவியின் மார்பில் சுரக்கும் பால் தன் மார்பைச் சிதைக்கும் என்று தலைவன் வெறுப்பதை பாடல் புலப்படுத்துகிறது.

**மருதத் திணைத் தலைவி**

மருதத் திணைத் தலைவியின் கற்புக் கால வாழ்வை மிகுதிப்படுத்திக் கூறியதைப் பாடலால் அறிய முடிகிறது. களவுக் காலத்துத் தலைவியின் நிலையைப் பற்றி தனிக் கூற்றுகள் அமைக்கவில்லை. கற்பின் போது களவு வாழ்வை நினைவு கொள்வனவாகவே இப்பாடல்களில் தலைவி நலம் கூறப்பட்டுள்ளது.

மணம் செய்து கொள்ளாமல் காலத்தை நீட்டித்து, பின் மணம் செய்து கொண்ட தலைவன் யான் வரைந்து கொள்ளாத காலத்தே நீயிர் என்ன செய்தீர்? என வினவ அதற்குத் தலைவி,

**"வாழி ஆதன் வாழி அவினி**
**மாரி வாய்க்க ! வளம்நனி சிறக்க" (ஐங்.10:1-2)**

எனத் தலைவன் வரைந்து கொள்ளாமல் ஏமாற்றி வந்த காலத்தில், தலைவி தன் நலன் கண்டு கவலைப்படாமல் தன் நாட்டை ஆளும் மன்னனும் அவன் நாட்டில் நன்மையும் நன்மையால் மழையும் வளமும் பெருக வேண்டுமென வேண்டிக் கொண்டதாகக் கூறுகிறாள். இதன் மூலம் தலைவியின் பொதுநலப் பண்பு புலப்படுகிறது.

**கற்பில் தலைவி**

மருதத் திணைத் தலைவி கற்புக் காலமாகிய மனை வாழ்க்கைப் பிரிவில் புலம்பி வாடும் நிலையை உடையளாகவும் தலைவன் தன்னை மணந்து கொண்ட சில நாட்களிலேயே புறத்தொழுக்கம் மேற்கொண்ட பொழுது இல்லறக் கடமையை அறநெறியோடு செய்பவளாகவும், சிறந்த மனையோள் என்பதை எண்ணி வாழ்பவனாகவும், இல்லறம் சிறக்க இல்லத்தில் விருந்தோம்பல் சிறக்க வேண்டுபவனாகவும், தலைவன் பிரிவுக் காலத்தும் இல்லறம் தவறாமல் சிறந்த கற்புடை மகளிர்க்கு அறமென வாழ்ந்தவளாகவும் காட்டப்படுகிறாள்.

பரத்தமையை மேற்கொண்ட தலைவனை ஊடி வாயில் மறுத்தும், தம் மீது தலைவன் கொண்ட காதல் உண்மையென உணர்ந்து புலவி நீங்கித் தலைவனைக் கூடி விருந்து பல செய்தும் அவன் நலம் பொருட்படுத்தித் தன்னலம் கருதாமல் வாழ்த்தும், தலைவனது செயல் கண்டு ஊடல் கொள்ளும் தலைவி, அவன் கூறும் பொய்யால் தெய்வத்தால் தலைவனுக்குத் தீங்கு வராது இருக்க வேண்டியும் நல் உள்ளம் கொண்டவளாகத் திகழ்கின்றாள்.

## தொகுப்புரை

- இனக்குழுச் சமுதாயத்திலிருந்து நிலவுடமைச் சமுதாயமாக மாறிய போது பலதாரமணமும் பரத்தைமையும் பல்கிப் பெருகின. மருதத்திணை மக்களின் குடும்ப வாழ்வில் பரத்தைமையால் ஏற்படும் ஊடலே மிகுதியாகக் காணமுடிகிறது.
- சமுதாயத்திற்காக மக்களால் ஊடல் தீர்ந்தாலும், தலைவன் பரத்தமை ஒழுக்கத்தில் இருந்தபோதும் மீண்டு வந்த பிறகும் மிகுதியான மன உளைச்சலுக்கு ஆளாகியிருந்தான். இம்மன உளைச்சல் கணவன் மனைவி பாலுறவுக்குள் சிக்கல்களை ஏற்படுத்தியதைச் சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.
- தலைவியோடு சேர்ந்திருந்து இன்பம் துய்ப்பதை விட பொருளீட்டுதலே முக்கியமானது எனக் கருதி வருத்தம் தரக்கூடிய பாதைகளைக் கடந்து தலைவன் சென்றதை எண்ணி தலைவி வருந்தியுள்ளாள்.
- மரங்களும் செடிகளும் பூத்துக் குலுங்கும் இளவேனிற்காலமும், வெளவால் போன்ற பறவைகள் பழங்களை உண்ணும் பொருட்டுப் பறந்து திரியும் மாலைக்காலமும் காதலர்க்கு இன்பம் மிகுவிக்கும் பொழுதுகளாகும். அத்தகைய பிரிவதற்கரிய காலத்திலும் தலைவன் பொருளீட்டுதலின் பொருட்டுப் பிரிந்து சென்றதை எண்ணித் தலைவி வருந்துகிறாள்.
- காமநோய் கொண்டு துயிலாது துன்பத்தில் உழுலுதலும், இரவுப் பொழுது உலகத்து உயிர்களையெல்லாம் துயிலச் செய்கிறது. யான் ஒருத்தியே உறங்காமல் உள்ளேன் என குறுந்தொகை தலைவி வருந்துகிறாள்.

❖ தலைவனின் இரண்டாம் மனைவியாக இப்பரத்தை இருப்பதால் தலைவி, பரத்தையரிடையேயான உறவு அக்காள் தங்கை உறவாகிவிடுகிறது.

❖ தலைவன் வரைந்து கொள்ளாமல் ஏமாற்றி வந்த காலத்தில், தலைவி தன் நலன் கண்டு கவலைப்படாமல் தன் நாட்டை ஆளும் மன்னனும் அவன் நாட்டில் நன்மையும் நன்மையால் மழையும் வளமும் பெருக வேண்டுமென வேண்டிக் கொண்டதை ஐங்குறுநூறு புலப்படுத்துகிறது.

❖ சங்கப் பாடல்கள் வாயிலாக நீர், நிலம், காற்று, ஆகாயம் நெருப்பு ஆகிய ஐம்பூதங்களைப் போன்று பாலியல் என்பதும் ஒரு இயற்கையின் நீட்சியாகும் என்பதை உணரமுடிகிறது. இயற்கையின் கொடையாக வானத்தில் இருந்து பெய்யும் மழையின் நீரானது ஒன்றாக உருவெடுத்துத் தனது போக்கில் மலைகள், காடுகள், கரைகளைக் கடந்து கடலில் சென்று கலப்பது போல, ஆண், பெண்ணின் உணர்வாக அமையும் பாலியல் உணர்வினை உரிய காலத்தில், உரிய இடத்தில் உரிய நேரத்தில் அதனை வெளிப்படுத்திக் கொள்வதும், உடலியல் அடிப்படையிலும் உளப்பண்பின் அடிப்படையிலும் இன்றியமையாததாகிறது. சங்ககால தலைவன், தலைவி வாழ்வியலில் காதல், காமம் இவை இரண்டும் சரிநிகரான பங்கு வகித்தமையினைச் சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

❖ பெண் என்பவள் பெண்மைத்தன்மை உடையவளாகவும், கற்பின் காரணமாக ஒடுக்கப்பட்டும், தனித்து இயங்கும் ஆற்றல் இழந்து ஆணைச் சார்ந்து வாழ்பவளாகவும் கருதப்படுகிறாள். ஆண் அறிவு சார்ந்தும், பெண் உடல் சார்ந்தும் ஆளுமைகளாகச் சங்க இலக்கியங்களில் கட்டமைக்கப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.160.
2. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.118.
3. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, 2012, ப.1874.
4. தமிழ் இலக்கியங்களில் பாலினச் சமத்துவம், ஆய்வுக்கோவை, 2014, ப.245.
5. க.பஞ்சாங்கம், புனைவுகளும் உண்மைகளும் திறனாய்வுக் கட்டுரைகள், ப.4.
6. ந. முருகேசபாண்டியன், அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில், ப.18.
7. சிற்றேடு, காலாண்டிதழ் ஜனவரி-மார்ச், 2013, ப.16.
8. மேலது, ப.22.
9. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, 2012, ப.457.
10. செ. மகேஸ்வரி, பரிபாடலில் சமூகம், ப.6.
11. சோமசுந்தரம், திருக்குறளில் பாலியல், ப.35.
12. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப.263.
13. பிறழ்பு உளவியல், ப.105.
14. தமிழண்ணல், தொல் பொருளதிகாரம், ப.408.
15. மேலது, ப.408.
16. அ.மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.12.
17. சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனிதநேய நெறிகள், ப.52.

18. க.சிவனேசன், தி.ஜானகிராமன் புதினங்களில் பாலியல் சிக்கல்கள், ப.46.

19. சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனிதநேய நெறிகள், ப.53.

20. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.128.

21. செ. மகேஸ்வரி, பரிபாடலில் சமூகம், ப.5.

22. ம. வெண்ணிலா, கட்டுரைகளும் கருத்துக்களும், ப.49.

23. ர. விஜயலட்சுமி, தமிழகமகளிர், ப.196.

24. அ. மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.55.

25. மேலது, ப.57.

# இயல் நான்கு

## தோழியை மையமிட்ட பாலியல் பதிவுகள்

தமிழரின் தலை இலக்கியமாய் தன்னிகரற்ற செவ்விலக்கியமாய் இவ்வுலகில் தமிழ் மொழியின் புகழ்பாடும் ஒப்பற்ற படைப்பாக விளங்குவது சங்க இலக்கியமாகும். இலக்கியங்கள் என்பவை வாழ்க்கையின் எதிரொலிகள். சமுதாயத்தின் வளர்ச்சியை காட்டும் மைல் கற்கள். சங்க இலக்கியங்கள் தமிழர்களின் வாழ்க்கை நோக்கங்களைக் காட்டும் காலக் கண்ணாடி, தமிழிலுள்ள சங்க இலக்கியமும், தொல்காப்பியமும் நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போன்றவை சங்கப் பாடல்கள் என்பவை பல்வேறு காலங்களில் பல்வேறு இடங்களிலிருந்து எழுதப்பட்டுள்ளன. பண்டைய இலக்கியப் பாடல்களில், பழக்கவழக்கங்கள், குடும்ப அமைப்பு, தமிழரின் தனித்தன்மை முதலியன பதிவு செய்யப்பட்டுள்ளதை நாம் அறிய முடிகிறது. இவ்வாறான சிறப்புகளைப் பெற்றிருக்கும் சங்கப் பாடல்கள் பல பாத்திரங்களை உள்ளடக்கியதாக இருந்தாலும் 'தோழி' எனும் பாத்திரம் தனக்கென தனியாக ஓர் இடம் பெற்றிருப்பதைச் சங்க இலக்கியத்தின் வழி அறியலாம். வ.சுப.மாணிக்கனார் அகத்தினை ஓர் பெண்ணிலக்கியம் என்பார். அவர் கூற்றுக்குச் சான்றாக பெண் மாந்தர்கள் அதிக அளவில் பேசப்படும் அக இலக்கியத்தில் தலைவன், தலைவி ஆகிய இருவருக்கும் பாலியல் சார்ந்த நிலையில் தோழியானவள் எவ்வாறு துணை புரிந்தாள் என்பதை ஆராயுமுகமாக இவ்வியல் அமைகின்றது.

அகமாந்தர்களில் முக்கிய இடத்தைப் பெறுபவள் தோழி, இவள் தலைவியின் பிறப்பு முதல் அவளது ஒவ்வொரு சூழலிலும் உடன் இருப்பவள். இத்தன்மையுடைய தோழியின் மூலமாகவே உடன் போக்கானது தொடங்கி முடிகிறது. 'உயிர் தவச் சிறிது காமமோ பெரிது' என்பதால் தோழி தலைவன் தலைவியைப் பல நிலைகளில் அணுகி அறத்தோடு நின்று அறிவுறுத்துவதோடு சிறந்த முறையில் உடம்படுத்திச் செயல்படச் செய்கிறாள். அவ்வாறு செயல்படச் செய்யும் தலைவியின் உடன் இருப்பவளான தோழியின் செயல்பாடுகள் சிறப்புக்குரியனவாகும்.

தோழி செவிலித் தாயின் மகள் ஆவாள்

**"தோழி தானே செவிலியது மகளே" (தொல்.களா.1071)**

எனக் குறிக்கின்றார். அகப்பாடல்களில் தலைவன் தலைவியை அடுத்துச் சிறப்பிடம் பெறுபவள் தோழி. தலைவியின் களவு வாழ்விலும் கற்பு வாழ்விலும் அறிவுரை கூறுவதில் முக்கியப் பங்கு வகிப்பவள் தோழியே. இயற்கைப் புணர்ச்சியின் காரணமாக ஒருவரை ஒருவர் கண்டு களவு வாழ்வில் ஈடுபட்ட காதலர்கள் கற்பு வாழ்க்கையைத் தொடர தோழியே முக்கியப் பங்காற்றுகிறாள். தலைவியின் இளமைப் பருவத்திலிருந்தே அவளோடு உடன் இருந்து நட்பாகத் திகழ்பவள். தலைவியின் காதலைப் பெற்றோருக்கு எடுத்துக்கூறி திருமணத்திற்கு வழி செய்பவள். தலைவனைப் பல நிலைகளில் இடித்துரைத்து அறிவுரை கூறுவதிலும் தலைவியை ஆற்றுப்படுத்துவதில் வல்லவளாகவும் தோழி காணப்படுவதைச் சங்க இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.

தலைமைப் பண்பு மாந்தர்க்குத் துணைச் செய்யும். துணை மாந்தர்களில் தலைமையானவர் தோழி. தோழி உளவியலும் உலகியலும் அறிந்தவள், துணிவுடையவள், பொறுப்பு வாய்ந்தவள். பேச்சுத் திறன் மிக்கவள், வாயிலாக வருவதற்குரியவள். அறத்தோடு நிற்கும் தகுதியுடையவள். தலைவியிடம் மிகுந்த உரிமையுடையவள் தோழியாவாள்.

**தோழி சுட்டும் காரணங்கள்**

தலைவியின் மண வாழ்க்கையை வேண்டும் தோழி அதற்கான காரணங்களாக 1. அலர், 2. வெறியாட்டு 3. நொதுமலர் 4. இறிசெறிப்பு 5. தலைவனின் ஆற்றாமை, தலைவியின் ஆற்றாமை ஆகியனவற்றைச் சுட்டுகிறாள். இதில் அலரும் வெறியாட்டும் நொதுமலர் வரையும் சமுதாயத்தை நினைத்துக் கூறியவை, இற்செறிப்பு குடும்பச் சூழலை நினைவுகூர்ந்து ஆற்றாமை தலைவனைச் சுட்டியது. ஆற்றாமை தலைவியை நோக்கியதாகும். இவை அனைத்தும் பெரும்பாலும் இரவுக்குறியில் வரும் தலைவனிடம் வரைவு வேண்டுவதாகவே உள்ளன.

**தொல்காப்பியர் கூறும் தோழி கூற்று**

அகத்திணையியலில் தொல்காப்பியர் தோழியின் கூற்று நிகழும் இடங்களாக,

**“தலைவரும் விழும நிலைஎடுத் துரைப்பினும்**
**போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்**
**நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்**
**வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச் சுட்டித்**
**தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்**

**நோய்மிகப் பெருகித்தன் நெஞ்சுகலுழ்ந் தோளை**
**அழிந்தது கழீஇய ஒழிந்தது கூறி**
**வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு**
**என்றிவை எல்லாம் இயல்புற நாடின்**
**ஒன்றித் தோன்றும் தோழி மேன''  (தொல்.பொருள்.985)**

என்று தலைவன் தான் தலைவியின் மீது கொண்ட அன்பைத் தோழியிடம் கூறும்போதும், தலைவனுடன் தலைவியை, உடன் போகுமாறு செய்யும் போதும், தலைவியைத் தலைவனிடம் கொண்டு விடும்போதும் கூற்று நிகழ்த்துவாள். "தலைவி தலைவனைப் பிரிந்தால் பிரிவாற்றாது உயிர்துறப்பாள் என்று தலைவனுக்கு எடுத்துரைக்கும் பொழுதும், தாயைப் பிரிந்து வருத்தத்தில் அறத்தோடு நிற்கும் தலைவியைத் தேற்றித் தெளிவிக்கும் பொழுதும், மகளைப் பிரிந்து வருந்தும் தாயிடம் அவளது வருத்தத்தைப் போக்கித் தலைவி அறத்தோடு நின்றதைத் தாயின் மனம் ஏற்குமாறு கூறும் போழுதும் தலைவி வழியிடை வருத்தம் தோன்றாது தலைவனோடு மகிழ்ந்தே செல்வாள்"[1] என்பர். இவ்வாறு தலைவன் தலைவியின் களவொழுக்கத்தைக் காக்கும் பொழுதும் அவர்களது வரைவு விரைவில் அமையச் செய்யவும் தோழி கூற்று அமைவதாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

**தோழியும் ஆளுமையும்**

தோழி செவிலியின் மகளாக இருக்கிறாள். அவள் மரபின் வழி நற்றாயை அறிந்திருக்கும் செவிலியைப் போல எப்போதும் தலைவியின் அருகிலேயே இருந்து செயல்படுகிறாள். எனவே அவளின் செயலும் சிந்தையும் தலைவியைச் சுட்டியே அமைகின்றது. "பூக்கொய்தல், புனலாடுதல், தினைப்புனம் காத்தல் முதலான சூழ்நிலைகளின் போது அவள் தலைவிக்குத்

துணையாக நிற்கிறாள். எனவே இதன் தொடர்பாக அவளுடைய ஆளுமை தலைவியின் சார்பாய் அமைந்த உடல் உள்ள இயல்புகள் போக்கு நடத்தை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்துள்ளது."[2] தோழி அனைவரிடமும் நல்ல விதமாகப் பழகுகிறாள். அவள் தலைவனிடமும் தலைவியிடமும் செவிலித் தாயிடமும் திறமையாக நடந்து கொள்கிறாள். அவள் எப்போதும் தன்னம்பிக்கையுடன் காணப்படுகிறாள். ஆர்வமுடனும், நம்பிக்கையுடனும் செயல்படுகிறாள். பொறுமையுடனும், விருப்பத்துடனும் இயங்குகிறாள். வரைவு நீட்டித்தல், குறியிடையீடு, பொருள்வயிற் பிரிவு, முதலான ஏமாற்றங்களையும் துன்பங்களையும் சிறந்த முறையில் கையால்வதைக் காணமுடிகிறது. இதுவே தோழியின் சிறந்த ஆளுமைத் தன்மையாக அமைகிறது.

**தோழியின் பண்புகள்**

உளவியல் வல்லுனர்கள் ஆளுமையுடையவர்களை "அகமுகத்தினர் (Interovert) என்றும் புறமுகத்தினர் (Extrovert) என்றும் மக்களை இருவகையாகப் பிரிப்பர்."[3] புறமுகத்தினரின் முக்கியப் பண்புகள் சில தோழியுடன் பொருந்தி வருவதைக் காணலாம்.

- ❖ சூழ்நிலைக்கு ஏற்றபடி விழிப்புடன் செயல்படுதல்
- ❖ அனைவருடனும் எளிதாகப் பழகுதல்
- ❖ துடிப்பான முறையில் செயல்படுதல்
- ❖ மாற்றங்களை ஏற்படுத்துதல்
- ❖ தன் உணர்ச்சிகளைப் பிறர்க்குப் புலப்படுத்துதல்
- ❖ எந்த நிலைக்கும் தன்னைத் தயார் செய்தல்

❖ தலைவன், தலைவிக்கு இணைப்பாகச் செயல்படுதல்

❖ கலகலப்பாகவும் உற்சாகமுடனும் பேசுதல்

❖ பிறர்மேல் காரணமற்ற வெறுப்பு இல்லாமை

❖ அன்பான முறையில் காரணங்களை எடுத்துரைத்தல்

எனவே இவை அனைத்தும் ஆளுமையின் அடிப்படையில் தோழியைப் புறமுகத்தினளாக வகைப்படுத்தலாம்.

**தோழியிற் புணர்ச்சி**

ஐந்திணை இலக்கியப் படைப்பிற்குத் தோழி என்ற பாத்திரப்படைப்பு, மிக இன்றியமையாதது. தோழியின்றிக் களவொழுக்கம் நீளாது. தலைவனுக்கு ஒரு தோழனும் தலைவிக்கு ஒரு தோழியும் வழிகாட்டிகளாகத் திகழ்கிறார்கள். சங்க இலக்கிய மாந்தர்களில் பாங்கன் படைப்பு இருவகைப் பயனுடையது. தலைவனுக்கு ஆறுதல் கூறி பார்த்துச் சொல்லும் அறிவிப்பாளன். தலைவன் செல்லுமிடம் எல்லாம் சேர்ந்து செல்லும் வழக்கமுடையவன் பாங்கன். களவின் தொடக்கத்தே வந்து போய்விடுபவன். தலைவனுக்குச் சிறிதும் இடையூறு செய்யாத தோழன். ஆனால் தோழியின் இலக்கியப் படைப்பு பாங்கனைவிட மாறுபட்டு அமைந்துள்ளது.

ஆண்களுக்கு நினைத்த இடமெல்லாம் சுற்றத்திரியும் போக்குரிமை வழக்கில் உண்டு. மகளிர்க்கு இல்லை. எனவே, தோழி தலைவியின் நிழல்போல் தொடர்ந்து காப்பாளராகத் திகழ்கிறாள். அகநானூறு தோழியின் இயல்பை,

**“காம்பும் பூண்டிசின் கடையும் போகலை**
**பேதையல்லை மேதையங் குறுமகள்” (அகநானூறு)**

எனச் சிறப்பித்துப் பாடுகிறது. தலைவி, இரவும் பகலும் தாய், தந்தையின் கடுங்காவலுக்கு உட்படுவது தமிழர் நாகரிகம். பெற்றோர் இசைவு பெற்றுத் தலைவி வெளியில் சென்றாலும் தோழியும் விடாது உடன் செல்வாள்.

ஒரு சமூகத்தின் நாகரிகப் பாங்கிற்கு அடையாளமாக இருப்பது குடும்பம் என்ற அமைப்பு "மனம் விரும்பிய காதலுக்குத் சமூகத்தின் எப்பகுதியும் தடையாக இல்லை என்பது குடும்ப அறம் கெடாமல், தலைவிக்கு உற்ற துணையாக இருந்து அறிவுரை கூறி நெறிப்படுத்துபவளாகத் தோழி திகழ்கிறாள். தலைவி தலைவனைப் பிரிந்திருக்கும் போது அவளை ஆற்றுவித்தல், தலைவியின் நிலைக்காக வருந்துதல், தலைவியின் நிலைகுறித்து அவளிடமே பேசுதல், தலைவனை இடித்துரைத்தல், தலைவியின் இடத்தில் தன்னை நிறுத்தித் தலைவியின் நிலையினைத்தான் உற்ற நிலையாகக் கூறுதல் போன்றவை தோழியின் பண்புகளாகச் சுட்டலாம்."[3] இவைதவிர தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தைக் கண்டு வருந்துதல், தலைவனின் பகற்குறியின் போது அவனைத் தொடர்ந்து போகச் சொல்ல இயலாத நிலை, இரவிலும் பகலிலும் தமது மனநிலையை எண்ணிக் கலங்குதல், தலைவன் வரவால் 'அலர்' குறித்த அச்சம், தலைவியின் நிலைகண்டு துயர் அடைதல், தலைவன் மீது பிரிவு குறித்த அச்சம் போன்றவையும் தோழியை உயர்ந்த நிலையில் மதிப்பிட உதவுகிறது.

இவ்வாறு சங்க இலக்கியங்களில் தோழியின் செயல்கள் பொதுவாகத் தன்னையும் தலைவியையும் உள்ளடக்கித் தலைவி நிலையில் தன்னை வைத்துப் பேசும் செயல்களாக வெளிப்படுகின்றன.

**தோழியிற் கூட்டம்**

தோழியால் தலைவனும் தலைவியும் கூடும் கூட்டம். இது களவொழுக்கத்தில் பெரும் பகுதி நிகழ்வதாகும். அதில்,

1. பாங்கி மதியுடம்பாடு
2. குறியிடம்
3. வரைவு கடாதல்
4. அறத்தொடு நிலை
5. வரைதல்
6. உடன் போக்கு

என ஆறு வகைப்படும். "பாங்கி தோழி இவள், தலைவியைத் தானாகவே கொள்ளும் உயிர்த்தோழி, தலைவிக்கு இன்னும் தோழியர் பலருண்டு அவர்கள் விளையாட்டு மகளிரும் வேலைக்காரிகளுமாவர். விளையாட்டு மகளிர்ஆயம் எனப்படுவர்."[5] மேற்கூறிய ஆறு நிலைகளில் தோழியிற் கூட்டம் அமைகின்றது.

**தோழியின் நோக்கம்**

அக இலக்கியத்தில் தோழி எனும் பாத்திரம் இல்லையெனில் களவு ஒழுக்கம் என்பது கேள்விக்குறியாக இருக்கும். காமத்தின் உச்சத்தில் இருக்கும் இளம் நெஞ்சங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்பதும் காதலின் அடுத்த நிலையும் சில நாளைக்குத் தோன்றாது. இந்த நேரத்தில்தான் தலைவன் தலைவியரின் செய்கைகளைத் தோழியானவள் அறிவு நிலையில் நின்று நாடுகிறாள். களவை, கற்பாக்க முயற்சி செய்பவள் தோழி ஆவாள். மேலும் மேலும் களவு நீடித்துக் கொண்டே போகுமாயின் அதனால் வரும் தீங்குகளையும் தோழி எடுத்துரைப்பதனைக் கீழ்வரும் பாடல்களில் காணலாம்.

**“கொடுங்கால் முதலை கேள்வல் ஏற்றை**
**வழி வழக்கறுக்கும் கானலம் பெருங்துறை**
**………..**
**கவைமக நஞ்சுண்டா அங்கு**
**அஞ்சுவல் பெருமவென ̇னெஞ்சத் தானே”   (குறுந்.234)**

எனும் பாடலடிகளில் தலைவன் தலைவியைக் காணவரும் வழி மிகவும் ஆபத்தானது என்று தலைவி வருந்துவதையும் தலைவனின் சிரமத்தினையும் எடுத்துக்கூறிக் களவை நீட்டிக்காமல் திருமணம் செய்து கொள்ள தோழி வற்புறுத்துவதனையும் அறியமுடிகிறது. தோழியானவள் தலைவன் தலைவி இருவருக்கும் இடையில் ஓர் உறவுப்பாலமாகவும். இரவு பகல் என்று பாராது தலைவன் தலைவி இருவருக்கும் உதவி புரியும் தன்மை கொண்டவளாகவும் இருப்பதால்தான் அக இலக்கியத்தில் தோழி தனக்கென ஓர் தனி இடத்தைப் பிடித்துக் கொள்கிறாள். புலவன் எப்படி தன்னுடைய வறுமைதீர மன்னனைப் பார்த்து உண்மை நிலையை உணர்த்துகின்றானோ அதேபோன்று “தலைவியின் காதல் நிறைவேற அவளின் உண்மை நிலையை அப்படியே எடுத்துக் கூறுகிறாள் தோழி. செவிலித்தாய் மற்றும் பெற்றோர்கள் தோழியின் பேச்சைக் கேட்காமல் தலைவியின் நோய் தீராது.”[6] புலவனின் வறுமையைப்போல் தலைவியின் உயிருக்கு உறுதியில்லை. இதன் மூலம் தோழியே சங்க இலக்கியத்தின் முதன்மையாக விளங்குவதை உணரமுடிகிறது.

**தோழி கூற்று**

தோழி, தலைவன், தலைவி ஆகிய இருவருக்கும் களவு வாழ்க்கை சிறப்பாக நடைபெறுவதற்குப் பெரிதும் உதவுகின்றாள் “அறத்தோடு நின்று தலைவன். தலைவிக்குத் திருமணம் செய்து வைக்கின்றாள். திருமணம் முடிந்த

நிலையில் தோழி பேசுபவை கற்பில் 148 இடங்களில் சுட்டப்படுகின்றன."[7] அவை குறித்த விளக்கத்தைக் கீழே காணலாம்.

- ❖ திருமணம் பொருட்டுப் பெறுவதற்கு அரிய பொருளைத் தேடி வந்த தலைவனைப் பாராட்டுதல்.
- ❖ களவுக் காலத்துத் துன்பம் நீங்கியமை கூறல்
- ❖ களவுக் காலத்துத் துன்பத்தைப் போக்கிய கடவுளை வழிபடுமாறு தலைவனிடம் கூறுதல்
- ❖ இல்லற ஒழுக்கத்தைத் தலைவன் மறந்து இசை, கூத்து போன்றவற்றில் ஈடுபடுதல் கண்டு கடிதல்.

என தோழி பல இடங்களில் தலைவனைப் பாராட்டுதல், கடிந்து உரைத்தல் ஆகியவற்றைக் காணலாம்.

**தோழியின் உளவியல் செயல்பாடுகள்**

சங்க இலக்கியப் பாடல்களில் தலைவன், தலைவியரிடையே நிகழும் களவு கற்பு வாழ்க்கையில் நிகழும் செயல்பாடுகளில் தோழியின் மதி நுட்பம் இருவரின் வாழ்வியலை நெறிப்படுத்துவதாக அமைகின்றது. தலைவன் தலைவி ஆகியோரின் மன உணர்வினை வெளிப்படுத்துவதாகத் தோழியின் உளவியல் செயல்பாடுகள் முக்கியமானதாக அமைகிறது.

அகத்திணை மாந்தர்களில் தலைவன் தலைவியை அடுத்துச் சிறப்பிடம் வகிப்பவள் தோழி ஆவாள். தலைவியுடைய களவு, கற்பு என்ற இருவாழ்க்கையில், தோழியானவள் அவளுக்கு அறிவுரை கூறுவதில் முக்கிய பங்கு வகிக்கின்றாள். தாமே ஒருவரை ஒருவர் கண்டு களவு வாழ்வில் ஈடுபட்ட களவுக் காதலர்கள் கற்பு வாழ்க்கையைத் தொடர தோழியானவள் முக்கியப்

பங்காற்றுகின்றாள். கற்பு வாழ்க்கையைக் காட்டிலும் களவு வாழ்க்கையில் தான் தோழியின் பங்கு மிகுதியானதாக அமைகின்றது.

தோழி என்பவள் தலைவியின் இளமைப்பருவத்திலிருந்து அவளுடன் நட்பாகத் திகழ்பவள். அவளோடு உடன் இருந்து வாழ்பவள். தோழியானவள் செவிலித்தாயின் மகள் என்றும், தலைவியின் நன்மை, தீமை ஆராய்ந்து அறிவுரை கூறித் துன்பம் தீர்ப்பவள். தலைவியின் காதலைப் பெற்றோருக்கு எடுத்துக் கூறி திருமணத்திற்கு வழி வகுக்கின்றவள். தலைவனை நாவன்மையால் இடித்துரைத்து அறிவுரை கூறியும் தலைவியை ஆற்றுப்படுத்துவதிலும் வல்லவளாகத் திகழ்கின்றாள்.

**தோழி தலைவியின் பசலை கூறுதல்**

தலைவனிடம், தலைவியின் துன்பநிலையை எடுத்துக்கூறித் தலைவனை வரைவிற்குத் தூண்டும் முகமாகவும், வரைந்து கோடல் கருத்தின்றிக் களவின்பத்தை விரும்பும் தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குத் தலைவி உரைக்கும் முகமாகவும் இப்பாடல்கள் அமையும்,

**“தொடி பழி மறைத்தலின் தோள் உய்ந்தனவே**
**வடிக் கொள் கூழை, ஆயமோடு ஆடலின்**
**இடிப்பு மெய்யது ஒன்று உடைத்தே கடிக்கொள**
**அன்னை காக்கும் தொல் நலன் சிதைய**
**காண்தொறும் கலுழ்தல் அன்றியும்.......”  (நற்.23:1-5)**

வாரிமுடித்த கூந்தலையுடைய என்னுடைய தலைவியானவள் தன்னைப் பிறர் கூறும் பழிக்கு அஞ்சி வளையல்கள் கழலாதவாறு பாதுகாத்தாள். ஆதலால் இவள் தோள்களில் வாட்டம் தோன்றவில்லை. மேலும் இவள்தன் தோழியரோடு விளையாடித் தன் உடலில் தோன்றிய களைப்புக்குக் காரணமும் விளங்கிற்று.

அன்னையின் காவல் மிகுதியால் இவள் நலம் சிதைந்து, அதனால் இவளுக்கு அழுகையும் மிகுந்தது என தோழி கூறினாள்.

பசிய இலையிலிருந்து வெளிவந்த திரண்ட தண்டினைக் கொண்ட நெய்தல் மலருடன் செறிந்த இலையை இடை இடையிட்டு மாலையாக சூட்டினானே தவிர, பிரிதொன்றையும் ஊரார் அறியார் எனத் தோழி தன்னையும் சூழலையும் கருத்தில் கொண்டவளாய்த் திகழ்கிறாள்.

**'பாசடைக் கலித்த கணைக் கால் நெய்தல்**
**பூவுடன் நெறிதகு தொடலை தைஇ**
**கண் அறிவுடைமை அல்லது, நுண் வினை**
**இழை அணி அல்குல் விழவு ஆடு மகளிர்**
**முழங்கு திரை இன் சீர் தூங்கும்'' (நற்.138:6-10)**

என்பது பாடல். தலைவியின் துன்பத்திற்குக் காரணம், ஞாழல் மலரும். புன்னை மலரும் பரவிக் கிடக்கும் வெண்மணற் பரப்பில், முதன்முதலில் இயற்கைப் புணர்ச்சியில் தலைவனைச் சந்தித்த இடமும், கூந்தலை ஐந்து பிரிவாகப் பிரித்து உலர வைத்தபோது தலைவன் உதவிய துறையும், அழகிய நெய்தலின் மலரினை அணிவித்த சிறந்த கடற்கரைச் சோலையும் தலைவியின் பசலை நோய்க்கு முக்கிய காரணம். என ஆற்றாமையை உணர்ந்த தோழி இனியும் வரவு நீட்டிக்கக் கூடாது. இனி விரைந்து மணம் செய்ய காலம் தாழ்த்தினால் தலைவி இறந்துபடுவாள் என்ற தோழி கூற்றிலிருந்து அவளின் அறிவும், சிந்தனை செயலும் வெளிப்படுகின்றன.

வினை காரணமாகப் பிரியும் தலைவனை நோக்கித் தோழி கூறியது.

**''குவளை உண்கண் இவள் ஈண்டு ஒழிய**
**ஆள் வினைக்கு அகறி ஆயின், இன்றொடு**

**போயிற்று கொல்லோ தானே – படப்பைக்**
**கொடு முள் ஈங்கை நெடுமா அம் தளிர்**
**நீர் மலி கதழ் பெயல் தலைஇய**
**ஆய் நிறம் புரையும் இவள் மாமைக் கவினே'' (நற்.205:6-11)**

குவளை மலர் போன்ற மை தீட்டிய கண்களையுடைய தலைவியை வினை காரணமாகப் தலைவன் பிரிந்து செல்ல எண்ணுகின்றான். புலி கொன்று வீழ்த்த யானையை ஆளி இரையென உண்ணக்கருதி இருக்கும் என்றது தலைவன் துய்த்த தலைவியின் நல்லெனல்லாம் இனிய பசலை பரந்து கெடும் என்பதைக் குறிக்கும் விதமாகப் பாடல் அமைந்துள்ளது.

தலைவன் களவு வாழ்க்கை நீட்டித்துச் செல்கிறான். இக்களவு வாழ்க்கையை அறிந்த ஊரார் அலர் தூற்றுவர். இதனால் தலைவி வருத்தமடைகிறாள். இதனை,

**'பிறை வனப்பு இழந்த நுதலும், யாழ நின்**
**இறை வரை நில்லா வளையும், மறையாது**
**ஊர் அலர் தூற்றும் கௌவையும், நாண் விட்டு**
**…………………**
**கரப்பவும் கரப்பவும் கைம்மிக்கு**
**உரைத்த – தோழி – உண் கண் நீரே'' (நற்.263:1-3,9-10)**

என்னும் பாடல் புலப்படுத்துகின்றது. பிறை போன்ற உன் நெற்றி அழகை இழந்து முன்கையில் வளையல்கள் கழன்றன. ஊரார் மறைமுகமாகக் கூறாமல் நேரே வந்தே பழிச்சொல் கூறினர். இதனால் தலைவியின் கண்களில் அளவு கடந்த கண்ணீர் வெளிப்பட்டது என்கிறாள் தோழி, தலைவனால் வருந்திய தலைவிக்கு உடல் மெலிவு, மேனி பசலை, அலர் போன்ற துன்பம் ஏற்படுவதைப் பாடலால் அறியலாம். “சங்க இலக்கியத்தில் காதலை அழகு

செய்பவர்கள் உள்ளூர்ப் பெண்டுகள். களவுத் திணையிலும் கற்புத் திணையிலும் ஊராருக்கு முக்கிய இடமுண்டு. ஒரு பெண்ணின் காதல் ஒழுக்கத்தை ஊர் மகளிர் தனக்குள்ளே பேசிக் கொள்வதை ‘அம்பல்’ எனவும். ஊர் மக்கள் அறியும்படி வெளிப்படையாகப் பேசுவதை ‘அலர்’ எனவும் குறிப்பிடுவர். அலரால் பல நலன்கள் உண்டு. அலரின் பல்வேறு நல் விளைவுகளைத் தோழியும் தலைவியும் அறிந்தேயிருந்தனர்.”[8] எனவே தொடர்ச்சியான முறையில் அலர் தூற்றுதலும் தோழியின் நல்விருப்பம் நிறைவேறுவதற்குக் களமாக அமைகின்றன.

தலைவன் நீண்ட நாள் கழித்துத் தலைவியைச் சந்திக்கப் பகற்குறியில் வந்தான். அவனைக் கண்ட தோழி, உன் பிரிவால் தலைவி மெலிந்தாள். அதன் காரணமாக வளை கழன்று ஓடியது. அதனைக் கண்ட தலைவியின் அன்னை அவளை இச்செறித்தாள். எனவே நீ அவளை மணந்து கொள்ள வேண்டும் என்று நேர்முகமாக வரைவு கடாவுகின்றாள்.

பொருள் ஈட்டச் செல்லும் ஆணின் நினைப்பால் கலக்கமும் அதனால் பசலையும் தலைவியிடத்து வெளிப்படுவதை,

**“அழியல் - ஆயிழை! – அன்பு பெரிது உடையன்**
**பழியும் அஞ்சும் ……………… பொருள் போலத்**
**தங்குவதற்கு உரியது அன்று நின்**
**அம்கலுழ் மேனிப் பாஅய பசப்பே”   (குறுந்.143:1-2,6-7)**

தோழி தலைவியிடம் ஆராய்ந்து அணிந்த அணிகலன்களை உடையாய், பயனைத் தரும் மலைநாட்டிற்கு உரிய தலைவன் உன்னிடம் அன்பு மிகுதியாக உடையவன். தலைவன் உன்னைக் களவில் நுகர்ந்து, வரையாது ஒழுகும்

பழியையும் அஞ்சுபவன் ஆவான். இவ்வுலகில் நிலைத்திருப்பது நிலையாமை ஒன்றே அதனை உணர்ந்து தலைவன் உலகத்திற்குரிய நன்மையும், புகழும் வருவதற்குரிய செயல்களைச் செய்வான். ஆதலால் நினது அழகு ஒழுகும் மேனியின்கண் பரவிய பசலை, நிலையாகத் தங்குவதற்கு உரியதன்று. எனவே, நீ வருந்தாது இருப்பாயாக என தலைவியிடம் பசலை நோய் விரைவில் நீங்கிவிடும். அழகு ஒன்றே நிலைத்துத் தங்குவது எனவும், பசலை தங்குவதற்கு உரியதன்று எனவும் தோழி கூறினாள். மற்றுமோர் பாடலில் தலைவியை மணம் செய்யாது களவினை நீட்டித்துச் செல்லும் தலைவன், தலைவியின் வீட்டருகே காத்து நிற்கும் நேரத்தில் தலைவியின் மேனி பசலையுற்றதை எண்ணி மிகுந்த வருத்தமடைந்து, தலைவனைப் பழித்துரைக்கிறாள். அவ்வாறு பழித்துரைக்கும் போது உள்ளுறை அமைத்துப் பேசுவாள்.

**“பெருங் கடற்கரையது சிறுவெண் காக்கை**
**வரி வெண் தாலி வலை செத்து வெரூவம்**
**மெல்லம் புலம்பன் தேரி**
**நல்ல ஆயின, நல்லோள் கண்ணே” (ஐங்.166:1-4)**

என்ற பாடலில் தோழி மணம் செய்து கொள்ள வேண்டிக் கூறிய சொற்களைத் தனக்கு மிகுந்த வருத்தம் செய்தன எனக் கருதி தலைவன் அஞ்சுகிறான். திரையால் கரையில் எரியப்பட்ட பலகறைகளை வலையிற் சுற்றிக் கோர்த்த பலகறையாகக் கருதி அஞ்சும் சிறுவெண் காக்கையுடன் ஒப்புமைப்படுத்திக் கூறுகிறாள். தலைவனின் காதல் மொழிகளை மேனி பசலையுற்று வருந்திக் கண்கள் நலமிழந்தன என தோழி தனது கூற்றின் மூலம் தெளிவுபடுத்துகிறாள்.

வரைவு வேண்டி எந்த ஒரு முயற்சியும் செய்யாது தலைவன் களவு நீட்டிக்கிறான். இதனால் தலைவி மிகவும் வருந்தி மெலிகிறாள். தலைவனைக்

காணாததால் தலைவியின் மேனி பசலையால் வாடுதல் இயல்பாகும். ஆனால் தினமும் தலைவனைக் கண்டு பேசி, மகிழ்ந்து வருகையில் தலைவியின் மேனியில் பசலை ஏற்பட்டதற்குக் காரணத்தைத் தலைவன் கேட்கிறான். அதற்குத் தோழி,

**“மின் அவிர் வயங்கு இழை நெகிழச் சாஅய்**
**நன்னுதல் பசத்தல் யாவது – துன்னிக்**
**கனவில் கானும் இவளே**
**நனவில் காணாள் நின் மார்பே தெய்யோ” (ஐங்.234:1-4)**

உன்னைப் பகல்பொழுதில் நாள்தோறும் கண்டாலும் இரவிலும் கூடி இன்புற தலைவி விரும்புகிறாள். உன்னையே எண்ணிக் கொண்டு சிறிது நேரமே உறங்குகிறாள். அவ்வுறக்கத்திலும் உன்னைக் காண்பது போலவே கனாக் காண்கிறாள். அக்கனவின்பமும் நீடிக்காது கண்விழித்தும் மறைந்து விடுகிறது உன்முகம். இதனாலேயே தலைவியினது அழகிய மேனி பசலையால் மெலிகிறது. அவள் மெலிவுக்குக்காரணம் நீயே! எனவே இனியும் காலம் தாழ்த்தாது விரைவில் மணந்து கொள்ள வேண்டும் எனத் தோழி தலைவனை வேண்டிக் கூறுவதை ஐங்குறு நூற்றுத் தெய்யோப்பத்து பாடல் உணர்த்துகிறது.

இதனைத் திருக்குறளில் பாலியல் எனும் நூலில் “பிரிந்து செல்லும் அவர் எனக்குக் காதல் நோயையும் பசலை நிறத்தையும் கைமாறாகக் கொடுத்துவிட்டு என்னிடமிருந்து என்னுடைய மேனி அழகையும் நாணத்தையும் அவரோடு எடுத்துச் சென்றுவிட்டாரே! நான் எப்போதும் அவரது நல் இயல்புகளையே நினைத்துக் கொண்டிருக்கின்றேனே! அவரது நல்ல தன்மையைச் சொல்லிக் கொண்டிருக்கின்றேனே! அப்படி இருந்தும் வஞ்சனையாலோ அல்லது வேறு காரணம் பற்றியோ எனக்குப் பசலை நோயை

அளித்து விட்டாரே! நல்ல பண்புடையவர் தான், என்றாலும் பிரிவின் கொடுமையை அறியாத என்னைப் பிரிவுக்கு உட்படுத்திவிட்டனரே! இப்படிப் பிரிந்ததால் பசலை நோய் எற்பட்டதில் தவறு ஏதும் இல்லை"[9] என பசலை காரணமாகத் தலைவி பெறும் துன்பத்தை மேற்கண்ட சான்றுகளின் மூலமாக அறியலாம். பிறிதோர் பாடலில் அலர் காரணமாகத் தலைவிக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தோழி தலைவனை எதிர்ப்பட்டுச் சொல்லியது.

**"நெய்தல் உண்கண் பைதல கலுழ**
**பிரிதல் எண்ணினை ஆயின், நன்றும்**
**அரிது உற்றனையால் - பெரும ! உரிதினின்**
**கொண்டு ஆங்குப் பெயர்தல் வேண்டும்" (அகம்.10:5-8)**

என்பது பாடல். தலைவன், தலைவியின் களவு வாழ்க்கை காரணமாக ஊரில் அலர் தோன்றுகிறது. எனவே தலைவன் அவளைச் சிலகாலம் பிரிய நேரிடுகிறது. அந்தப் பிரிவுச் செய்தியானது தலைவிக்குத் துன்பத்தைத் தருகிறது. நெய்தற் பூ போன்ற மையுண்ட அவள் கண்கள் வருத்தத்தையுடையனவாய் அழ அவளை நீ பிரிந்து செல்லக் கருதுவாயின், அதனால் அவளது அழகு அழிந்துவிடுவதோடு உன்னைப் பிரிந்து வாழ்வதைவிட இறப்பதே மேல் என எண்ணுகிறாள். தலைவியின் இந்த எண்ணத்தைத் தோழி தலைவனுக்கு உணர்த்துவதோடு அவளை அவனோடு அழைத்துச் செல்லவும் வற்புறுத்துகிறாள்.

**இயற்கைப் புணர்ச்சி**

இயற்கைப் புணர்ச்சியின் மறுநாள் தலைவியின் கண் சிவப்பு முதலாய வேறுபாடு கண்டு தலைவனைச் சந்தித்து தலைவி பேசுவதை அறிந்த

தோழி, அதன் காரணம் குறித்துக் கேட்க, அதனை மறுக்கிறாள் தலைவி, அதனை உணர்ந்த தோழி,

**“ஏழாஅ ஆகலின் எழில் நலம் தொலைய**
**அழாஅ தீமோ, நொதுமலர் தலையே**
**ஏனல் காவலர் மா வீழ்ந்துப் பறித்த**
**பகழி அன்ன சேயரி மழைக்கண்” (நற்.13:1-4)**

என்கிறாள். தினைப்புனம் காக்கவந்த இடத்தில் கிளிகளை ஓட்டாமல், இருந்த இடத்தைவிட்டு எழாமல் இருக்கிறாய். அப்படி எழாவிட்டாலும் பரவாயில்லை. நீ உன் அழகிய நலம் எல்லாம் கெடும்படியாக அயலார் இருக்கும் இவ்விடத்தில் அழாமல் இருப்பாயாக. அறிந்தால் அலர் தூற்றுவர் எனத் தலைவியைத் தோழி எச்சரிக்கை செய்கிறாள். பாடலில் தோழி அறியாமல் தலைவியும், தலைவனும் தனியாக இயற்கைப் புணர்ச்சி மேற்கொண்டதை அறியமுடிகிறது.

தோழி தலைவியிடம் வருந்தி மலர்ந்த வேங்கை மர நிழலில் தலைவனோடு இருந்து கொண்டே கதிர் தின்ன வந்த சிவந்த வாயுடைய பசிய கிளிகளை இருவரும் எழுந்து விரட்டியும், பெரிய மலையின் பக்கத்திலிருந்து வீழும் அருவி நீரிலாடியும் மலைச்சாரலில் விளைந்த சந்தனத்தின் குழம்பினை வண்டுகள் சூழ்ந்து மொய்க்குமாறு பூசி மகிழ்ந்த இன்பப் புணர்வுக்கு இனி வாய்ப்புகள் உண்டோ? விரிந்த அலைகளையுடைய கடல் பெயர்வுற்றது போல் விளங்கும் கதிர்கள் கொய்யும் பருவத்தை அடைந்தன. அதனை வேட்டுவர் கொய்து செல்வர். ஆதலின் புனங்காவலைச் வாய்ப்பாக வைத்துத் தலைவனோடு அளவளாவுதல் இனி இயலாது எனத் தோழி தலைவிக்குக் கூறுவதன் வழி பகற்குறி இடையீட்டைச் கூட்டிக் காட்டுகிறாள். இவற்றுள்,

**“யாங்குச் செய்வாம் கொல் - தோழி ! – பொன் வீ**
**வேங்கை ஓங்கிய தேம் கமழ் சாரல்**
**பெருங் கல் நாடனொடு இரும் புனத்து அல்கி**
**செவ்வாய்ப் பைங்கிளி ஓப்ப அவ்வாயப்”   (நற்.259:1-4)**

குறியிடையே தலைவியுடன் தோழியானவள் சேர்ந்தே இருக்கிறாள். அடுத்தடுத்து நிகழும் நிகழ்வினை முன்கூட்டியே தெரியப்படுத்துகிறாள். மேலும் தலைவியின் இளமையான அழகு வீட்டு வாயிலேயே அழிந்தொழியும், யாம் எம் வீட்டிலிருந்தே முதுமையடைந்து மடிவோம். நீ நெடுங்காலம் இன்புற்று வாழ்வாயாக என தோழி கூறினாள்.

தலைவனும் தலைவியும் புணர்வதற்குச் சரியான நேரம் இரவு நேரமேயாகும். அந்நேரத்தையே தோழியானவள் தலைவனுக்குக் குறிப்பால் உணர்த்துவாள். இதனை,

**“திண் திமில் எண்ணும் தண் கடற் சேர்ப்ப**
**இனிதே தெய்ய, எம் முனிவு இல் நல் ஊர்**
**இனி, வரின் தவறும் இல்லை, எனையதூஉம்**
**பிறர் பிறர் அறிதல் யாவது**
**தமர் தமர் அறியாச் சேரியும் உடைத்தே”   (நற்.331:8-10)**

என்னும் பாடலில் அறியலாம். குளிர்ந்த கடற்பரப்பின் சேர்ப்பனே எம்மூர் இனிமையுடையதே நீ வருதலால் யாதொரு தவறும் இல்லை. தம் உறவினரை ஒருவரையொருவர் இன்னார், என்று அறியாத மிகப்பெரிய ஊராகும். ஆகவே அயலாராக வருவாரை எவரும் அறிதல் இயலாததாகும். எனவே நீ தாராளமாக வரலாம் என்கிறாள் தோழி, அவ்வாறான தோழியின் கூற்றுப்படித் தலைவன் இரவு நேரத்தில் தலைவியின் வீடு நோக்கி வருகின்றான்.

பகற்குறியில் நீர்த்துறைச் சோலையிடையே புணர்ந்து பிரியும் தலைவனிடம் தோழி கூறியதாக அமைந்த இப்பாடலானது தலைவியுடன் பகல் முழுவதும் கூடி இன்புற்ற தலைவன் மாலையானதும் தலைவியைப் பாராட்டிச் 'சேயிழாய்' யாம் முன் செல்கின்றோம். வாராய் என்று கூற; அதற்குத் தலைவி மறுமொழி ஏதும் கூறாதவளாய் மெல்லிய இயல்புடையவளாய்த் தன் நல்ல மேனியிடத்துப் புதியனவாய் தோன்றுகின்ற அழகிய இளைய மார்பகம் நனையுமாறு மாட்சிமைப்பட்ட அழகுடைய குவளை மலர் போன்ற கண்களிலிருந்து தெளிந்த நீர்கொண்டு வடித்தவளாய் அழுத செய்தியினை,

**"பல் மலர் நறும் பொழில் பழிச்சி, யாம் முன்**
**சென்மோ, சேயிழை என்றனம் அதன் எதிர்**
**சொல்லாள் மெல்லியல் சிலவே நல் அகத்து**
**யாணர் இள முலை நனைய,**
**மாண் எழில் மலர்க்க கண் தென் பனிக் கௌவே" (நற்.398:6-10)**

என்பதை மேற்கண்ட தோழி கூற்றுப் பாடலின் வழி அறிய முடிகிறது. பகல் முழுவதும் கூடி மாலை நேரத்தில் பிரியும் தலைவனின் செயல் தலைவிக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது.

தோழி அறத்தோடு நிற்றலில் தலைவி விரும்பத்தக்க விரைந்து வரும் புனலில் எம்மோடு நீராட வந்தாள். அப்போது அவள் கால் தளர்ந்து அஞ்சி, தாமரை போன்ற கண்களைப் புதைத்துக் கொண்டு நீரோடு போனாள். அங்கு வந்த ஒருவன், அருளினால் நீண்ட மணமுடைய குளிர்ந்த புன்னை மாலை அசைந்தாடும் படி நீரிலே பாய்ந்தான். பூண் அணிந்த இவன் மார்பகங்கள் தன் மார்பிலே கிறுக்கும் படி தழுவி, அணைத்துக் கொண்டே வந்து கரையில் சேர்த்தான். அவனுடைய அகன்ற மார்பை, இவளுடைய எழுகின்ற முலைகள்

கூடின எனப் பிறர் கூறினர். அதனால் அவனே இவளுடைய காதலன் ஆயினான் என்பதைத் தோழி,

**“காமர் கடும்புனல் கலந்து எம்மோடு ஆடுவாள்,**
**தாமரைக் கண் புதைந்து, அஞ்சித்தளர்ந்து அதனோடு-ஓழுகலான்**
**நீள்நாக நறுந்தண்தார் தயங்கப் பாய்ந்து அருளினால்**
**பூண் ஆகம் உறத்தழீ இப் போத்தந்தான் அகன் அகலம்**
**வருமுலை புணர்ந்தன என்பதனால், என் தோழி**
**……………….**
**நனவில் புணர்ச்சி நடக்குமாம் அன்றோ**
**நனவில் புணர்ச்சி நடக்கலும், ஆங்கே**
**கனவில் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ” (கலி.39:1-5,33-35)**

மேற்கண்ட அடிகளின் மூலம் விளக்குகிறாள். பாடலின் மூலம் காதலரைப் பிரிவின்றிப் பெற்று நனவிற் புணர்ச்சி நடக்குமாதலின் இனிக் களவிடத்தே உண்டாகும் புணர்ச்சியைப் போக்கி விடுமல்லவோ என வினவுதலின் வழி கனவில் தலைவனுடன் கூடுவது போன்ற பாலுணர்வுசார் கனவு வெளிப்படுவது சுடடிக் காட்டப்படுகிறது. கனவில் காதலனைத் தழுவுவது என்பது தலைவியின் வளர் இளம் பருவத்துப் பண்பாக இருந்துள்ளதை அறிய முடிகிறது.

மற்றுமோர் பாடலில் கடற்கரைச் சோலையில் இயற்கைப் புணர்ச்சியைக் கண்டறிந்த சிலர் அலரைப் பரப்பினர்.

**“தளை அவிழ் தாழைக் கானல் அம் பெருந் துறை**
**சில் செவித்து ஆகிய புணர்ச்சி அலர் எழ**
**இல்வயிற் செறித்தமை அறியாய். புல் நாள்**
**வரு முலை வருந்தா, அம் பகட்டு மார்பின்**
**தெருமரல் உள்ளமொடு வருந்தும், நின்வயின்” (அகம்.90:3-7)**

முதியோரைப் போன்ற வெண்மையான தலை பொருந்திய திரையையுடைய கடல் இளம் பெண்கள் செய்து விளையாடும் மணல் வீட்டை அழிக்கும். அதற்கு இடனான மடல் விரிந்து மலரும் தாழையையுடைய கடற்கரைச் சோலை சூழ்ந்த பெரிய துறையிடத்தே நிகழ்ந்த, சிலர் செவிகளில் மட்டுமே பட்டிருந்த உங்களது புணர்ச்சி அலராய் எழுந்து எங்கும் பரவியது. அதனை அறிந்த தலைவியின் பெற்றோர் அவளை இற்செறித்தனர். பல நாட்களாக, அழகிய பெருமையுடைய தனது மார்பினால், வளரும் முலையையுடைய எம் தலைவியை வருந்தி கலக்கும் நெஞ்சுடன் வருந்தும் உன்னிடம் இக்களவொழுக்கத்தினின்றும் நீங்குவாயாக என்று நான் எவ்வாறு செல்லுவேன் என தோழி புலம்பி உரைத்தாள்.

**தலைவி காம நோயை தோழி கூறுதல்**

களவுக் காலத்தில் பிரிவிடை வேறுபட்ட தலைவிக்குத் தாய் இது முருகனால் ஏற்பட்டது என்று வெறியாட்டு நிகழ்த்தினாள். அதனைக் கண்ட தோழி தலைவனது மார்பினால் வந்த இந்நோய் நின்னால் வந்ததன்று என்று அறிந்தும், முருகனைப் பலியேற்க வருவாய். நீ அறிவற்றவன் ஆவாய் என வேலனை இகழந்து தோழி கூறியது.

**“மார்பு தர வந்த படர் மலி அரு நோய்**
**நின் அணங்கு அன்மை அறிந்தும் அண்ணாந்து**
**கார் நறுங் கடம்பின் கண்ணி சூடி**
**வேலன் வேண்ட, வெறி மனை வந்தோய்**
**கடவுள் ஆயினும் ஆக”    (நற்.34:6-10)**

தலைவியின் காமநோய் தலைவனது மார்பு காரணமாக வந்தது. அவனோடு உண்டான புணர்ச்சியால் வந்தது. இது தெய்வம் அறியாமலா

நிகழும் என வெறியாட்டு விலக்கவும் காமநோயால் ஏற்பட்ட நிகழ்வை அறிவுறுத்தவும் தோழியானவள் இதனை வாய்ப்பாகக் கொண்டாள்.

மிகுதியான காமம் கொண்ட பெண்கள் தமது உயிரினையும் விடக் கூடும் என்பதனை,

**"வேரல் வேலி வேர்க் கோட் பலவின்**
**சாரல் நாட! செவ்வியை ஆகுமதி !**
**யார் அ.்.து அறிந்திசினோரே – சாரல்**
**சிறுகோட்டுப் பெரும்பழம் தூக்கியாங்கு இவள்**
**உயிர்தவச் சிறிது : காமமோ பெரிதே!" (குறுந்.18:1-5)**

வேரில் பழுக்கும் பலாவின் வேறாகக் கொம்பில் பழுக்கும் பலாவும் கூறப்பட்டுள்ளது. வேரில் பழுத்தால், அதன் பழங்களைத் தரை தாங்கும். கொம்பில் பழுத்தலால், எவ்வகைப் பற்றுதலும் இன்றி வீழும் நிலையில் உள்ள பழத்தின் செயல் அறிந்து, பறித்த நுகர்வோரைப் போல, தலைவியின் நிலையறிந்து அவளை மணம் செய்து கொள்ளுதல் வேண்டும். சிறுகொம்பு எனத் தலைவியின் இளமையும் மென்மையும் உணர்த்தப்பட்டன. 'உயிர்தவச் சிறிது, காமமோ பெரிதே' என்ற தொடரால், காமம் என்பது உயிரில் தோன்றி வளரும் உணர்வாக அறிய முடிகிறது. பழம், தன் அளவின்றி மேலும் முதிர்ந்தால் தன்னைத் தாங்கியுள்ள கிளையையும் முறித்துக் கொண்டு கீழே விழுந்து பயன்படாது ஒழியும், அதுபோலத் தலைவியின் காமமும், மிகுமாயின் தங்களுக்குப் பயன்படாமல், அவள் உயிரைக் கெடுத்து ஒழியும், இதனை வள்ளுவரின்,

**"காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும் : என்**
**நோனா உடம்பி னகத்து" (குறள்.1163)**

பாடலின் மூலம் கண்ணதாசன் தனது உரையில் “துடிக்கிறது என் உடம்பு அதில் தொங்குகிறது என் உயிர் என்னும் காவடி தொங்குகின்ற காவடியில் ஒரு பக்கம் காமம். ஒரு பக்கம் நாணம் எதை விடுவேன் எதை சுமப்பேன்”[10] என காமத்தின் இறுதி நிலை உயிரைக் கொள்ளும் என்பதை அறியமுடிகிறது.

தலைவனை எண்ணி மிகுந்த துண்பம் அடையும் தலைவியிடம் தோழி

**“ஒருநாள் வாரலன், இருநாள் வாரலன்**
**பலநாள் வந்து, பணிமொழி பயிற்சி, என்**
**நன்னர் நெஞ்சம் நெகிழ்ந்த பின்றை,**
**வரைமுதிர் தேனின் போகுயோனே**
**………………**
**ஏறுடை மழையின் கலிழும் என் நெஞ்சே” (குறுந்.176:1-4,7)**

ஒருநாள், இருநாள், பலநாள் தலைவன் வந்தான் என தலைவியின் நெஞ்சில் இரக்கம் தோன்றும் வகையில் கூறினாள். தேன் கொள்பவர், தேனடையையும் எடுத்துச் செல்வது போலத் தலைவியின் நலத்தை நுகர்ந்த தலைவன், அவளுடைய நெஞ்சினையும் உடன் கொண்டு சென்றான். தேன் அன்பாகவும், தேனடை அதனையுடைய நெஞ்சாகவும் கொள்ளப்படும். வேறு நல்ல நாட்டின் நிலத்தில் பெய்த, இடியையுடைய மழையைப் போல என் நெஞ்சம், அவன் உள்ள இடத்தில் நின்று கண்ணீர் பெருகி அழும் என தலைவி கூறுவதிலிருந்து, தலைவியின் நெஞ்சு அவன்பால் உள்ளமை உணர்த்தப்பட்டது.

தலைவி எப்பொழுதுமே தலைவன் நினைவாக உள்ளாள். குருகு ஒலியானது தலைவனின் தேர் ஒலியாகவும், பூ நாற்றம் தார் நாற்றமாகவும்,

மேலும் தான் உறங்கும் போது தலைவனின் தோள் மேல் தழுவுவது போன்று, பின் அவனைக் காணாது தான் கண்டது கனவென்பதையறித்து செய்வதறியாது கலங்கினாள். பலவற்றையும் நினைத்து, நினைத்து வருந்தி நோய் கொண்டு தன் நெஞ்சால் சுழலுகின்ற காம நோயால் வருந்துவதைக் கண்டு தலைவனிடத்துத் தோழி கூறுவதை,

**"நீர் நீவிக் கஞன்ற பூக் கமழுங்கால், நின் மார்பில்**
**தார் நாற்றம் என இவள் மதிக்கும்மன் மதித்தாங்கே**
**,,,,,,,,,,,,,,,,**
**நீள் நகர் நிறை ஆற்றாள், நினையுநள் வதிந்தக்கால்**
**தோள் மேலாய் என நின்னை மதிக்கும்மன் மதித்தாங்கே**
**நனவு எனப் புல்லுங்கால், காணாளாய் கண்டது**
**கனவு என உணர்ந்து, பின் கையற்று, கலங்குமே"**

**(கலி.126:10-17)**

மேற்கண்ட அடிகளின் வழி அறியமுடிகிறது.

**தோழி அறத்தோடு நிற்றல்**

**"அறத்தொடு நிற்கும் காலத் தன்றி**
**அறத்தியல் மரபிலள் தோழி என்ப"  (தொல்.பொருள்:1151)**

அறத்தோடு நிற்கும் சூழல் வந்து, தக்க காலமென அறிந்தவழியல்லது தோழி அறத்தொடு நிற்கும் முறையை உடையவள் அல்லள் என தோழிப் பற்றி தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

குறிஞ்சிப்பாட்டுத் தலைவி காதல் வயப்படுகிறாள். தலைவனுடைய நினைவுகளால் மெலிந்து போகிறாள். தலைவி அழகு கெடுகின்றது. தனிமைத்துயரம் அவளை மிகவும் வருத்துகிறது. இந்த நிலையினைத் தோழி செவிலித்தாய்க்குக் கூற அச்சம் கொள்கின்றாள். சடங்குமுறை குறிஞ்சி

நிலத்திற்கு மட்டுமே உரியதாதலால் தோழி இத்திணையில் மட்டுமே அறத்தொடு நிற்கிறாள். இதைத் தொல்காப்பியர்,

**“அவள்விலங் குறினுங் களம்பெறக் காட்டினும்**
**பிறன்வரை வாயினும் அவன்வரைவு மறுப்பினும்**
**முன்னிலை அறனெனுப் படுலென் றிருவகைப்”**

**(தொல்.பொருள்:112:39-41)**

எனக் குறிப்பிடுகிறார். “அகத்திணையிலக்கியத்துத் தோழி வரம்பற்ற உரிமையுடையவள் தலைவியின் உரிமையையும் செயலையும் தன் உரிமையும் செயலுமாகக் கொள்ளும் உறவுடையவள். எனினும் தலைவியின் இசைவின்றி அறத்தோடு நிற்கும் உரிமை மட்டும் தோழிக்கு இல்லை.”[11] தலைவியின் மெய் வேறுபாடு கண்டு தாய் வெறியெடுக்கும் போது தோழி அறத்தொடு நிற்கிறாள்,

**“இகல் மீக் கடவும் இருபெருவேந்தர்**
**வினையிடை நின்ற சான்றோர் போல”  (கு.பா:27-28)**

என்னும் அடிகளால் அறியலாம். பகை கொண்ட மன்னர் இருவரைச் சந்து செய்வித்தல் பொருட்டுச் சான்றோர்கள் (புலவர்கள்) மன்னர் இருவரையும் தனித்தனியே சந்தித்துப் போரின் பின் விளைவை எடுத்துக் கூறுவர் நாம் சொல்வதை இம்மன்னன் ஏற்பானா? மாட்டானா? நம்மை ஏதும் செய்து விடுவானா? என்று அல்லல்படுவர். பின்னர் நமக்கு என்ன நிகழ்ந்தாலும் பரவாயில்லை இந்தப் போரை நிறுத்துவது என்ற மனநிலையில் இருப்பர். அதே போன்று தலைவியின் காதலைச் செவிலித்தாயிடம் கூறினால் நம்மை ஏதும் செய்வாளோ என்று நினைத்து மனதிற்குள் வேதனைப்படுகிறாள். தமக்கு என்ன நடந்தாலும் பரவாயில்லை தம் தலைவியின் காதல் நிறைவேற வேண்டும் என்பதில் உறுதியாக இருக்கிறாள். “பொன்மணிகளால் ஆன அணிகலன்கள்

உடைந்துவிட்டால் பொன் செய்யும் கொல்லனிடம் கொடுத்துச் சீர் செய்து விடலாம். ஆனால் தலைவியின் ஒழுக்கமும், குடிப் பெருமையும் கெடுமானால் அதைச் சீர்படுத்துதல் முடியாது. ஆகையால் தலைவி விரும்பும் தலைவனுக்கே மணமுடித்தல் நலம் பயக்கும்”[12] என தோழி செவிலி வாயிலாக உரைப்பதைக் காணலாம்.

ஆளுமையின் அடிப்படையில் தோழியைப் புறமுகத்தினளாகக் கூறலாம். தலைவன் தலைவியின் களவு வாழ்க்கையில் முக்கிய அங்கம் வகிப்பவள் தோழி ஆவாள். அக வாழ்க்கையில் தோழியின் பங்கு மிக முக்கியப் படுத்தப்பட்டதாகும் தலைவியின் களவு வாழ்க்கையை முறையாகச் செவிலித் தாய்க்கும் நற்றாய்க்கும் தெளிவுபடுத்தி நிற்பவள் தோழியாவாள். தலைவன் தலைவிக்கும் அறிவுரை வழங்கி அவர்களை உடன்போக்குப் போக வைத்துக் கற்பு வாழ்க்கையைத் தொடங்க வைப்பவள் தோழியாவாள். தோழியின் ஒவ்வொரு செயல்பாட்டிலும் அவளின் மதிநுட்பம், அன்புடைமை வழிகாட்டும் தன்மை, ஆற்றுவிக்கும் மனப்பாங்கு, அறத்தோடு நிற்றலின் அறிவுத்திறன் போன்றன வெளிப்படக் காணலாம்.

அறத்தொடு நிற்றல் என்பது தலைவனோடு தலைவி கொண்ட களவுக் காதலைத் தோழி வெளிப்படுத்தல் ஆகும். அதாவது களவு கற்பாக மாறி நிலைபெற வேண்டும் என்ற விருப்பத்தோடு களவினை வெளிப்படுத்துவதாகும். , தோழி அறத்தோடு நிற்கும் நிலையை ஏழு வகையாகப் பகுக்கிறார். இதனை,

**“எளிதல் ஏந்தல் வேட்கை யுரைத்தல்**
**கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாடு**
**உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇய**
**எழு வகைய என்மனார் புலவர்”  (தொல்.பொருள்:1152)**

என்ற நூற்பாவின் மூலம் தொல்காப்பியர் குறிப்படுவதை அறியலாம்.

தோழி அறத்தோடு நின்று தலைவனையும் தலைவியையும் ஒன்று சேர்க்கிறாள். இது அறத்தோடு நிற்றல் என்னும் களவுமரபாக வெளிப்படுகிறது.

**“பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த**
**கொக்கு உகிர் நிமிரல் மாந்தி, எல் பட,**
**அகல் அங்காடி அசை நிழல் குவிந்த**
**பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை**
**தூங்கல் வங்கத்துக் கூம்பில் சேக்கும்”  (நற்.258:5-9)**

பாங்கன் பாங்கியிற் கூட்டத்தால் தலைவியின் நலனுகர்ந்த தலைவன் மணமுடிக்கும் நினைவின்றிக் கவலையில்லாமல் தன் ஊரில் தங்கிவிட்டான் என்ற செய்தியினை; ‘மகளிர் இட்ட பலிச் சோற்றை உண்டு அங்காடியிலே குவித்த இறாமீனை கவர்ந்த காக்கை வங்கத்துக் கூம்பிற் சென்று தங்கும்’ என்ற இந்த உள்ளுரை மூலம் தோழி வெளிப்படுத்துவதைக் காணமுடிகிறது. “காதல் தலைவனைப் போல் தலைவியர் காதலை நீட்டிக்க விரும்பவில்லை. அதைக் கற்பாக்கி இல்லற வழிப்படும் வண்ணம் உடையவர்களாகவே தோழியும் தலைவியும் உள்ளனர். இதனால்தான் வரைவு கடாதல் பற்றிய கூற்றுப் பாடல்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.”[13] மேலும் வரையாது வருபவரை விரைந்து மணம் செய்து கொள்ளச் சொல்லி அறிவுறுத்துவதுமான தோழியின் செயற்பாடுகள் அனைத்தும் காதலைக் கற்பாக்க முயலும் செயலாக அமைவதைக் காணமுடிகிறது.

தோழி செவிலித்தாயிடம் என் தோழியின் ஒளி மிக்க நெற்றி பசலை படர்ந்து அவள் அழகு குறையப்பெற்றது. தலைவனை எண்ணி பல்வேறு

எண்ணங்களால் அலைப்புற்று உடல் மெலிந்தாள். தன்மை பொருந்திய கடலின்கண் எழும் அலைகளின் ஒலியைக் கேட்கும் போதெல்லாம் அவள் உறக்கம் இன்றித் தவிக்கிறாள். இதனை,

**"சுடர் நுதல் பசப்பச் சாஅய் படர் மெலிந்து**
**தண் கடற் படு திரை கேட்டொறும்**
**துஞ்சாள் ஆகுதல் நோகா யானே" (ஐங்.107:2-4)**

தோழி மிகுந்த வருத்தத்துடன் செவிலித்தாயிடம் எடுத்துக் கூறி அவள் மேனி மீண்டும் அழகு பெறவும், நுதல் தான் இழந்த ஒளியை மீண்டும் பெறவும், அவள் இழந்தத் துயிலை மீண்டும் எய்தவும் அத்தலைவனைக் கணவனாக அடைதலே ஒரே வழி என்று செவிலியிடம் தோழி அறத்தோடு நின்று வற்புறுத்தினாள்.

கார் காலத்தின் நள்ளிரவு, மழை பெய்து ஓய்ந்தது. அன்னை, தந்தை இருவரும் தூங்குகிறார்கள். வீட்டில் விளக்கு நின்று விட்டது மாமரத்திலிருந்து கோட்டான் கத்துகிறது. இந்த நேரத்தில் தலைவன் தோட்டத்தில் வந்து நின்றான். தலைவிக்குத் துணிவு பிறக்கிறது. அவள் இருளுக்கும் அஞ்சவில்லை. கோட்டானின் குழறலுக்கும் பயப்படவில்லை. முருகன் போல் சீற்றம் கொள்ளும் தன் தந்தை இருப்பதையும் கண்டு கொள்ளவில்லை. தலையில் பின்னிய கூந்தலில் பூச்சூடிக் கொண்டு ஏணி வழியாக ஏறிச்சென்று தோட்டத்தில் இறங்கி தலைவனைக் கண்டு இன்பமடைந்து மீண்டும் முன்புபோல் வந்து படுத்துக் கொண்டாள். மறுநாள் இன் நிகழ்வைத் தாய் தோழியிடம் நயமாகக் கூறுகிறாள். 'மகள் ஏணிமேல் ஏறி இறங்கக் கண்டேனே' எனக் கேட்கும் பொழுது தோழியானவள் கூறும் பதில் நம்மை வியப்படைய வைக்கிறது.

**“அலையல் - வாழி ! வேண்டு , அன்னை ! – நம்படப்பைப்**
**சூருடைச் சிலம்பில், சுடர்ப்பூ வேய்ந்து**
**……………………**
**நனவின் வாயே போல் துஞ்சுநர்க்**
**கனவுஆண்டு மருட்டலும் உண்டே : இவள்தான்”  (அகம்.158:7-11)**

இதன் மூலம் தாய் சொன்னதற்குத் தோழியியின் பதில்தான் மேற்கண்ட பாடலடியாகும். தாயே நனவைப் போல் சிலநேரங்களில் கனவும் தோன்றும் என்பதனை நீ அறிந்தில்லையோ என்று கூறும் தோழி உள்ளே ஓர் கருத்தை மறைத்து வைத்துக் கூறுகிறாள். இன்று நீ கண்டது கனவு. ஆனால் இதுவே நனவாகவும் மாறும் என மறைத்துக் கூறி அறத்தோடு நிற்பதைக் காணமுடிகிறது. இது தோழிக்கே உரிய சிறந்த செயல்பாடாகும்.

**தலைவன் பரத்தமையால் தோழி வருந்துதல் :**

பரத்தையரிடம் சென்று திரும்பி வந்த தலைவனைத் தோழி வினவும் இடத்திலும் அவனது புற ஒழுக்கத்தைச் சுட்டும் இடத்திலும் தோழியின் துன்பம் மேலோங்கி நிற்பதை,

**“பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை**
**……………………….**
**இரு பெரு வேந்தர் பொருகளத்து ஒழிந்த**
**புன்னை விருமம் போல,**
**என்னொடு கழியும் - இவ் இருவரது இகலே”**
**(நற்.180:1-7,9)**

என்ற பாடலில் காணமுடிகின்றது. தலைவன் பரத்தையர் நிலையிலிருந்து நீங்காமலும், தலைவி மற்றும் வாயில்களின் செயலுக்கு மறுப்பு தெரிவித்த

இடத்தில் தோழி தான் செய்வது அறியாமல் புலம்பிக் கலக்கமடைவதைக் காணலாம். பரத்தையர் பிரிந்து ஒழுகும் தலைவனைத் தலைவி வாயில்களிடம் சாடுகிறாள். தலைவனை நேர்முகமாகச் சாடுவதால் தலைவியின் உள்ளத்தில் கசப்பான உணர்வுகள் மேலோங்கி நிற்கின்றன. இதன்மூலம் பரத்தையரை விட்டு நீங்காத தலைவனை நினைத்தும் வாயில்களுக்குச் செவி கொடுக்காமல் இருக்கும் தலைவியை நினைத்துத் தோழி உள்ளத்தில் துன்ப உணர்வுகள் மேலோங்கி நிற்பதைக் காணமுடிகிறது. "தலைவன் பரத்தையர் மனையிலிருந்து வந்து புறமனையிலிருக்க தோழி தலைவியிடம் சென்று தலைவனைக் குறை கூறித் தலைவியின் ஊடலைத் தீர்த்தாள். தலைவனைப் பிறர் குறை கூறுதலைத் தலைவி பொறாள் தலைவனைப் பிறர் குறை கூறுதலைத் தலைவி பொறாள் போலும்! அத்தகைய தலைவி குணத்தையரிந்து, அதற்குத்தகப் பேசி ஊடல் தீர்க்கும் தோழியின் மதிநுட்பமே நுட்பம்!"[14] என தோழியின் செயல்பாடு பாராட்டுதற்குறியது.

தோழி தலைவனிடம் பரந்தையற் பிரிவு கூடாது "நும் போன்ற குடிப்பிறந்தார்க்கு அது ஏற்றதன்று என தலைவனிடம் பணிவாகக் கேட்டுக் கொண்டாள். நீர் பரத்தையரோடு கூடி ஆறுங்குளமுங் காவும் ஆடினது எனக்குத் தெரியும். அதனால் அலரானது, இனி அவ்வாறு செய்தல் தகாது என வேண்டிக் கொண்டாள்."[15] எனவே தலைவன், தலைவிக்கு இணைப்பு பாலமாகவும் ஊடல் தீர்க்கும் மருந்தாகவும் தோழி இருப்பதைக் காணமுடிகிறது.

சங்க அகப்பாடல்களில் வாயில் நேர்தல் மிக முக்கியமானது. காலத்திற்கு ஏற்ப சூழலில் வழக்கில் இருந்த பரத்தையர் ஒழுக்கத்தைப் பேசுவதில் தோழியின் பங்கு சிறப்புக்குரியதாகும்.

**‘அரிகால் மாறிய அம் கண் அகல் வயல்**
**மறு கால் உழுத ஈரச் செறுவின்**
**வித்தொடு சென்ற வட்டி பற்பல**
**.....................**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கண் செல்வஞ் செல்வமென் பதுவே” (நற் 210:1-3,8-9)**

மருதத்திணையின் பாற்பட்ட இந்நற்றிணைப் பாடலில் தோழியின் செயல்பாடு நன்றாகப் புனைந்து காட்டப்படுகிறது. நன்றாக உழப்பட்ட வயலில், விதைப்பதற்காக் கொண்டு சென்ற விதையுள்ள கடவப்பெட்டியில் மிகப் பலவாகிய மீன்களைக் கொண்டு போகும் புதிய வருவாயினைக் கொண்ட தலைவனே என்று அழைக்கிறாள். அதாவது விதை கொண்டு வந்த பெட்டியில் மீன் கொண்டு செல்லும் நாடு என்று கூடுவதில் தலைவனின் குறையை நயமாக வெளிப்படுத்தும் தன்மை வெளிப்படுகிறது. தலைவன் தலைவியை விட்டுப்பிரிந்து சென்று பரத்தையின் பால் சென்று வந்ததை இவ்வாறு உணர்த்துகிறாள். பரத்தையை நாடும் மற்றோர் பாடலில்,

கூடலூர்ப் பல்கண்ணனார் நற்றிணைப் பாடலில் தலைவியின் வாயிலாகக் கருவறை வாசனையைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

**“நெய்யும் குய்யும் ஆடி, மெய்யொடு**
**மாசு பட்டன்றே கலிங்கமும்! தோளும்,**
**திதலை மென் முலைத் தீம் பால் பிலிற்ற,**
**புதல்வற் புல்லிப் புனிறு நாறும்மே :**
**வால் இழை மகளிர் சேரித் தோன்றும்**
**........................**
**கொண்டு செல் - பாண! – நின் தண் துறை ஊரனை”**
**(நற்.380:1-5,9)**

என்பது பாடல். தோழி இப்பாடலில் பாணனே எம்முடைய ஆடை, நெய்யும் நறும் புகையும் படிந்து கருமைநிறம் பெற்று மாசுபட்டுள்ளது. சுணங்கு உடைய மென்மையான மார்பகமும் எம் புதல்வனை அணைத்துப் பால் கொடுத்தலால் தோள்களும் சுருங்கி மகப்பேற்றின் புடை நாற்றம் கொண்ட மணம் உடையதாக உள்ளது. ஆதலால் தூய ஆடையணிந்த பரத்தையரின் சேரியிடத்தே உள்ள தேரையுடைய தலைவனுக்கு இயைந்தவர் ஆகமாட்டோம். பொன்னைக் கொண்டு புனைந்தாற்போன்ற நரம்பைக் கொண்ட இனிய குரல் எழுப்பும் சிறிய யாழை எடுத்து நீ இசைக்க வல்லவன். என்றாலும் எம்மை நீ இங்கு வணங்கி நிற்க வேண்டா! நீ இசைக்கும் இனிய பாடலைத் தேரில் பூட்டியுள்ள குதிரைகளும் வெறுத்துக் கனைக்கின்றதைக் காண்பாயாக! நாங்கள் விருப்பாத நிலையில் பயனற்ற வார்த்தைகளைப் பேச வேண்டாம். உன் குளிர்ச்சியான துறையுடைய தலைவனைப் பரத்தையரின் சேரிக்கே கொண்டு செல்வாயாக. இவ்வாறு தோழி பாணனுக்கு வாயில் மறுத்து கூறுகிறாள்.

நற்றிணையில் தலைவியின் ஈன்ற வாசனை பேசப்படுவதைப் போன்று, கனிமொழியின் கருவறை வாசனை என்ற கவிதைத் தொகுப்பில் பெண் குரல், பெண்ணடிமைத்தனம், அடக்கப்பட்ட பெண்ணுணர்வு ஏக்கம் போன்றவை பதிவு செய்யப்பட்டுள்ளன. பல ஆயிரம் ஆண்டுகளாக வடிவமைக்கப்பட்ட பெண்மனம் தொடர்ந்து தன்னுடைய விடுதலையை நோக்கிப் பயணிக்கிறது. இந்த நடை கனிமொழிக்கான தனித்துவத்தை வெளிப்படுத்துகிறது. இந்த உள்ளார்ந்த வெளிப்பாடு சங்க இலக்கிய அகமரபுப் பாடல்களில் காணமுடிகிறது. சங்கப் பாடலில் தலைவியின் ஈன்ற வாசனை பேசப்படுவதைப் போன்று, தற்காலக்

கவிதையில் அது கருவறை வாசனை எனப் புதிய வடிவத்துடன் பழமைக்குப் புத்துயிர்ப்புத் தரப்பட்டுள்ளது. கவிதையில்,

**‘அது சந்தனம் இல்லை**
**ஜவ்வாதோ, இப்போது**
**அழகான புட்டிகளில் விற்கும்**
**வாசனைத் திரவியமோ எதைப்**
**போலும் இல்லாத புதுமணம்**
**…………..**
**மூச்சு முட்ட நிரம்பி வைத்துக் கொள்ள**
**தூண்டும் அம்மாவின் வாசைன**
**,,,,,,,,,,,,,,,,**
**தூரவந்து விட்ட போதும்**
**எனக்கு மட்டுமே புரியும்**
**அவளின் கருவறை மணத்தை**
**அள்ளி அள்ளி என்**
**வீடெங்கும் தெளித்து**
**சுருண்டு படுத்தித் தூங்கிப் போக வேண்டும்’**

**கருவறை வாசனை**

என்று கருவறை வாசனையைக் கூறுகிறது. அதாவது குழந்தையை ஈன்ற அம்மாவிடம் இருக்கும் வாசனையை இக்கவிதை விளக்குகிறது. தான் குடியிருந்த கருவறையின் வாசனை என்று கூறுவதற்கு ஒரு பெண்ணால் மட்டுமே முடியும். தன் தாயின் சேலையை நுகர்ந்து அதில் வரும் வாசனையில் தன்னுடைய வாழ்க்கை பயணத்தைக் கூறுவதாக அமைந்துள்ளது. இது ஒரு குறிப்பிடத்தக்க கவிதையாகும். ஒரு பெண் சார்ந்த உணர்வுகளைப் படம் பிடித்துக் காட்டுகிறது. சங்கப் பாடலில் நேரடியாகத் தலைவியிடம் உடலுறவு வைத்துக்கொள்ள முடியாத சமயம் என்று உணர்த்தப்படுகிறது. தற்கால

கவிதையில் மகள் வாயிலாகத் தாயின் மகப்பேறு வாசனை மகளின் சுய அனுபவமாகவும், மகள் பட்ட காயங்களுக்குத் தாயின் மடியில் இன்பம் தேடுவதாகவும் அமைந்துள்ளன.

தலைவி தலைவனது பரத்தமை நெறியை மறந்து அவனை ஏற்றுக் கொள்கிற நிலையைத் தோழி நாணத்தைத் தருவதாயிற்று. என

**“யால் ஆகியளே விழவு முதலாட்டி**
**பயறு போல் இணர பைந்தாது படீஇயர்**
**உழவர் வாங்கிய கம்ழ்பூ மென்சினைக்**
**காஞ்சி ஊரன் கொடுமை**
**கரத்தனன் ஆகலின் நாணிய வருமே” (குறுந்.10:1-5)**

பாடலில் காஞ்சியின் துகள் தம்மீது படிந்தமை தோன்ற தம் மனைக்கண் புகுவது போலத் தலைவனும் பரத்தையர் மனையிலிருந்து இன்பம் நுகர்ந்து தம் மனைக்குத் திரும்பும் போது, அவர்கள் செய்த குறிகள் தம் உடலில் தோன்றப் புகுவன். தலைவன் விழாக் கோலம் பூண்டு ஒழுகக் காரணமாய் விளங்குபவள் தலைவி, ஆயினும் தலைவன், அவளை மகிழ்வித்து மகிழாது, அவள் உள்ளம் வருந்துமாறு அவளைப் பிரிந்து சென்று பரத்தயரை மகிழ்வித்துக் கூடி, அவர்கள் நிகழ்த்திய அடையாளங்களுடன் தன் மனைக்குத் திரும்பிய இச்செயலினை ‘காஞ்சி ஊரான் கொடுமை’ எனப்பட்டது. பாடலில் தலைவன் பரத்தையரை, விரும்பித் தலைவியை விட்டு விலகுகிறான். தலைவன் பரத்தையரை விரும்பிப் பிரிந்தான் என்பதை உணர்ந்த தலைவி, தலைவனின் கொடிய செயலை மனதிற்குள் மறைத்துக் கற்பு நெறியில் வாழும் நிலையையும் காண முடிகிறது. “காதலித்துக் கடிமணம் செய்து கொண்ட கணவர்கள் பரத்தையரைத் தேடி போனார்கள் என்னும் வரலாற்றை மீறிக்

கொண்டு இரண்டு பேரும் ஒருவராக வாழ வேண்டும் என்னும் மணி நெறியை முன் வைக்கிறது கலித்தொகை."[16] சங்கப் பாடல்களின் மூலம், ஊடல் கொள்ளும் தலைவி அதற்கான அடுத்த நிலையாகக் கூடல் கொள்வதைக் காணமுடிகிறது.

இல்லத்தின் வாயில் வேண்டி தலைவன் தோழியிடம் வேண்ட தோழி வாயில் மறுத்து.

**"மனை உறை கோழிக் குறுங்காற் பேடை**
**வேலி வடுஇனம் மாலை உற்றென,**
**புகும் இடன் அறியாது தொகுபு உடன் குழீஇய**
**பைதற் பிள்ளைக் கிளை பயிர்ந்தாஎங்கு**
**இன்னாது இசைக்கும் அம்பலொடு**
**வாரல், வாழியர் ! ஐய ! எம் தெருவே" (குறுந்.139:1-6)**

என்கிறாள். தலைவனே! வேலியருகில் உள்ள காட்டுப் பூனைகளின் கூட்டம் மாலைக் காலத்தில் வந்ததாகப் பாதுகாப்புக்குப் புகுமிடத்தை அறியாமல் மயக்கமும் துன்பமும் உடைய குஞ்சுக் கூட்டத்தினைத் தன் வீட்டில் இருக்கின்ற குறுங்கால்களை உடைய பெட்டைக் கோழி கூவி அழைத்தது போல உன்னுடைய பரத்தையரும் துயரம் தருகின்ற பழிச்சொற்களுடன் எம்முடைய வீதியில் இனிமேல் வராமல் இருப்பாராக. தலைவன் பரத்தைபால் சென்றமையால் ஊடல் கொண்ட தலைவியிடம் உடன்பாடு பெற வரும் தலைவனிடம் தோழி தலைவி மேல் முன்பு அன்பாக இருந்து இப்பொழுது அன்பை மறந்து பரத்தையிடம் சென்று தலைவியை வருந்தமடையச் செய்தது நற்செயல் அல்ல என தோழி கூறினாள். இதனை,

**“வேம்பின் பைங்காய் என்தோழி தரினே**
**தேம் பூங் கட்டி, என்றனிர் இனியே**
**பாரிபறம்பில் பனிச் சுனைத் தெண்ணீர்**
**………………..**
**ஐய ! அற்றல் அன்பின் பாலே” (குறுந்.196:1-4)**

என்ற அடிகளில் தலைவனின் நடத்தை மாறுபாட்டினை அறிந்து அதற்கான தக்க சமயத்தில் இடித்துரைத்த தோழியின் மதிநுட்பத்தைக் காணமுடிகிறது.

தலைவன் பரத்தையருடன் நீராடி மகிழ்ந்து வந்த தலைவனைக் கண்ட தோழி,

**“உடுத்தும், தொடுத்தும், பூண்டும், செரீஇயும்**
**தழை அணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி,**
**விழவொடு வருதி, நீயே : இஃதோ**
**……………………………….**
**பெருநலக் குறுமகள் வந்தென” (குறுந்.295:1-3,5)**

பரந்தையர் இல்லம் சென்று வந்த தலைவனைத் தோழியும், தலைவியும் வெறுத்து ஒதுக்கி வாயில் மறுத்தனர். ஆடவர் பரத்தையருடன் தங்கி இருத்தலைப் பழந்தமிழ், சமுதாயத்தினர் இழிவாகக் கருதவில்லை. ஆதலால் ஆடவர் பரத்தையருடன் நீராடினர். நீர் விளையாட்டுக்குரிய கோலத்துடன் வந்த தலைவனைக் கண்ட தோழி வாயில் மறுக்கின்றாள். “பரத்தையை நாடிச் சென்ற கணவனின் பிரிவு இயல்பானதாகக் கருதப்படும் சூழலில், அவன் மீண்டும் வீட்டிற்கு வரும் போது. அவனுடன் ஊடல் கொள்வது மட்டும்தான் பெண்ணினால் செய்ய முடிந்த செயலாகும். ஆண் காம வேட்கையுடன் பரத்தைகளுடன் வாழ்ந்தாலும் குடும்பம் என்ற நிறுவனத்திற்குள் அவனைப் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்பது சங்க இலக்கியப் பிரதிகள்

பெண்களின் முன் வைக்கும் வேண்டுகோள்."[17] இவற்றின் மூலம் ஆண்மேலாதிக்கப் போக்கினைக் காணமுடிகிறது.

களவு வாழ்க்கையில் தலைவியோடு உடன் இருந்த தோழி, கற்பு வாழ்க்கையில் உறுதுணையாக இருப்பதோடு தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைக் கண்டு வருந்துபவளாகவும் காட்டப்படுகிறாள்.

**"நீர்நீடு ஆடின் கண்ணும் சிவக்கும்**
**ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்**
**தணந்தனை ஆயின் எம்இல் உய்த்துக் கொடுமோ**
**..................**
**நடுங்கு அஞர் எவ்வம் களைந்த எம்மே" (குறுந்.354:1-3,6)**

என்ற பாடல் அடிகள் வாயில் மறுப்பதாய் அமைந்துள்ளன. மனைக்கு விளக்காய் எப்போதும் தேன் போன்ற இனியவளாகிய தலைவியைப் பிரிந்து, இருளும் கைப்பும் போன்ற பரத்தையரை நீ தேடிச் சென்றால் எம்மை எம் தந்தையின் வீட்டில் கொண்டு போய் விட்டுச் செல்க எனக் கூறுகிறாள். இங்குத் தலைவன் பரத்தையிற் பிரிவது தனக்கும் வருத்தம் அளிக்கும் செயல் எனக் கூறுவது தோழியின் பெருந்தன்மையைக் காட்டுகிறது.

ஐங்குறுநூறு மருதத்திணையில், முதலாவது பகுதியில் தோழி கூற்றாக வரும் பாடலில்,

**"நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்**
**யாணர் ஊரன் வாழ்க!"**
**பாணனும் வாழ்க! என வேட்டே மே" (ஐங்.1:4-6)**

என்பதில் பரத்தையருடன் நெடுநாள் கூடி வாழ்ந்த தலைவன் தன் செயலை அறிந்து பிழையுணர்ந்து தன் மனைவியை மீண்டும் கூடினான். தன் குழந்தைகள்

வெறுக்கத் தக்கன செயல்கள் செய்யினும் அதனைப் பொறுத்து அன்பு செய்வது தாய்மைப் பண்பாதலின், தலைவனால் ஏற்பட்ட துன்பத்தைப் பொறுத்துக் கொண்ட தலைவியை அன்னை எனச் சிறப்பித்தாள் தோழியானவள். தலைவனின் தீயோழுக்கத்தால் தலைவனுக்கும். அத்தீயொழுக்கத்திற்குத் துணை புரிந்த பாணனுக்கும் தீங்கு ஏதும் ஏற்படாமல் ‘யாணர் ஊரன் வாழ்க! என்றும் ‘பாணனும் வாழ்க!’ என்றும் ஆயத்தார் வேண்டினர். காஞ்சிப் பூவும், மீனின் சினையும் ஒரு சேர விளையும் ஊரன் என்ற வருணனை மூலம் தலைவன் உயர்ந்த தலைவியையும் தாழ்ந்த பொது மகளையும் ஒன்றாகக் கருதினான் என்ற உள்ளுரைச் செய்தி வெளிப்படுகிறது. ‘நனைய காஞ்சி’ என்ற சொல் தலைவியையும் ‘சினைய சிறுமீன்’ என்ற சொல் பரத்தையையும், ‘பாணர் ஊரன்’ என்ற சொல் தலைவனையும் குறிப்பிடுகின்றன.

மற்றோர் ஐங்குறுநூற்றுப் பாடலில் தலைவன் பரத்தையர் வயப்பட்டவனாய் அவர் இல்லத்தில் நீண்ட நாள் தங்கினான். பரத்தை தலைவனை விட்டு விலகியதால் தலைவன் தனிமையாக இருந்தான். அப்பொழுது தோழி தலைவனிடம் சென்று தலைவியுடன் கூட்டுவிக்க முயல்கிறாள்.

**“நினக்கே அன்று அ.்.து எமக்குமார் இனிதே**
**நின் மார்பு நயந்த நுல் நுதல் அரிவை**
**வேண்டிய அறிப்பினை ஆகி,**
**ஈண்டு நீ அருளாது ஆண்டு உறைதல்லே” (ஐங்.46:1-4)**

என்கிறாள். பரத்தையின் மனக்கருத்தை அறிந்து அதன்படி நடக்கும் தன்மையுடைய நீ இங்கு மீண்டு வந்து தலைவிக்குச் சமாதானம் செய்வதை

விடுத்து அவள் இல்லத்திலே தங்கினால் அது உனக்கு மட்டும் இன்பம் இல்லை. எனக்கும் அத்தகைய செயலானது இன்பத்தைக் கொடுக்கும் என புலவி தோன்ற தோழி இடித்துரைப்பதை அறிய முடிகிறது. தலைவியின் நீண்ட துயரத்தினைக் கண்டு தோழி தலைவனுடன் ஒன்றாகக் கூட்டுவிக்க முயல்வதைக் காணமுடிகிறது.

பரத்தை காரணமாகப் பிரித்து சென்று திரும்பி வந்த தலைவன் தோழி வாயிலாக உதவ வேண்டினான். அதற்குத் தோழி கூறுவதாக அமைத்துள்ள இப்பாடலில்,

**"நினக்கு ஒத்த நல்லாரை நெடுநகர்த் தந்து நின்**
**தமர் பாடும் துணங்கையும் அரவம் வந்து எடுப்புமே**
**வாராய் தீ துறத்தலின், வருந்திய எமக்கு ஆங்கே**
**நீர் இதழ் புலராக் கண் இமை கூம்ப இயைபவால்"   (கலி.70:13-16)**

தலைவன் தனது இளமைப்பருவத்து ஏற்ற பரத்தையர்களை அவர்க்கென்று அமைக்கப்பட்ட பெரிய இல்லத்தில் கொணர்ந்து சுற்றமான பரத்தையர் இருந்து பாடும் துணங்கைக் கூத்தில் ஆராவாரம் மிக்கெழுந்து ஒலிக்கும் எனத் தோழி கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இவ்வாறு பரத்தையர்க்குத் தனி இல்லம் அமைத்துக் கொடுத்து அவர்கள் ஆடும் துணங்கைக் கூத்தில் ஆடி மகிழ்த்து ஆரவாரம் எழுப்பி இளமையைக் கழித்த தலைவனின் செயலினைக் காணமுடிகிறது. பரத்தைக்குத் தனி இல்லம் அமைத்துக் கொடுத்ததையும் அறியமுடிகிறது.

"சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்களில் ஆண்கள் எத்தனை பேர் இல்லற நெறியில் தடம்புரளுகிறார்கள். அவர்களின் கண்ணியம் மீறிய

நடத்தையை மனைவிமார்கள் கடுகளவும் ஒப்புவது இல்லை, எனினும் நாசுக்காகவே அவர்களை அனுமதிக்கிறார்கள். சிந்திக்க வைக்கிறார்கள். பெண்களின் நடத்தையானது. இவ்விசயத்தில் 'ஒத்திசைதல்' (Adoptive Behaviour) என்பதில் நோய் தீர்க்கும் அருமருந்தாய் மிகவும் போற்றும்படி இருக்கிறது."[18] இதனைத் தோழி,

**"வண்டு ஊது பனி மலர் ஆளும் ஊர**
**யாரையோ நிற் புலக்கேம் வாருற்று**
**உறை இறந்து ஒளிரும் தாழ் இருங் கூந்தல்**
**பிறரும், ஒருத்தியை நம் மனைத் தந்து**
**வதுவை அயர்ந்தனை என்ப அ∴து யாம்" (அகம்.46:5-10)**

என்ற பாடலில் தலைவனின் தகாத உறவினை அவனின் அறிவுக்கு எட்டிய வரையில் எடுத்துக் கூறுவதைக் காணமுடிகிறது. எருமை தனது இடமான கொட்டிலை நீராலும் சாணத்தாலும் தானே சேறாக்கிக் கொண்டு, கட்டையும் அறுத்துக் கொண்டு, வயலுக்குக் காவலாய் இருந்த முள் வேலியையும் கொம்பினால் நீக்கி, மீன்கள் அஞ்சுமாறு தாமரையைச் சுற்றியுள்ள வள்ளையை மயக்கி, வண்டுகள் ஊதும் தாமரையை ஆராய்ந்தது போல, தலைவனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட தலைவியை வேறுபடுத்தி நாணமாகிய கட்டையும் அறுத்து, பரத்தையர்க்குக் காவலான வேலியைப் பாணன் மூலம் நீக்கி, அப்பரத்தையரின் தாயாரையும் மயக்கி உளம் மகிழ்ந்தான்.

**தலைவியின் துன்பத்தைத் தோழி தலைவனிடத்துக் கூறுதல்**

தலைவமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தலைமகள் வருந்துகிறாள். அதனை எண்ணித் தோழி தலைவனிடம் உன் பிரிவு கேட்டுப் பேசாமல் அழுகின்ற இவள் நீ வருமளவும் எவ்வாறு ஆற்றியிருப்பாள் எனச் சொல்லியது.

**“படு சுடர் அடைந்த பகு வாய் நெடு வரை**
**முரம்பு சேர் சிறுகுடி, பரந்த மாலை**
**………………….. மெல்லியல் ! நாம் ? என**
**விம்முறு கிளவியின் என் முகம் நோக்கி**
**நல் அக வன முலைக் கரை சேர்பு**
**மல்கு புனல் பரந்த மலர் ஓர் கண்ணே” (நற்.33:1-2,10-12)**

தலைவியானவள் விம்மிய சொல்லை உடையவளாய் என் முகத்தை நோக்குவாள். அவ்வளவில் அவளுடைய மலர் போன்ற கண்களிலிருந்து நல்ல மார்பின் கண் உள்ள அழகிய முலை முகட்டில் விழுந்து பரக்கும் படியாகக் கண்ணீர் மல்கிற்று. இவ்வாறு இருக்கையில் நீ வருமளவும் அவள் எவ்வாறு தாக்கியிருப்பாள் எனத் தோழி தலைவனிடம் கேட்கிறாள். இதனைப் புறநானூறு

**“குழல் இனைவது போல் அழுதனள்” (புறம்:143)**

என்ற பாடலில் உனது மலைநாட்டின் சிற்றூரில் வீட்டு வாயிலில் நின்று உன்னையும் உனது மலையையும் பாடினோம். அதைக் கேட்டுத் துன்பத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் விம்மி அழுததால் வடிந்த கண்ணீர் அவளது மார்பகத்தை நனைத்தது. நற்றிணைப் பாடலினைப் போன்று தலைவி அழுத கண்ணீர் அவளது முலையை நனைத்தது போல் புறநானூற்றிலும் அழுத செயலாக ஒத்திருப்பதைக் காணமுடிகிறது.

தன் துணை பிரிந்த காலத்து மற்றோர் அன்றில் பறவை ஆற்றாது இறத்தல் போலத் தனிமையுற்று இருக்கும் துன்பமான வாழ்வினைத் தலைவியால் ஆற்றவியலாது.

**“ஒன்று இல் காலை அன்றில் போலப்**
**புலம்பு கொண்டு உறையும் புன்கண் வாழ்க்கை**

**யானும் ஆற்றேன் அதுதானும் வந்தன்று**
**நீங்கல் : வாழியர் ஐய! - ஈங்கை" (நற்.124:1-4)**

எனவே கூதிர்ப்பருவம் கூற்றினைப் போல் வந்தது. பிரிந்தார்க்குத் துன்பமும் சேர்ந்தார்க்கு இன்பமும் செய்வது வாடை. அவ்வாடையால் நோயுற்ற தலைவியின் நிலையினைக் கண்ட தோழி வருத்தமுற்று தலைவனிடம் அவள் வருந்தி இறக்கும் தன்மையில் உள்ளாள் எனத் தோழி கூறுவதனை மேற்கண்ட பாடலடிகள் புலப்படுத்தும்.

களவின்பம் துய்ப்பதே தலைவனுக்கு இன்பம். அதனால் களவினைக் கற்பாக்க எந்த முயற்சியும் இல்லாமல் வரைந்து கொள்ளாது தலைவன் நெடுங்காலம் காலம் தாழ்த்தினான். அதனைக் கண்ட தோழி தலைவனிடம் விரைந்து மணம் செய்து கொள்ள வற்புறுத்துகின்றாள்.

**"நீடு சினைப் புன்னை நறுத் தாது உதிர**
**கோடு புனை குருகின் தோடு தலைப் பெயரும்**
**பல் பூங் கானல் மல்கு நீர்ச் சேர்ப்ப**
**……………………**
**உயர் மணல் படப்பை எம் உறைவின் ஊரே! (நற்.375:1-3,9)**

அன்பில்லாத தலைவனே களவொழுக்கம் மேற்கொண்டு தலைவிபால் சேர்ந்த நீ அவள் அழுது கண்ணீர் வடிக்குமாறு கையகன்று போயினை, ஆதலால் நீ விரைந்து பிரியாது உறைவாயாக என்று தோழி உணர்த்தும் செய்தியில் 'புன்னை மரக் கிளையில் அமர்ந்து நாரைகள் அதன் தாதுக்களை உதிரச் செய்யும் கடற்கரைச் சேர்ப்பன்' என்ற நூற்பாவின் மூலம் அறியமுடிகிறது. நற்றிணையில் 395ஆவது பாடலும் இதே கருத்தைச் சுட்டி நிற்பதைக் காணலாம்.

தலைவன் தலைவியைத் திருமணம் செய்து கொள்ளாமல் களவை நீட்டிப்பதால் தலைவியின் மேனியில் பசலை படர்ந்து அழகு குன்றிக் காணப்படுகிறாள். தலைவனிடம் உன்னால் நலன் தொலைத்த தலைவியின் நலனைக் குன்றாமல் காக்கும் பொருட்டு விரைவில் திருமணத்திற்கு உட்படுத்துயவளாகச் சுட்டப்படுகிறாள்.

**"யாரை, எலுவ! யாரே, நீ எமக்கு**
**யாரையும் அல்லை : நொதுமலாளனை :**
**…………………**
**கடல் கெழு மரந்தை அன்ன எம்**
**வேட்டனை அல்லையால், நலம் தத்து சென்மே" (நற்.395:1-2,9-10)**

தலைவனிடம் மாந்தை நகர் போன்று அழகு குன்றாமல் இருந்த தலைவியின் அழகு இப்போது இல்லை. தலைவியைத் திருமணம் செய்துகொள். இல்லையென்றல் தலைவியின் அழகானது வாடிய மலரைப் போல் வாடிவிடும். வாடிய மலரை பசு உணவாகக் கொள்ளும். ஆனால் உடல் மெலிந்து. அழகு குன்றி உள்ளம் வாடி இருக்கும் பெண்ணை மணப்பவர் யாருமில்லை. உயிர் மட்டுமே உள்ளது. விரைவில் நீ திருமணம் செய்து கொள்வாயாக, என வலியுறுத்துகிறாள். தோழி பாடலின் மூலம் தலைவியின் உடல் நலம் பற்றியும், உடல் கூற்று பற்றியும் உளவியல் பாங்குடன் எடுத்துக் கூறுகிறாள்.

காமத்தால் ஏற்படும் துன்பத்தைத் தாங்காது தலைவியின் கண்கள் அழுத நிகழ்வைத் தோழி கூறுதல்,

**"கோடுஈர் இலங்குவளை நெகிழ, நாளும்**
**பாடுஇல கவிழ்ந்து மணி ஆனாவே**
**…………………**

**மருங்கில் கொண்ட பலவின்**
**பெருங்கல் நாட! நீ நயந்தோள் கண்ணே"**

**(குறுந்.365:1-2,5-6)**

ஒருவராலும் நெருங்குவதற்கு அரிய நெடிய மலையின் உச்சியிலிருந்து பெருகிவரும் அருவியின் நீர், முரசினுடைய தாழ்ந்து இசைக்கும் இனிய ஓசையைக் காட்டுகின்ற பக்கமலைகளில் பலா மரங்களைக் கொண்ட, பெரிய மலை நாட்டின் தலைவனே. சங்குகளை அறுத்துச் செய்யப்படும், கையில் விளங்கும் வளைகள் நெகிழும்படி, நின்னால் விரும்பப்படுகின்ற தலைவியின் கண்கள் நாள்தோறும் மூடுதலின்றி உறங்காமல் கலங்கி, அழுது நீர்துளிகள் அடங்காவாயின.

கண்கள் தலைவனைக் காட்டித் தோள்களை மெலிவித்தன ஆதலின், அவை தம் செயலுக்கு வருந்தித் தாமே அழுதன. இக்கண்கள் ஆனது தலைவன் தன்னைக் கூடுவதற்கு முன் இருந்த தோள் நலத்தையும், பிரிந்தபின் அதன் மெலிவினையும் நேரில் கண்டவை. ஆதலின் அவை துளியடங்காமல் அழுதன. மற்றுமோர் பாடலில் தன் மனையை விட்டு அகன்று, பரத்தையர் சேரியில் நெடுநாள் தங்கி மீண்டுவந்து வாயில் வேண்டிய தலைமகனுக்குத் தோழி சொல்லியது,

**"துணையோர் செல்வமும் யாமும் வருந்துதும்**
**வஞ்சி ஓங்கிய யாணர் ஊர!**
**தஞ்சம் அருளாய் நீயே தின்**
**நெஞ்சம் பெற்ற இவளுமார் அழுமே"  (ஐங்.50:1-4)**

பெருஞ்செல்வ மனைவியாய் இருந்தும் துயர் மிகுதியில் அழுகிறாள். அதற்கு உன் அன்பின்மையே காரணமாகும். நீ நீண்ட நாள் வீட்டில்

இல்லாததால் உன்னை நம்பி வாழ்ந்த அவள் மிகுந்த துன்பத்துடன் வருந்துகிறாள். ஆயமும் உயிர்த்தோழியும் வருத்தவும் தலைவி, அழவும் காரணமாய் அமைந்தவன் தலைவன். அதனால் அவளைத் தொடர்ந்து அழாமல் பாதுகாப்பாயாக என்று தோழி தலைவனைப் புலந்து கூறியதைக் காணலாம்.

ஞாழல் பூவினை நிகர்த்த தேமலினைத் தன் மார்பில் உடையவள் தலைவி எனத் தோழி கூறும் உவமையினை,

**"எக்கர் ஓழற் பூவின் அன்ன**
**சுணங்கு வளர் இள முலை மடந்தைக்கு**
**அணங்கு வளர்த்து அகறல் வல்லாதீமோ" (ஐங்.49:1-3)**

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன. தலைவியின் முலையை ஞாழற்பூப் போன்றும் சுணங்குடையதென்றும் குறிப்பிடுவதோடு மட்டுமல்லாமல் தலைவியின் முலையானது, இளமையினை உடையது. அவ்வழகு மிக்க இளமுலையைக் கெட்டொழிய விடாதே எனத் தோழி, தலைவனுக்கு உணர்த்துவதைக் காண முடிகிறது.

தலைவன் பொருளீட்டச் செல்வதனைத் தோழிக்குக் கூறிகிறான். முன்பு தலைவியைப் பாராட்டியதெல்லாம் பொய்யென்று கூறி தலைவனின் செலவினைத் தோழி தடுக்கிறாள்.

**"அணைமருள் இண்துயில் அம் பனைத் தடமென்தோள்**
**துணைமலர் எழில் நீலத்து ஏந்துஎழில் மலர் உண்கண்**
**மணமௌவல் முகை அன்ன மாவீழ் வார் நரைவெண்பல்**
**மணம் நாறு நறுநுதல், மாரி வீழ் இருங்கூந்தல்**
**அலர்முலை ஆகத்து, அகன்ற அங்குல்**
**சிலநிரை வால் வளை, செய்யாயோ! என" (கலி.14:1-6)**

இனிய துயிலையுடைய மெத்தையையும் அழகிய மூங்கிலையும் போன்ற பெருமையுடைய மென்மையான தோள்கள், நீல மலர் போன்ற அழகினையுடைய மை தீட்டப்பெற்ற கண்கள், மணம் பொருந்திய வண்டுகள் விருப்பும் முல்லையினைப் போன்று வெண்மையான பற்கள், மனம் கமழும் நெற்றி, வரிசையான வளையல்களை அணிந்திருக்கும் முன்கை, மார்பிடத்தே பெருத்த முலையினையும் அகன்ற அல்குலினையும் என்று பலவகைப்பட்ட புனைந்துரைகளால் தலைவன் களவுப் புணர்ச்சியில் பாராட்டியதெல்லாம் இப்பொழுது தலைவியை நீண்ட வருத்தத்தில் ஆழ்த்துவதற்காகத்தான் என்று தோழி அறிந்து கொண்டு, நிலையான உண்மையான செல்வம் தலைவியே எனத் தலைவனின் செலவினைத் தவிர்த்தாள்.

காதலர் பிரியாமல் இணைந்து வாழ்தலே சிறப்பாகும். பெறுவதற்கரிய இளமையும், அவ்வாறு பெற்ற இளமையைத் தலைவனும் தலைவியும் நுகர்வதற்குரிய சிறப்பே சிறந்த செல்வமாகும். ஒரே ஆடையை உடுத்தி வாழ்ந்தாலும் பிரியாதவரின் வாழ்க்கையே சிறந்ததாகும் எனத் தோழி தலைவனிடம் கூறுவதை,

**“இளமையும் காமமும் ஓராங்குப் பெற்றார்**
**வளமை விழைதக்கது உண்டோ உள நாள்**
**……………………..**
**ஒன்றன் கூறு ஆடை உடுப்பவரே ஆயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை” (கலி.18:8-9,10)**

என்ற பாடலில் இளமையும் இருவர் உள்ளத்தே பொருட்காமத்தையும் நன்றாகப் பெற்றவர்கள். பொருட்செல்வத்தை விரும்புவார்களோ என்று இளமையின் சிறப்பால் காமத்தின் பெருமையை அறிய முடிகிறது. நீ விரும்பித் தலைவியின்

தோளில் எழுதிய தொய்யில் தருகின்ற அழகினையும், நின் வலிய மார்பிலே, இவள் தழுவுதலால் பெற்ற தேமலையும் கைவிடல் முடியமாயின் அதனை நினைத்து உண்மையைக் காண்பாயாக எனத் தோழி தலைவனிடம் வருந்தி கூறுவதைக் பாடலால் அறியமுடிகிறது.

தலைவனின் பிரிவு குறித்து உணர்ந்த தோழி பிரிவுக்கு உடன்படாது. களவுக் காலத்தில் தலைவன் கூறிய பொய் மொழிகளை,

**"குளன் அணி தாமரைப் பாசரும்பு ஏய்க்கும்**
**இளமுலை பாராட்டினாய் : மற்று எம் மார்பில்**
**தளர் முலை பாராட்டினையோ? – ஐய !" (கலி.22:15-17)**

என்ற பாடலின் மூலம் நீலமணி ஒளிவிட்டாற் போல எம் கூந்தலில் நெய்பூசி, வாரிய ஐந்து வகையாக முடித்த என் கூந்தல் அழகினையும், இளமைப் பருவத்தையும் முன்பு பாராட்டினாய்! ஆனால் அப்பருவம் ஒழிந்து கூந்தல் வளம் கெட, அதனைப் பொய்யாகப் புனைந்த நிலையை நீ பாராட்டினாயோ? தாமரையின் பசிய மொட்டுகளுக்கு இணையான எண்ணுடைய இளம் முலைகளைப் பாராட்டினாய்! அப்பருவம் ஒழிந்து தளர்ந்து கிடந்த நிலையை நீ பாராட்டினாயோ என தோழி தலைவனிடம் வேண்டி கூறுவதை, மேற்கண்ட அடிகளால் அறியமுடியும். களவுக்காலத்தில் பற்களையும், தலைவியினது கூந்தலையும், முலைகளையும் பல நிலைகளில் பாராட்டிய தலைவன், கற்புக் காலத்தில் செய்வதில்லை. தூது தேர் பறவை போல நலனுண்டு நீங்கினான். களவுக் காலத்தில் இரந்து பெற்ற முகபாவம் என்பது வேறு, பின்னர் காட்டிய முகபாவம் வேறு இது உலக இயல்பாக அமைகின்றது.

தோழி தலைவியின் துன்பத்தைத் தலைவனிடம் கூறித் தலைவியை விரைவாக மணந்து செல்லுமாறு வேண்டுகிறாள் என்பதை,

**“தன் எவ்வம் கூரினும், நீ செய்த அருள் இன்மை**
**என்னையும் மறைத்தாள், என் தோழி, அது கேட்டு**
**நின்னையான் பிறர் முன்னாப் பழி கூறல் தான் நாணி**
**கூரும் நோய் சிறப்பவும், நீ செய்த அருள் இன்மை**
**சேரியும் மறைத்தாள்” (கலி.44:8-12)**

மேற்கண்ட அடிகள் மூலம் அறியலாம். தலைவி காம நோயால் துன்பமடைந்த போது தலைவன் அருளாமையால் அவள் மிகுந்த வருத்தமடைந்தாள். அவ்வாறு வருந்தினால் தலைவனைப் பிறர் பழி கூறுவார் என்பதால் அதனை மறைத்தாள் நீ செய்த அருள் இல்லாமையைச் சேரியில் உள்ளவரும் அறிந்து கொள்ளாதபடி மறைத்தாள். உன் தீமையால் உண்டாகிய அரிய துன்பத்தைப் பிறர் அறியாத வண்ணம், உனக்குப் பழி தோன்றாது காத்தவளின் அரிய துன்பத்தைத் தீர்ப்பது உனது கடமை என்று தோழி தலைவியின் பண்புகளைத் தலைவனிடத்துக் கூறினாள். மேலும் தலைவியின் அழகு நலன் தலைவனால் அழிந்தது எனத் தோழி தலைவனுக்கு எடுத்துக் கூறினாள்.

தோழி தலைவனிடம் தலைவியை விரைவில் திருமணம் செய்து கொள்ளுமாறு கூறுகிறாள். தோழி தலைவியின் நிலையையும் தலைவன் வரும் வழியின் கொடுமையையும் அயலவர் புறம் சொல்லும் உரைக்கு அஞ்சுவதையும் சொல்லி, தலைவியை விரைவில் திருமணம் செய்து கொள்ளுமாறு தலைவனிடம் கூறுகிறாள். இதனை,

**"ஆம் இழி அணி மலை அலர் வேங்கைத் தகைபோல**
**தேமூசு, நனைகவுள், திசைகாவல் கொளற்கு ஓத்த**
**வாய்நில்லா வலிமுன்பின், வண்டுஊது புகர் முகப்**
**படுமழை அடுக்கத்த, மாவிசும்பு ஓங்கிய**
**கடி மரத்துருத்திய, கமழ் கடாம் திகழ்தரும்**
**.....................**
**கனைபெயல் நீலம் போல், கண்பணி கலுழ்பவால்**
**பல்நாளும் படர்அட, பசலையால் உணப்பட்டாள்**
**பொன் உரை மணி அன்ன, மாமைக்கண் பழி உண்டோ"**
**(கலி.48:1-5,15-17)**

என்ற அடிகள் மூலம் அறியலாம். யானைக் கூட்டம் எட்டுத் திசைகளையும் காத்தல் தொழிலுக்குப் பொருத்தம் உடையவை. பகைத்த உயிர்கள் எதிர்த்து நிற்கும் வலிமை இல்லாதன. மலையிடத்தில் வண்டுக் கூட்டம் மொய்க்கும் மலர்களையுடைய வேங்கையின் அழகைப் போல், வண்டுகள் மொய்க்கும் புள்ளிகளையுடைய முகம் கொண்டன. இத்தகைய அவ்யானைக் கூட்டத்துடன் பெருத்த கழுத்தையும் மிக்க வன்மையையுமுடைய பெரிய புலி போர் செய்யும், இவ்வியல்பு கொண்ட மலையையுடைய தலைவனே! சுனையிடத்தே செறிந்த மழையை ஏற்று விளங்கும் நீலமலர் போலத் தலைவியின் கண்கள் நீர் சொரிந்தனவாய் விளங்குகிறது. மேலும் தலைவன் பிரிவால் வருந்திய தலைவியின் வளையல் நெகிழ்கின்றது. பல நாளும் துன்பத்தால் வருந்துவதால் பசலை நோயால் உண்ணாமல் உயிர்விடத் துணிந்தாள். எனவே விரைவில் தலைவியை மணந்து கொள்ளுமாறு தோழி கூறுகிறாள்.

களவொழுக்கத்தில் ஒழுகும் தலைவன் இரவுக்குறியில் வந்த வண்ணம் இருந்தான். அவ்வாறு வரும் அவனை நீக்குதற்குத் தோழி கற்பனையாய் ஒரு கதையைக் கூறினாள். இதனை,

**"கைப் படுக்கப் பட்டாய், சிறுமி ! நீ — மற்றுயான்**
**ஏனைப் பிசாசு : அருள் என்னை நலிதரின்**
**இவ் ஊர்ப்பலி நீ பெறா அமல் கொள்வேன்**
**எனப் பலவும் தாங்காது வாய்பாடி நிற்ப**
**முது பார்ப்பான் அஞ்சினன் ஆதல் அறிந்து பான் எஞ்சாது"**

**(கலி.65:16-20)**

என்ற பாடலால் அறியலாம். மயிர் நீங்கித் தட்டையான தலை குறையப் பெற்ற காலும் கையும் கொண்ட ஒரு பார்ப்பான் நம் தெருவில் ஒளிந்து திரிந்தான். நம் தலைவன் செய்யும் குறியை எதிர்பார்த்து நின்றேன். அப்போது அந்தப் பார்ப்பன் அங்கு குனிந்து பார்த்து மகளிர் வரும் காலம் இதுவன்று' இந்த நேரத்தில் நின்ற நீ யார் என்று முதலில் வினவினேன். பின் 'சிறியவளே நீ என்னால் பிடித்துக் கொள்ளப்பட்டாய்! என்று சொன்னான், மெல்ல வணங்கினான். பின் பெண்ணே! தாம்பூலம் உண்பாய்! என்று பாக்குள்ள பையைக் குலைத்து நீ எடுத்துக் கொள் என்றான். நான் அதற்கு ஒரு சொல்லும் சொல்லவில்லை. அதனால் அவன் தன் முன்னைய நிலையை மாற்றிக் கொண்டான்.

பெண் பிசாசாகிய உன்னை ஒழித்த ஆண் பிசாசு நான். எனக்கு அருள்வாய் அங்ஙனம் அருளாமல் வருந்தினால் இவ்வூரில் நீ பெற்றுவரும் பலியைப் பெறாமல் செய்து விடுவேன். அதனை நான் கொண்டு விடுவேன்! என்றான். பல சொற்களை இப்படிப் பேசினான். அந்த முதிய பார்ப்பான் என்னைப் பெண் பிசாசு என்று எண்ணி அஞ்சியதை யான் அறிந்து. ஒரு கையால் மணலை அள்ளி ஒழியாது அவன் மீது தூவினேன். அவன் அதனைக் கண்டு அங்கிருந்து விரைந்து கதறியபடி ஊர்க்கெல்லாம் கேட்கும்படி கூப்பிடத் தொடங்கினான். தனியாய் நிற்கும் மகளிரைக் கண்டால் தன் காம

வேட்கையால் செய்யும் அவனது செயல் இது என்று தோழி தலைவனுக்குக் கேட்கும்படி கூறினாள்.

மற்றொறு கலித்தொகைப் பாடலில் வரும் ஒரு தோழியானவள் தலைவனுக்கு நேரடியாக இக்கருத்தை எடுத்துரைக்கிறாள். பொருள் ஈட்டுவதன் பொருட்டுத் திருமணம் செய்து கொள்ளாமலேயே தலைவியைப் பிரியக் கருதியிருக்கிறான். தலைவன் பிரிவை அவன் தவிர்க்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் விதமாக மனித நடத்தைகள் பற்றிய பட்டியல் ஒன்றைத் தலைவன் சிந்தனைக்கு விருந்தாக்குகிறாள் தோழி அவை,

**“ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்**
**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**
**பண்பு எனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல்**
**……………**
**நல்றுதல் நலன் உண்டு துறத்தல் - கொண்டு –**
**தீம்பால் உண்பவர் கொள்கலம் வரைதல்**
**நின் தலை வருத்தியாள் துயரம்**
**சென்றனை களைமோ : பூண்க நின் தேரே”** **(கலி.133:6-8,16-19)**

பாடலில் பெண்ணின் நடத்தை இல்லத்தைக் கட்டி எழுப்புவதில் முனைப்பாகவும், ஆணின் நடத்தை அதில் அக்கறை ஏதும் இல்லாமல் உடல் இன்பம் அனுவிப்பதில் முனைப்பாகவும் இருப்பதை நாம் அறிய முடிகிறது. இதில் உள்ளத்திற்கும் உடலுக்குமான மோதலை ( Heart x Body ) என்றும் உயிருக்கும் உடலுக்குமான மோதலை ( Soul x body ) என்றும் நாம் புரிந்து கொள்ளலாம். ஆணுக்கு உடல் இன்பம் முக்கியம் பல நாள்களாய்த் தொடரும் தம் களவுக் காதல் இனியேனும் கற்பு மணம் காண வேண்டும் எனத்

தவிக்கிறாள் தலைவி என துன்பத்தை உளவியல் நோக்கில் தோழி குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

தலைவன் தலைவியை இனியும் நாள் கடத்தாமல் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்பதைக் சூசகமாகத் தெரிவிக்கிறாள் தோழி,

**"கருங்கண் பன்றியின் நடுங்காது துனிந்து**
**நாம அருந் துறைப் பேர்தந்து, யாமத்து**
**ஈங்கும் வருபாவோ – ஓங்கல் வெற்ப**
**ஒரு நாள் விழுமம் உறினும் வழி நாள்**
**வாழ்குவள் அல்லன், என் தோழி யாவதும்**
**ஊறு இல் வழிகளும் பயில வழங்குநர்**
**நீடு இன்று அக இழுக்குவர் அதனால்**
**உலமரல் வருத்தம் உறுதும் எம் படப்பைக் கொடுத்தேன்"**

**(அகம்.18:5:12)**

குறிஞ்சிநிலத் தலைவன் ஒருவன் தலைவி ஒருத்தியை இரவில் கூடி மகிழ்வதை வழக்கமாக்கிக் கொள்கிறான். இரவு நேரத்தில் அவன் வரும் வழியோ மிகவும் அச்சம் தருவதாய் கொடிதாய் இருக்கிறது இவன் கடந்து வரும் காட்டாற்றில் முதலைகள் பல உலவுகின்றன. நீர்ச்சுழிகள் பல இருக்கின்றன மதம் கொண்ட யானை ஒன்று அந்தப் பக்கம் பல நாள்களாகத் திரிந்து கொண்டிருக்கிறது அந்த ஆற்றங்கரையில் அணங்குகள் வேறு உறைகின்ற சூழ்நிலையில் தலைவியை இனியும் பிரிதல் கூடாது என தோழி தலைவனிடம் வற்புறுத்தினாள். பிறிதோர் அகநானூற்றுப் பாடலில், துறைமுகத்தில் புதியனவாக வந்த நாரைக் கூட்டம் ஆரவாரித்தாற் போன்று அம்பல் ஆரவாரம் விளங்கிற்று இதனை,

**"அரையுற்று அமைந்த ஆரம் நீவி**
**புரையப் பூண்ட கோதை மார்பினை,**
**……………………..**
**வம்ப நாரை இனன் ஒலித்தன்ன**
**அம்பல் வாய்த்த தெய்ய – தண் புலா்**
**வைகுறு விடியல் போகிய எருமை**
**நெய்தல் அம் புது மலா் மாந்தும்**
**கைதை அம் படப்பை எம் அழுங்கல் ஊரே"!**

**(அகம்.100:1-2,14-18)**

எனும் பாடல் வழி அறியலாம். தோழி பாடலில் தலைவனிடம் நீ இரவில் வந்து நல்ல மாா்பகம் வடுக்கொள்ளுமாறு தலைவியைத் தழுவிவிட்டுப் போவது எமக்கும் மிக இனிதாக உள்ளது.

மேகம் சூழ்ந்த இரவுப் பொழுதில் பெரிய அலையின் ஒலி அடங்கி அலையும் ஒய்ந்தது கரிய கடலிலே கொழுமீனைப் பிடிக்கும் பரதவா்கள் இருள் நீங்க தம்முடைய தோணியில் விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு செல்வா். அவ்விளக்குகள் ஒளி பொருந்திய சுடா் போலத் தோன்றும். அன்ன தன்மையது பெரியன் என்பானுக்குரிய புறையாறு என்னும் போரூா் ஆகும். அப்பெரியன் என்பவன் குதிரைகள் பூட்டிய நல்ல தோ்களையுடையவன். பாடி வருவாரைத் தன்பால் வளைத்துக் கொள்ளும் கொடைத் தன்மை வாய்ந்தவன். அவனது விரிந்த பூங்கொத்து நிரம்பிய புன்னை மரங்களையுடைய அழகிய கடற்கறைச் சோலை சூழ்ந்த புறையாற்றின் கடல் துறை. அத்துறையின்கண் புதிய நாரைக் கூட்டம் ஒலித்தாற் போன்ற அலா். குளிரப் புலா்ந்திடும் விடியற்காலத்திலே, மேயச் சென்ற எருமை, அழகிய நெய்தற் புதுமலரைத் தின்னும் தாழையை வேலியாகக் கொண்ட அழகிய தோட்டங்களையுடைய எமது ஆரவாரம் மிக்க

ஊரின் கண் அலர் எழுந்தது. இதனை, நாள்தோறும் வந்து மீளும் தலைவனிடம் அலரின் மிகுதியால் ஊரார் பலி தூற்றுவதால் தலைவியை மணந்து செல்லுமாறு தோழி வருந்திக் கூறினாள்.

தோழி கூற்றாக அகநானூற்றில் நெய்தற்சாய்த்துய்த்த ஆவூர் கிழார் பாடலில்,

**“நாள் இடைப்படின் என் தோழி வாழன்**
**தோளிடை முயக்கம் நீயும் வெய்யை**
**கழியக் காதலர் ஆயினும் சான்றோர்**
**………………..**
**நொதுமல் விருந்தினம் போலவியள்**
**புது நாண் ஒழுக்கமும் காண்குவம்யாமே”  (அகம்.112:9-11,18-19)**

இரவுக் குறிக்கண் வந்த தலைமகனைக் கண்ட தோழி மலைநாட்டுத் தலைவனே! நீ தலைவியை மணந்து கொண்டால் என்ன? மான் கூட்டமும், மிளகுக் கொடியும் படரும் மலைப்பகுதியில் நீ நிகழ்த்திய செயலை நம் உறவினர் எவரும் அறிந்திலர். அவர்கள் அறியும் முன்பாக நீ தலைவியை மணம் செய்து கொள்வாயாக, ஒரு நாள் நீ வராது இடைப்பட்டாலும் என் தோழி உயிர் வாழாள் : நீயும் அவளின் தோலினைத் தழுவதலை விரும்புகின்றாய். அவ்வாறு நீ மணம் செய்து கொள்வாயாயின் நாங்களும் முன்பின் தெரியாதவர்கள் போலவும், தலைவி பொய்யான நாணத்துடனும் இருப்பதை நீ காணலாம் எனத் தோழி தலைவியின் நலனைக் காக்க அழகுற எடுத்துரைக்கும் பாங்கினைக் காணமுடிகிறது.

இரவுக்குறி பற்றி அகம் 220 ஆவது பாடலில் தலைவன் களவின்பமே காமுற்று இரவுக் குறியே விரும்பி தலைவியை வந்து நாடினான். அது கண்ட

தோழி, நீ எம் தலைவியோடு கூடியிருக்கும் நேரத்தைவிட பிரிந்திருக்கும் நேரமே அதிகமாகும். இப்பிரிவினைத் தாங்காது தலைவி மிகவும் வருந்துகிறாள். அவள் வருத்தம் தீர்ந்து தன் நல்லழகு கெடாது இருப்பதற்கான ஏதேனும் ஒரு பாதுகாப்பான செயலினைச் செய்வாயாக! என்று,

**“ஊரும் சேரியும் உடன் இயைந்து அலர்எழ**
**தேரொடு மறுகியும், பணிமொழி பயிற்றியும்**
**கேடாஅத் தீயின் உருகெழு செல்லூர்**
**……………..**
**ஆயம் ஆய்ந்த சாய்இறைப் பணைத்தோள்**
**நல்எழில் சிதையா ஏமம்**
**சொல்இனித் தெய்யயாம் தெளியு மாறே”   (அகம்.220:1-3,20-22)**

மேற்கண்ட அடிகள் உணர்த்தும். மேலும் ஊரின் கண்ணும் சேரியின் கண்ணும் பழிச்சொற்கள் எழுமாறு நீ தேரோடு வந்து திரிகின்றாய். எனவே தலைவியின் நல்லழகு கெடாது இருப்பதற்குத் தலைவியை மணந்து செல்லுமாறு தோழி வேண்டுவதைக் காணலாம்.

இரவுக்குறி பற்றி அகத்தின் பிரிதோர் பாடலில் மலையிலிருந்து ஓடிவரும் அருவியின் ஒலியுடன் வண்டின் ஒலி சேர்ந்து. முழவின் ஒலியுடன் யாழ் ஒலி சேர்ந்து ஒலிப்பது போல் இம்மென்று ஒலிக்கும், மேலான வெற்றியினையும் அகன்ற இடத்தினையும் உடைய எல்லார்க்கும் பயன் கொடுக்கும் மலையையுடைய தலைவன் காதல் வெள்ளத்தில் மூழ்கி மத யானைகளையும் கழித்தடித்துக் கொண்டோடும் காட்டாற்று வெள்ளத்தைப் பொருட்படுத்தாது குறுக்கே பாய்ந்த ஆண் பன்றி போல, நீந்தித் தலைவியைக் காண்பதற்கு நடுயாமத்தில் புறப்புடுகிறான். அது கண்ட தோழி,

**“கான மான் அதா் யானையும் வழங்கும்**
**வான மீமிசை உருமும் நனிஉரறும்**
**அரவும் புலியும் அஞ்சுகதவு உடைய**
**இரவழங்கு சிறுநெறி தமியை வருதி” (அகம்:318:1-4)**

நீ தலைவியை மணந்து கொள்ள விரும்பினாலும் அதற்குத் தடையில்லை: நீ விரும்பியவாறே மணந்து கொள்ளலாம். ஆதலால் இனிமேல் இரவுக்குறியிடையே வராதே எனக் கடுமையாகத் தலைவனிடம் கூறுகிறாள். இவ்வாறு பாலுறவுக்கான சூழல்கள் மணம் முடிப்பதற்கான சூழலாகத் தோழியின் வாயிலாக மாற்றம் பெறுகின்றன.

## தோழி தலைவியை தேற்றுதல்

சங்க இலக்கிய அகப்பாடல்களில் அமைந்துள்ள ஐந்திணைகளிலும் முக்கிய பங்கினை வகிப்பவள் தோழியாவாள். அகப்பாடல்களில் தோழியின் கூற்றாக அமைந்த பாடல்களே அதிகமாகக் காணப்படுகின்றன. தலைவியின் தோழியா் பலருள்ளும் தோழியே முதன்மையான இடத்தை வகுக்கிறாள். தலைவிக்குக் களவுக் காலத்திலும் அது கற்பாக மாறுகின்ற காலத்திலும் இல்லறம் என்னும் நல்லறம் ஏற்று வாழ்க்கையைத் தொடங்கும் காலத்திலும் தலைவிக்கு உற்ற துணையாக இருப்பவள் தோழியே ஆவள்.

**“சூழ்தலும் உசா்த்துணை நிலைமையிற் பொலிமே” (தொல்.களவு:124)**

என்றும்,

**“செறிவும், நிறைவும் செம்மையும் செப்பும்**
**அறிவும் அருமையும் பெண்பாலான” (தொல்.செய்:206)**

என்று தொல்காப்பியம் தோழி பற்றி கூறுகின்றது. தொல்காப்பிய அடிகளைப் போன்று நற்றிணை 78 ஆவது பாடலில் நீலமணி போன்று மலா்ந்த நெய்தலின்

கரிய மலரும் பொன் போன்ற புன்னையின் நுண்ணிய தாதும் கீழே உதிரும், விழுது தாழ்ந்து விளங்கும் தாழையும் பூமணம் நிறைந்து கதிரவன் மறையும் மாலைப் பொழுதில் நோய் மிகுந்த துன்பத்தினின்று நாம் உய்தல் எளிதாகும் எனத் தோழி கூறுகின்றாள்.

**“நோய் மலி பருவரல் நாம் இவண் உய்கம்**
**கேட்டிசின் - வாழி, தோழி ! – தெண் கழி**
**வள் வாய் ஆழி உள் வாய் தோயினும்**
**புள்ளு நிமிர்ந்தன்ன பொலம் படைக் கலிமா**
**வலவன் கோல் உற அறியா**
**உரவு நீர்ச் சேர்ப்பன், தேர்மணிக் குரலே” (நற்.78:6-11)**

இதனை தேரின் உள்ளமைந்த வாய் அழுத்தும், ஆயினும் பொன்னால் செய்த அணிகள் நிரம்பி பிறப்பது போன்று விரையும், இத்தகைய குதிரைகள் பொருந்திய தேரை உடையவன் நம் கடற்கரைக்குத் தலைவன். அவன் நம் துயரம் கண்டு அத்துயரம் நீங்கும் வண்ணம் பொருட்செல்வத்துடன் வரும் தேரினொலியைக் கேட்பாயாக என தோழி உரைக்கிறாள்.

நற்றிணைப் பாடலினை ஒத்த குறுந்தொகைப் பாடலில் தலைவன் பொருள் தேடப் பிரியும் போது தலைவியின் பிரிவுத்துயரை ஆற்றுப்படுத்துபவளாகத் தோழி காணப்படுகிறாள்.

**“உள்ளார் கொல்லோ – தோழி கள்வர்**
**...............................**
**செங்காற்பல்லி தன்துணை பயிடும்**
**அங்காற் கள்ளிவும் காடு இறந்தோரே!” (குறுந்.16:1-4,5)**

தலைவன், தலைவியின் ஆற்றாமையை எண்ணி விரைந்து வருவான் எனத் தோழி உரைப்பதாக இப்பாடல் அமைகின்றது. ஆண் பல்லி தன்

துணையாகிய பெண் பல்லியை அழைக்கும் ஒலியைக் கேட்கும் தலைவனும், உன் நினைவு கொண்டு விரைவில் திரும்பி வருவான், என்று தலைவியை ஆற்றுப்படுத்துவதில் தோழியின் மாண்பைக் காணமுடிகிறது.

குறுந்தொகை பிரிதோர் பாடலில் பொருள் தேடச் சென்ற தலைவனால் தலைவி மிகுந்த துன்பம் அடைவதை,,

**“பமூஉப்பல் அன்ன பருஉகிர்ப் பாஅடி**
**இடுங்களிற்று இனநிரை ஏந்தல் வரின், மாய்ந்து**
**……………..**
**எய்தினர் கோல்லோ பொருளே – அல்குல்**
**அவ்வரி வாடத் துறந்தோர்**
**வன்பர் ஆகத் தாம் சென்ற நாட்டே”    (குறுந்.180:1-2,5-7)**

என்று எண்ணித் தோழி கூறுகிறாள். பேயின் பற்களைப் போல நகங்களையும் பரந்த அடியையும் உடைய தலைமை யானையால், அழிக்கப்பட்ட கரும்பின் பாத்தியின்கண் யானையிடம் அகப்படாத ஒற்றைக் கடும்பு போல, பாலை நிலத்தைக் கடந்து, அல்குலின் அழகிய கோடுகள் வாடும்படி, நம்மைத் துறந்து சென்ற காதலர், தாம் சென்ற நாட்டில், நம்மை எண்ணாத வன்நெஞ்சராய்ப் பொருளைப் பெற்றாரோ எனத் தோழி வருந்திக் கூறுதல்.

தலைவியின் துன்பத்தைப் போக்குவதற்குவதற்குத் தோழி,

**“திண்தேர் நள்ளி கானத்து அண்டர்**
**பல்ஆ பயந்த நெய்யின், தொண்டி**
**……………..**
**…………….**
**பெருந்தோள் நெகிழ்ந்த செல்லற்கு**
**விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே”   (குறுந்.210:1-2,5-6)**

என்று மேற்கண்ட பாடலின் மூலம் இடையர்கள் வளர்த்த, பல பசுக்கள் தந்த நெய்யோடு, தொண்டி என்னும் ஊரிலுள்ள வயல்களில், பருவம் தப்பாது விளைந்த வெண்ணெல் அரிசியால் ஆக்கிய விரும்பத்தக்க சோற்றினை ஏழு இலங்களில் நிறைத்துத் தோளில் தாங்கி நின்றாலும், என் தோழியாகிய தலைவியின் பெருந்தோளை நெகிழச் செய்த துன்பத்தை நீக்குவதற்கு வருவதைக், கரைத்து கூரிய காக்கைக்கு இடும் பலி உணவு சிறிய அளவினையுடையதாகும். காக்கை கரைதலைத் தலைவன் வரவுகுறித்த 'நன்னிமித்தமாகக்' கொண்ட தலைவி, தெய்வத்தை வழிபட்டு இடும் பலி உணவாகக் காக்கைக்குச் சிறப்புச் செய்ய நினைத்தாள். பிரிவுத் துயரால் வருந்திய தனக்கு ஆறுதலாகக் கரைந்து காகம், குரல் தந்தமையாலும், அதன்படியே தலைவன் வந்தமையாலும் தலைவி மகிழ்ந்தாள்.

கண்ணால் உடலில் உள்ள துன்பத்தினை வெளிப்படுத்தும் தலைவியிடம் தோழி,

**"இதழ் அழிந்து ஊறும் கண்பனி, மதர் எழில்**
**பூண்அக வனமுலை நனைத்தலும்**
**காணார் கொல்லோ – மாணிழை ! – நமரே?" (குறுந்.348:4-6)**

எனும் பாடல் அடிகள் மூலம் தலைவி, தலைவியின் பிரிவை எண்ணி வருந்தும் வேளையில் தோழி, தலைவியே நீ கண் கலங்கினால் உன் மார்பகங்களின் அழகு சீர்குலையும் என்று தலைவனுக்குத் தெரியும். எனவே தலைவன் விரைவில் வினைமுடித்துத் திரும்புவான். நீ வருத்தம் கொள்ளாதே என்று தலைவிக்குத் தோழி உரைக்கின்றாள். மேலும் தலைவிக்குக் கண்களில் நீர்வரும் காட்சியைக் கண்டு தலைவியைத் தோழி ஆற்றிவிக்கின்றாள். இப்பாடலினைப் போன்று ஐங்குறுநூற்றுப் பாடலில் நாணத்தால் மறைந்து

கொண்டிருக்கும் தலைவியின் காமக் குறிப்பினை அறிந்து கொள்ளும் பண்புடையவன் தலைவன். தலைவியுடன் கூடிப் பின் பொருளீட்டக் கருதிப் பிரிகின்றான். அவ்வாறு பிரியும் போது கார் காலத்தில் திரும்புவதாகக் கூறுகிறான். கார்காலம் என்பது புணர்ச்சிக்கு ஏற்றகாலம் என்பதால் குறித்த பருவம் வந்தும் தலைவன் திரும்பவில்லை என்பதை அறிந்த தலைவி காமத்தால் வருத்தமடைவதைக் கீழ்க்கண்ட பாடல் வழி அறியலாம்.

**"புதல் மிசை நறு மலர் கவின் பெறத் தொடரி நின்**
**நலம் மிகு கூந்தல் தகை கொளப் புனைய**
**வாராது அமையலோ இலரே நேரார்**
**நாடு படு நன்கலம் தரீ இயர்**
**நீடினர் - தோழி ! – நம் காதலோரே" (ஐங்.463:1-5)**

தோழி தலைவியை ஆற்றுவிக்கிறாள். தோழியே புதர்களின் மேல் நறிய மலர்கள் பூத்துள்ளன. இவற்றைப் பறித்து அழகுற மாலையாகத் தொடுத்து நின் இயல்பாக உள்ள அழகுமிக்க கூந்தலில் அதன் அழகு மேலும் மிகுமாறு சூட்டி மகிழ இக்காலத்திலும் வாராது இருப்பவரல்லர் நம் காதலர். பகைவர் நாட்டில் உள்ள நல்ல அணிகலன்களை நின் பொருட்டாக இங்குக் கொணரும் நோக்குடன் அவர் காலம் தாழ்தினார். எப்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்கிறாள். இளமைக் காலத்தே உள்ள அழகைத் துய்க்க வேண்டும் என்ற எண்ணம் தலைவனுக்கு இருக்கும் என்பதைக் குறிப்பால் தோழி உணர்த்துவதைக் காணலாம்.

தலைவனின் பரிவால் தலைவி வருந்திய வருத்தத்திற்கும், எண்ணத்திற்கும், ஏற்பவே தோழியானவள் அவளின் துன்பத்திற்குத் துணையாக இருப்பதைக் கலித்தொகை

**“வையை வாா உயர் எக்கர் நுகர்ச்சியும் உள்ளார் கொல்**
**என ஆங்கு,**
**நோய்மலி நெஞ்சமோடு இனையல் தோழி**
**நாம் இல்லாப் புலம்பாயின், நடுக்கம் செய்பொழுதாயின்**
**காமவேன் விழவாயின் கலங்குவள் பெரிது” (கலி.27:20-24)**

என்கிறது என தோழியே, காதல் மிகுந்து வருந்தாதே, ஏனெனில் நாம் விரும்பிய காதலர் நாம் இல்லாத தனிமையை உணர்வார். பிரிந்தவர்க்கு நடுக்கத்தையும், துன்பத்தையும் செய்யும் இவ் இளவேனிற் காலத்தினை அவர் உணர்வார். மதுரையில் இப்போது காமவேள் விழா நடக்கின்றது என்பதை நினைவு கொள்வார். அதனால் தலைவி பெரிதும் கலங்குவாள் என்று கருதிப் பகைவர்க்கு அச்சமூட்டிய தேரை விரைந்து செலுத்தி நமக்குத் துணையாக இங்கு வருவார் கலங்காதே என தலைவியின் துன்பத்தில் இருந்து தோழி அவளை ஆற்றுவிப்பதைக் காணமுடிகிறது.

மேலும் “தோழியானவள் எப்போதும் தலைவியிடம் சேர்ந்தே இருப்பவளாகவும் தலைவி சொல்வதையே செய்பவளாகவும் இருப்பதைச் சங்க இலக்கியம் சுட்டிக் காட்டுகின்றது. தலைவியின் உள நலனையே கருத்தாகக் கொள்பவள் தோழி, தலைவனின் களவுக்காலப் புணர்ச்சியை நெறிப்படுத்துபவளாகவும், ஆற்றுப்படுத்துபவளாகவும் சங்க இலக்கியத் தோழி காணப்படுகின்றாள்”[19] என்பர். மேற்கண்ட செய்திகள் மூலம் தலைவியின் அருகில் இருந்து அவளது துன்பத்தைப் போக்குபவளாகத் தோழி இருப்பதைக் காணமுடிகிறது.

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே புணர்ச்சி ஏற்பட்டதைத் தோழி அறிய முயல்கிறாள். அப்போது தோழி நடக்காத ஒன்றை நடந்ததாகக் கூறித் தலைவியிடம் உண்மையை அறிய முயல்கிறாள். இதனை,

**“கயமலர் உண்கண்ணாய் ! காணாய் : ஒருவன்**
**வயமான் அடித்தேர்வான் போல, தொடை மாண்ட**
**கண்ணியின் வில்லன், வரும் : என்னை நோக்குபு**
**முன்னத்தின் காட்டுதல் அல்லது, தான் உற்ற**
**நோய் உரைக்கல்லான் பெயரும்மன், பல் நாளும்” (கலி.37:1-5)**

என வரும் பாடலில் காணலாம். ஒரு தலைவன் யானை முதலியவற்றைத் தேடி வருபவர் போன்று வந்தான். அவன் குறிப்பால் தன் மனதில் உள்ளக் கருத்தைப் புலப்படுத்தினான். ஆதலால் ஆடிய ஊஞ்சலைச் சிறிது நேரம் ஆட்டும்படி கூறினேன். அவனும் அதைச் செய்யப்புக நான் கை நெகிழ்ந்து வீழ்பவனைப் போல அவனது மார்பின் மீது விழுந்தேன். என்னை அவன் அனைத்துக் கொண்டான். பின் பிறர் அச்செயலை அறிய நேரிடும் என்பதால் ‘பெண்ணே போய் வா’ என்று அனுப்பி வைத்தான் எனத் தோழி தலைவியிடம் கூறினாள். இவற்றில் தலைவன் வந்தது வருத்தத்துடன் நின்றது தோழி தன் ஊஞ்சலை ஆட்டும்படி தலைவனை வேண்டியது முதலியன கற்பனையாகும். இவ்வாறு கூறுவதால் தலைவியின் காதல் வெளிப்படும்.

தோழியும் தலைவியும் தலைவனது மலையை வாழ்த்திப் பாடுகின்ற வள்ளைப் பாட்டில் தோழி இயற்பட தலைவி இயற்பழிக்கிறாள். அப்போது தலைவியின் நலம் பாராட்டப்படுகிறது. இதனை,

**“ஆம்நுதல் அணி கூந்தல், அம்பணைத்தடமென் தோள்**
**தேன் நாறு கதுப்பிணாய்! யானும் ஒன்று ஏத்துரு**

**வேய் நரல் விடரகம் நீ ஒன்று பாடித்தை**

**..................**

**மென்முலை ஆகம் கவின் பெற**

**செம்மலை ஆகிய மலை இழவோனே" (கலி.40:8-10,34)**

என்னும் பாடலில் அறியலாம். அழகிய நெற்றியையும் அழகுப்படுத்தும் கூந்தலையும், மூங்கில் போன்ற தோளையும், மலரின் மணம் கமழும் கதுப்பையும் உடையவள் தலைவி. அவளிடம் மூங்கில் ஒலிக்கின்ற முழைஞ்சையுடைய மலையை முன்பு போல் அல்லாது இயற்பட ஒன்றைப்பாடு என்று கூறி, பின்பு தோழியும் இயற்பட பாடினாள்.

கட்டு அவிழ்ந்த கொம்பு மறைந்த நெருங்கிய பூக்கள் பொருந்திய குளையில் உள்ள தளிரைப் போன்ற அழகு வாய்ந்தது தலைவியின் மேனி. அவ்வழகு கெடுமாறு நோயைச் செய்த தலைவனின் அரிய உச்சி மலைகளை இனிப்பாடுவோம் எனத் தலைவியின் நலம் பாராட்டப்படுவதைக் காணலாம்.

தோழியும் தலைவியும் வள்ளைப்பாட்டில் தலைவனின் இயல்பைப் புகழ்ந்து இகழ்ந்தும் பாடினர். ஆதனை மறைந்து நின்ற தலைவன் கேட்கும் விதமாகத் தோழி தலைவியிடம் கூறுவதை,

**"பொய்த்தற்கு உரியயனோ? பொய்த்தற்கு உரியனோ?**
**'அஞ்சல் ஓம்பு என்றாரைப் பொய்த்தற்கு உரியனோ?**
**குன்று அகல் நல்நாடன் வாய்மையில் பொய் தோன்றின்,**
**திங்களுள் தீத்தோன்றியற்று.**
**................**
**மணிபோலத் தோன்றும் : மணிபோலத் தோன்றும்**
**மண்ணா மணி போலத் தோன்றும் - என் மேனியைத்**
**துன்னான் துறந்தான் மலை" (கலி.41:21-24,31-33)**

என்ற பாடலடியில் மலையாயிருந்தும் அது அருவியை உடையது. இதில் வியப்பு இல்லை என்று கூறுகின்றனர். அதைக் கேட்ட தலைவி மலை நாட்டை உடையவன் கூறிய மெய்யிலே பொய் தேன்றுமாயின் அது சந்திரனில் தீயானது தோன்றியதைப் போன்றதாகும். மேலும், காமத்தால் என் முன்கை வளையல் கழலும் படியாய் என்னிடம் வராதவனின் மலையாயிருந்தும் இளமேகம் உலவும், ஒரு காலத்தில் அன்றி நாள்தோறும் உலவுகிலது. தன் மேனியைக் கூடாது துறந்தவனின் தோள்கள் மலையாயிருந்தும் அது நீலமணி போல் விளக்கும் எனத் தோழியும், தலைவியும் தலைவனைப் பழித்துக் கூறுவதைக் காணமுடிகிறது.

தலைவி காதல் வயப்பட்டு விட்டாள். தலைவியின் காதல் பற்றிய செய்தி தோழியாகிய தனக்குத் தெரியும் என்பதனை எவ்வாறு தலைவிக்குப் புரியவைப்பது. இதனை எவ்வாறு எடுத்துரைப்பது என்பது தான் தோழியிற் புணர்ச்சியாகும். ஏனெனில் தலைவி நாணம் மிக்கவள் தன்னுடைய காதல் தெரிந்துவிட்டால் நாண மிகுதியால் மனவேதனை அடைந்து விடுவாள். எனவே தோழியானவள் தலைவியின் காதலை மெல்லச் சேர்க்கும் பாங்கு சிறப்பினை உடையதாகும்.

**“ஒன்று இரப்பான் போல் எளிவந்தும் சொல்லும் : உலகம்**
**புரப்பான் போல்வது ஓர் மதுகையும் உடையன்**
**…………..**
**அன்னான் ஒருவன் தன் ஆண் தகைவிட்டு, என்னைச்**
**சொல்லும் சோல், கேட்டீ – சுடரிழாய் - பல்மாணும்”  (கலி.47:1-2,8)**

மேற்கண்ட பாடலில் தலைவன் தான் காதலிக்கும் தலைவியை; நறிய நுதலினை உடையவளே, நீ இன்றி நான் உயிர் வாழ மாட்டேன் என

எடுத்துரைக்கும் செயலினைத் தோழியானவள் தலைவியின் நாணத்திற்கு ஊறு வந்து விடாமல் மெல்ல, மெல்ல எடுத்துரைக்கும் மாண்பினைக் காணமுடிகிறது. “தந்தையின் குடும்பம் X தலைவி என முரணாக வகுத்து, இரண்டையும் இரண்டு பகைவேந்தர்களாகவும், அவர்களின் சண்டைக்கு நடுவே சந்தி செய்ய நிற்கும் சான்றோராகத் தன்னையும் உருவகப்படுத்தும் தோழியின் மொழியில் குடும்பமென்ற களத்தில் தந்தையின் இடம் எத்தகையது என்பதை அழுத்தமாக விளக்கிவிடுகிறது.”[20] இதன் மூலம் தோழியின் பங்களிப்புச் சிறப்பாக அமைவதை அறியலாம்.

பிற உயிர்களுக்கு வேதனை தரக்கூடாது விரைந்து செல்லுதல் வேண்டும். வேதனையில் வாடும் தலைவியின் வேதனைத் துயரை நீக்க வேண்டும் எனத் தலைவன் எண்ணுவதை,

**“பூத்த பொங்கர்த் துணையோடு வதிந்த**
**தாது உண் பறவை பேதுறல் அஞ்சி**
**மணிநா ஆர்த்த மாண்வனைத் தேரன்**
**உவக்காண் தோன்றும் - குறும் பொறை நாடன்” (அகம்.4:10-13)**

எனும் இப்பாடல் உணர்த்துகின்றது. வினை முடித்து மீளும் தலைவன் புறப்படும் முன் தேர்மணியினது நாக்கு ஒலிக்காதபடி அதைக் கட்டுகிறான். வண்டுகள் தம் துணையுடன் கூடி மகிழும்போது, தேரின் மணியோசை அவ்வுயிரினங்களுக்கு அச்சத்தைத் தந்து பிரிந்துவிடக் கூடாது என்பதற்காகத் தேரை ஒலியின்றித் செலுத்துக எனப் பாகனிடம் விளம்புகிறான் தலைவன். இதனைத் தோழி தலைவியிடத்துப் பருவம் காட்டி வற்புறுத்திக் கூறுகிறாள். அ∴றினை உயிர்களையும், மதித்துப் போற்றிய தலைவன், தலைவி மீது

மிகுந்த அன்பு கொண்டுள்ளதைக் குறிப்பிட்டு, தலைவன் விரைந்து வந்து உன்னைக் காப்பான் என தோழித் தலைவியிடம் கூறினாள்.

குறிஞ்சி நில ஒழுக்கம் களவு வாழ்க்கைக்கு ஏற்ற ஒன்றாகும். இக்களவு நிலையின் அடிப்படையான முதற்சந்திப்பைப் பற்றி அகநானூற்றுப் பாடல் அழகாகக் குறிப்பிடப்படுகிறது. இதனை,

**"பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு**
**நனி பசந்தனள் என வினவுதி அதன் திறம்**
**யாணும் தெற்றென உணரேன் மேல் நாள்**
**...............**
**நின் மகள் உண்கண் பல் மாண் நோக்கிச்**
**சென்றோன் மன்ற அக் குன்று கிழவோனே"** **(அகம்.48:2-4,21-22)**

என்பது பாடல். பூக்கள் நிறைந்த மலைச் சாரலிலே என் தோழிமார்களுடன் வேங்கைமலர் கொய்வதற்காகப் போனோம். புலி புலி என்று ஆரவாரித்துக் கொண்டே வேங்கை மலரைப் பறித்துக் கொண்டிருந்தோம். இந்த ஓசையைக் கேட்டவுடன் கண்களைப் போன்ற ஒளி பொருந்திய செங்கழுநீர் மலர்களை ஊசியின் துணைகொண்டு கோத்துச் செய்யப்பட்ட மாலையைத் தோளிலே அணிந்தவன். மார்பிலே செஞ்சந்தனம் பூசியவன். வரிந்துகட்டியவில்லிலே ஒரு அம்பைத் தொடுத்தவன் நீங்கள் சொல்லிய புலியாது? அப்புலி எத்திசையிலே சென்றது என்று கேட்டுக் கொண்டே எங்கள் எதிரில் வந்துநின்றான்.

அவனைக் கண்டு நாங்கள் நாண மடைந்தோம். நாங்கள் ஒருவராக எங்கள் முகத்தை மறைத்துக் கொண்டு நின்றோம். அவன் எங்கள் நிலையைக் கண்டுமிகவும் அன்புடன் ஐவகையாகக் கூந்தலை அழகு செய்து முடித்துக் கொள்ளும் கருமையும் குளிர்ச்சியும் பொருந்திய தலைமயிரை உடையவர்களே

என்று கேட்டான். பின்னர் மெதுவாகக் குதிரையைச் செலுத்தும் தேரையுடையவன் எங்களை நேரே பார்த்தான். தலைவியின் மையுண்ட கண்களைப் பலமுறை நோக்கினான் அவளும் நோக்கினாள் பிறகு அந்த மலை நாட்டின் தலைவன் போய்விட்டான். முன்பின் அறியாத ஓர் ஆணும் பெண்ணும் திடீரென்று சந்தித்துக் கண்களாலும் உள்ளத்தாலும் ஒன்றுபட்ட தலைவன் தலைவியைப்பற்றித் தோழி செவிலித்தாய்க்கு அறத்தோடு நின்று கூறியதாக அமைந்துள்ளது. இப்பாடற்கருத்திற்கிணங்க பெண்மைக்குரிய பண்புகளைத் தொல்காப்பியர்,

**“அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற் குரிய என்ப” (தொல்.கள:96)**

என்ற நூற்பா மூலம் வெளிப்படுத்துகிறார்.

பிரிவினால் வாடிய மேனியே அலருக்குக் காரணமானது என்கிறார் வெறிபாடிய காமக் கண்ணியார் இதனை,

**“மையற் பெண்டிர்க்கு நொவ்வல் ஆக**
**ஆடிய பின்னும், வாடிய மேனி**
**பண்டையின் சிறவாது ஆயின் இம் மறை**
**அலர் ஆகாமையோ அரிதே, அ∴. தான்று” (அகம்.98:22-25)**

என வரும் பாடலில் சுட்டியுள்ளார். வெறியாடும் களத்திலே வந்து கூடிய மயக்கம் பொருந்திய பெண்களுக்குத் துன்பம் உண்டாகுமாறு, வேலன் ஆடிய பின்னும் என்னுடைய வாடிய மேனி முன்பு போல அழகு பெறவில்லையாயின், இக்களவொழுக்கமானது பலரும் தூற்றும் வண்ணம் வெளிப்படாதிருத்தல் அரிதாகும். அறிவுடையராகிய நம் தலைவர் நமக்குச் செய்த துன்பத்தைக் கண்டு, நறுமணங்கமழும் முருகன் நம்மீது அருள் கொண்டு, நம் முந்தைய

அழகினைத் தருவாரேயானால், நெருங்கிய வளையல்களை அணிந்த நம் தலைவி பெற்ற துன்பமானது பிறிதொன்றினால் ஏற்பட்டது. காடு பொருந்திய நாடன் ஆகிய நம் தலைவன் கேட்பானாயின், யான் உயிர் வாழ்தல் அரிதினும் அரிதாகும் என வருந்திய தோழி தலைவிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

தலைவனால் அடையும் துன்பத்தை எண்ணி தோழி கூறியதை எதிர்பட்டுத் தலைவி கூறியது,

**"………………..**
**யாங்குஆ குவல்கொல் யானே? நீங்காது**
**முதுமரத்து உறையும் மரவுவாய் முதுபுள்**
**கதுமெனக் குழறும், கழுது வழங்கு, அரைநாள்**
**நெஞ்சுநெகிழ் பருவரல் செய்த**
**அன்பி லாளன் அறிவுநயந் தேனே"   (அகம்.260:11-15)**

வண்டின் கூட்டம் மலருக்கு மலர் தாவித் தேனை உண்டு மகிழ்ந்தது. சோலையின் மீதிருந்து நாரைக் கூட்டம் ஒலி செய்தது, கடற்கரையில் விளையாடித் திரிந்த நண்டு வளையிற் சென்று புகுந்தது, கடல் அலைகள் ஒலி அடங்கின, மீன்பிடிப் படகுகள் மீன் பிடித்தலாகிய தம் தொழிலை மறந்தன, செவ்வானம் தோன்றிற்று, என்றும் பிரியாது தன் துணையோடு வாழும் அன்றிற் பறவை, மணல் மேட்டிலுள்ள பனை மரத்தின் உள்மடலில் சேர்ந்து தங்கிற்று, முதிய மரத்தை விடுத்து ஒரு பொழுதும் நீங்காது தங்குகின்ற முழங்கும் வாயையுடைய முதுமையடைந்த பேராந்தை விரைவாகத் தன் குரலெடுத்துக் குழறி ஒலிப்பதும், பேய்கள் நடமாடித் திரிவதுமாகிய நள்ளிரவில் நெஞ்சத்தை நெகிழ்விக்கிற பெருந்துன்பத்தை என்பால் செய்த அன்பிலான் ஒருவனுடைய அறிவுடைய கூற்றை உண்மையெனக் கொண்டு யானும் அன்று விரும்பினேன், எனத் தலைவி தனது கூற்றைக் குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

**தலைவி உயிர்விட துணிந்ததைத் தோழி கூறுதல்**

தலைவன் பிரிந்து சென்றால் பிரிவாற்றாமையால் தலைவியின் உயிர் வேறுபடும் என்பதை,

> **"பெரு நகை கேளாய், தோழி ! காதலர்**
> **ஒரு நாள் கழியினும் உயிர் வேறுபடூஉம்**
> **பொம்மல் ஓதி! நம் இவண் ஒழியச்**
> **................**
> **படு மழை உருமின் உரற்று குரல்**
> **நடு நாள் யாமத்தும் தமியம் கேட்டே" (நற்.129:1-3,8-9)**

என்கிறது. தோழி கூற்றுப் பாடல். பிரிந்தால் உயிர் வாழ்தல் தலைவியால் இயலாது என்பதைத் தலைவன் அறிந்தும் பிரியக் கருதியது துன்பத்திற்குரியது. தலைவன் பிரிந்து ஒரு நாள் இருப்பினும் தலைவி உயிரை விடுவாள். களவுக் காலத்தில் மழை பெய்து தலைவன் சென்றதனை நினைவூட்டித் துன்பத்தை அதிகமாக்கித் தலைவி உயிரைக் கொள்ளும். இவ்வாறான கருத்தமைந்த பாடல், பின்வரும் குறளினை ஒத்திருப்பதை,

> **"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்**
> **வல்வரவு வாழ்வார்க்கு உரை" (குறள்:1151)**

என்ற வள்ளுவர் கூற்றால் உறுதிபடுத்தலாம்.

தலைவனையும் தலைவியையும் குறியிடம் சேர்ப்பவள் தோழியே ஆவாள். தலைவன் தலைவியைச் சந்திக்க இரவுக் குறியில் வருகின்றான். இதனை,

> **"கருங்கட் தாக்கலை பெரும்பிறிது உற்றென**
> **கைம்மை உய்யாக் காமர் மந்தி**
> **கல்லா வன்பறழ் கிளைமுதல் சேர்த்தி**
> **ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்து உயிர் செகுக்கும்**

**சாரல்நாட! நடு நாள்**

**வாரல் வாழியோ வருந்துதும் யாமே"  (குறுந்.69:1-6)**

என்ற அடிகள் தலைவன் தலைவியை இரவில் சந்திக்க வரும் வழியின் தீங்கினை உணர்த்துகின்றன. ஆண் குரங்கு இறந்த துன்பத்தைத் தாங்காத பெண்குரங்கு மரம் ஏறுதல் முதலிய தொழில்களை அறியாத தன் குட்டியைத் தனது சுற்றத்தினரிடம் அடைக்கலமாகச் சேர்த்துப் பின் தன் உயிரை மாய்த்துக் கொள்ளும். நள்ளிரவில் தலைவியைக் காண வருவதைத் தவிர்க்க வேண்டும். மீறி வந்தால் உனக்கு ஏதாவது துன்பம் ஏற்பட கூடுமோ என எண்ணித் தலைவி வருந்துவாள். நினக்கு ஒரு துன்பம் வந்தால் தலைவியால் உயிர் வாழ முடியாது. காட்டு விலங்குகள் கூட கைம்மையை ஏற்க உடன்படாமல் உயிர் துறக்கும் எனக் கூறி தலைவியின் ஆற்றாமை மிகுதியை உணர்த்துகிறவளாகத் தோழி காணப்படுகிறாள். "தோழிதான் தலைவன் தலைவி இருவருக்குமிடையேயும் இணைப்புப் பாலம் போல விளங்குகின்றாள். தலைவன் தலைவியருக்கு மட்டுமின்றித் தமரிடமும் செவிலித்தாயிடமும் தலைவி, தலைவன்பால் கொண்டுள்ள தொடர்பை மிகச் சாதுரியமாக எடுத்துரைப்பதில் திறமை வாய்ந்தவளாகவும் விளங்குகின்றாள்."[21] மேலும் "மூன்று நாட்களுக்கு மேல் தோழியின் உதவியின்றித் தலைவியைத் தலைவன் சந்தித்தல் இயலாது எனும் மரபு தோழியின் முதன்மையை உணர்த்தும்,"[22] இறையனாரே முதன் முதலில் இது குறித்துக் கூறுகிறார்.

## தொகுப்புரை

- தலைவியின் அகவாழ்வில் தோழி முதன்மையான பாத்திரமாவாள். அவள் தலைவியின் உணர்வுக்கும், கற்பு வாழ்வுக்கும் பாதுகாப்பானவள். தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியத்திலும் தோழியின் கூற்று மிகுதியாக இடம்பெறுவதை அறியலாம். தலைவிக்குரிய உயர்மொழிக் கிளவியோடு மனவலிமையும் செவிலியின் மகள் என்பதால் கூடுதல் உறவுரிமையும் தலைவியிடம் தோழிக்குண்டு.
- தோழி என்பவள் குடும்ப அறம் கெடாமல், தலைவிக்கு உற்ற துணையாய் இருந்து அறிவுரை கூறி நெறிப்படுத்துகிறாள். தலைவி தலைவனைப் பிரிந்திருக்கும்போது அவளை ஆற்றுப்படுத்துபவள், தலைவியின் நிலைக்காக வருந்துபவள், தலைவனை இடித்துரைத்தல், தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்திற்காக வருந்துதல், அலர் குறித்த அச்சம், தலைவியின் நிலை கண்டு துயர் அடைதல் போன்றவை தோழியின் உயர்ந்த பண்பை வெளிக்காட்டுகின்றன.
- சங்க இலக்கியங்கள் உணர்த்தும் தோழியின் பண்புகள் உயர்ந்த செயல்நெறி கொண்டவை. தோழி பல நற்பண்புகளுக்கும் நன் மதிப்புகளுக்கும் பாத்திரமாக அமைந்தவள். களவைக் கற்பாக்கிய மனபலம் உடையவள். அறத்தோடு நின்று தலைவியின் துயர் துடைந்தவள். தலைவியின் கற்பு வாழ்வியல் சிறப்பாக அடித்தளம் அமைத்தவள்.
- மூன்று நாட்களுக்கு மேல் தோழியின் உதவியின்றித் தலைவியைத் தலைவன் சந்தித்தல் இயலாது எனும் மரபு தோழியின் முதன்மையை உணர்த்துகிறது.

- ❖ களவை, கற்பாக்க முயற்சி செய்பவள் தோழி ஆவாள். மேலும், மேலும் களவு நீடித்துக் கொண்டே போகுமாயின் அதனால் வரும் தீங்குகளையும் தோழி எடுத்துரைப்பதைக் காணலாம்.
- ❖ அகத்திணையிலக்கியத்துத் தோழி மிகுந்த உரிமையுடையவள் தலைவியின் உரிமையையும் செயலையும் தன் உரிமையும் செயலுமாகக் கொள்ளும் உறவுடையவள்.
- ❖ தலைவியின் இசைவின்றி அறத்தோடு நிற்கும் உரிமை மட்டும் தோழிக்கு இல்லை.
- ❖ பெற்றோரை விட தலைவியின் உணர்வுகளைப் புரிந்து கொண்டவளாகத் தோழி விளங்குகிறாள். களவு மற்றும் கற்பு வாழ்வில் தலைவன், தலைவியின் மண வாழ்வை நெறிப்படுத்துபவள். தெருவில் புழுதியில் விளையாடுதல் ஆகியவற்றில் சிறுபருவம் முதலாகத் தலைவியை விட்டுப் பிரியாமல் இருப்பவள் தோழியே.
- ❖ தோழி கற்பொழுக்கத்தைவிட களவொழுக்கத்தில் இன்றியமையாதவளாக விளங்குகிறாள். மேலும் தலைமக்களின் களவு நீடிக்குமானால் அதனால் வரவிருக்கும் துன்பத்தை நினைத்து வருந்தி தலைவியைத் திருமணம் செய்து கொள்ளுமாறு தலைவனிடம் எடுத்துரைக்கிறாள்.
- ❖ இச்செறிப்பு, காவல் மிகுதி, வரைவு உடன்படாமை, வேற்று வரைவு போன்ற இடையூறுகளால் தலைவனும், தலைவியும் சந்திக்க இயலாத சூழலில் தலைவியின் கற்பினைக் காக்கும் பொருட்டு உடன் போதலே சிறந்தது என்று தலைவனையும் தலைவியையும் உடன் போக்கிற்கு உட்படுத்தி அதற்கான வழிவகைகளைச் செய்கிறாள்.

## சான்றெண் விளக்கம்

1. சீ.சிந்துஜா, சங்க அக இலக்கியத்தில் உடன்போக்கு, ப.53.
2. கவிஞர் சுரா, (தொ.ஆ) செந்தமிழ் ஆய்வுக்கோவை, 2013, ப.323.
3. தா.ஏ. சண்முகம், உளவியல் பாகம் 3, பக்.313.
4. இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, 2012, ப.2546.
5. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.168.
6. இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, 2007, ப.1528.
7. இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, 2012, ப.2484.
8. மேலது, ப.2548.
9. சு.சோமசுந்தரம், திருக்குறளில் பாலியல், ப.26.
10. கவிஞர் கண்ணதாசனின், திகுக்குறளில் காமத்துப்பால், ப.35.
11. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.61.
12. இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, 2007, ப.1530.
13. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம். ப.42.
14. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.218.
15. மேலது, ப.218.
16. சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள், ப.44.
17. ந.முருகேச பாண்டியன், அற்றைத் திங்கள் அவ்வெண்ணியவில், ப.17.

18. இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, 2014, ப.1494.

19. அ.மரிய செபஸ்தியான், தமிழரின் பாலியல் முறைமைகள், ப.43.

20. க.பஞ்சாங்கம், புனைவுகளும் உண்மைகளும், திறனாய்வுக் கட்டுரைகள், ப.4.

21. இலக்கியத் தரவுகளில் மகளிர் பதிவுகள், ப.7.

22. சூ.ஜெயந்தி, ஐங்குறுநூற்றுக் குறிஞ்சித்திணையில் களவு மரவுகள், ப.21.

# இயல் ஐந்து

## பரத்தையரை மையமிட்ட பாலியல் கூறுகள்

தனிமனித வாழ்விலும் சமூக வாழ்விலும் பாலுணர்ச்சி மிக இன்றியமையாத இடம் வகிக்கின்றது. மனித இனத்தின் தொடக்கத்தில் சிறு பருவத்திலிருந்தே வரையறையற்ற ஆண் பெண் உறவு நிலவியதென்று கூறப்படுகிறது. மனிதன் படிப்படியே முன்னேறிய போது. தன்னுடைய பழைய மரபுகளை மாற்றிக் கொண்டான். அவ்வாறு ஏற்பட்ட மாற்றங்களில் மனிதனுடைய பாலியல் வாழ்க்கையிலே ஏற்பட்ட மாற்றமே தலைமையானது எனலாம். **'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் ஐயர் யாத்தனர் கரணம் என்பர்'** என்கிறது தொல்காப்பியம். வரையறையற்ற ஆண் பெண்ணுறவினை மாற்றித் திருமணமென்னும் நிறுவனத்தை உருவாக்கிய பின்னரும் கூடப் பழைய நிலையின் எச்சம் நீடித்ததைக் காண முடிகிறது. அவ்வெச்சமே பரத்தைமை என்னும் நிறுவனமாக உருவாகி, இன்றளவும் மனித சமூகத்தின் ஓர் உறுப்பாக நீடித்து வருகிறது. சங்க இலக்கியங்கள் ஆண் பெண்ணுறவின் பிற கூறுகளை விளக்குவது போன்று, பரத்தமையின் கூறுகளையும் எடுத்துக்காட்டுகின்றது. அவற்றைக் கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**பரத்தையர் :**

தொல்காப்பியர் பலவகைப் பரத்தையர் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பரத்தையர் அயன்மை பரத்தையர். அயலார் “களவொழுக்கம் ஒழுகி மணஞ்செய்து கொண்டு கற்பொழுக்கம் ஒழுகும் - இல்லறம் நடத்தும் - தலைவியரல்லாத பிற மகளிர் அதாவது களவொழுக்கம் ஒழுகாமலும்

மணஞ்செய்து கொள்ளமாலும் காமத்திற்காக ஆடவருடன் கூடி வாழும் பெண்டிர். இவர் (1) காமக்கிழத்தியர் (2) காதற்பரத்தையர் (3) சேரிப்பரத்தையர்"[1] என மூன்று வகைப்படும் என்பர்.

இன்று சமயங்களில் கன்னிப்பெண்கள் இருப்பது போல இன்பத்தை வெறுக்காமல், அதற்காகவே பண்டு மணஞ்செய்து கொள்ளாது சில பெண்கள் இருந்து வந்தனர். அவர்கள் தன்னுரிமையுடனேயே வாழ்ந்து வந்தனர். அவர்கள் இம்மூவகையினரும் ஆவர்.

**"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப" (தொல்.கற்பு:1091)**

என்பதால், தமிழரிடை, களவொழுக்கம் ஒழுகி கரணம் இன்றி பலரறிய மணம் செய்து கொள்ளாது கற்பொழுக்கம் ஒழுகிய - இல்லறம் நடத்தி வந்த – காலமும் ஒன்று இருந்து வந்தது. ஒருவனும் ஒருத்தியும் காதல் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தனர். திருமணம் என்பதே அன்றில்லை. பின்னர் தான் திருமணம் குலப் பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இப்பரத்தையர் களவொழுக்க மொழுகாது காம நுகப்பவர். எனவே முன்னது தூய ஒழுக்கமாகும். பின்னது தீய ஒழுக்கமாகும். "இற்பரத்தையென்பாள் பரத்தை மகளாகி ஒருவனுக்கே உரிமை பூண்டொழுகுபவள். விலைமகளாகாள்"[2] என்பதை ஐங்குறுநூறு உணர்த்துகிறது.

**பரத்தை பற்றிய கருத்து**

சங்க இலக்கியத்துள் **"**பரத்தை, பரத்தன், பரத்தமை என்னும் சொற்கள் காணப்படுகின்றன. 'பரத்தையர்' என்னும் பன்மை வடிவமும் 'பரத்த' என்னும்

விளி வடிவமும் காணப்படுகின்றன. தனக்கென வரையப்பட்ட பெண்ணை விடுத்துப் பல பெண்டிரிடம் உடலுறவு கொள்பவன் என்னும் பொருளிற் பரத்தன் என்றும் தனக்கென ஒருவனை வரைந்து கோடலின்றித் தான் விரும்பியோருடனும் உடறவு கொள்பவள் பரத்தையென்றும் பொருளிற் சுட்டப்படுகிறது.**"**[3]

பரத்தை, பரத்தமை என்னும் சொற்களுக்குரிய வரையறைகள் சங்க இலக்கியத்தில் இல்லை. எனினும் அவர்களுடைய பண்புகள் பலவற்றையும் உள்ளடக்கி ஒரு வரைவிலக்கணத்தைக் கூற இயலும். ! பரத்தையராவார் யாவரெனின், அவர், ஆடலும் பாடலும் வல்லாராகி, அழுகும் இளமையும் காட்டி, இன்பமும் பொருளும் வெஃகி யாவர் மாட்டும் தங்காதார்' என்பது இளம்பூரணர் தரும் வரைவிலக்கணமாகும்.

**பரத்தையர் சொல் விளக்கம்**

பொது மகளிர் என்னும் சொல்லோடு தொடர்புடைய சில சொற்களின் விளக்களைக் கீழ்வருமாறு காணலாம்.

- ❖ பரத்தை – பரந்துபட்ட ஒழுக்கம் உடையவள்
- ❖ பரத்தமை – பரத்தமை தொழில்
- ❖ பரத்தன் - பரந்துபட்ட ஒழுக்கமுடையவன்
- ❖ கணிகையர் - காலம் கணித்த ஒழுக்கத்தால் காணம் கொடுப்போருக்கு உடலின்பத்தை விற்கும் கலையரசி
- ❖ காமக்கிழத்தி – காமம் துய்க்க உரிமையாக்கிக் கொள்ளப்பட்ட பெண்

❖ ஒத்த கிழத்தியா் - தானும் தன் மனைவியும் போன்று ஒத்த குலத்தில் தலைவன் தனக்கென உரிமையாக்கி கொள்ளப்பட்டவள்

❖ இழிந்த கிழத்தியா் - தலைவனால் உரிமையாக்கிக் கொள்ளப்பட்ட அவனினும் தாழ்ந்த குலத்து மகள்.

❖ வரையப்பட்டோா் - தலைவனால் உரிமையாக்கிக் கொள்ளப்பட்ட கணிகையா் மகள்.

**பால்நிலைப்பட்ட ஒழுக்கம்**

குடும்பம் என்ற அமைப்பு உருவாகிய பின்னா் ஆண், பெண் பாலியல் வரம்பும், கடமையுணா்வும் சிறப்பிடம் பெற்றுள்ளன.

**"வினையே ஆடவா்க்கு உயிரே வாள்நுதல்**
**மனையுறை மகளிா்க்கு ஆடவா் உயிரே" (குறுந்.135:1-4)**

என்கிறது தொல்காப்பிய நூற்பா. மனித இனம் விலங்கு நிலையில் இருந்த காலந்தொட்டு ஆண் - பெண் என்ற உயிரியல் பால் பாகுபாடு இருந்து வந்துள்ளது. "வளா்ச்சியடைந்த உயிரினங்கள் அனைத்திற்கும் இக்கூற்று பொருந்தும் (Bisexual organism) பெண்களுக்குரிய கற்பு வரையறுக்கப்பட்டு விளக்கப்பட்ட அதே வேளை திருமணத்துக்குப் புறம்பான ஆண்களுக்குரிய உடல் உறவு நிறுவனமும் அங்கீகரிக்கப்பட்டிருந்தது. ஆண்கள் ஒன்றுக்கு அதிகமான மனைவியரைக் கொண்டிருக்கவும் அனுமதிக்கப்பட்டனா். முதல் மனைவி பிறரில் இருந்து வேறுபடுத்தப்பட்டு 'மனையாள்' என அழைக்கப்பட்டாள் மற்றவள் காமக்கிழத்தி எனப்பட்டாள். ஏனைய பெண்கள் பரத்தையா் விலைமாதா், பொருட் பெண்டிா், கணிகையா், பொது மகளிா், வரைவின் மகளிா் எனப் பலவாறு அழைக்கப்பட்டனா். குடும்ப வாழ்வும்,

குழந்தைப்பேறும் அப்பெண்களுக்குத் தடை செய்யப்பட்டவையாகும்."[4] சங்கம் மருவிய காலத்தில் பரத்தமை நிறுவன மயமாக்கப்பட்டுள்ளது.

**சங்க காலப் பெண்களின் நிலை**

சங்க காலத்தில் பெண்கள் விடுதலையை அனுபவித்தனர். அவர்களது சமூக நடத்தையில் குறைந்தபட்ச கட்டுபாடுகள் காணப்படுகின்றன. அகப்பாடல்களின் அடிப்படையில் சுதந்திரமாகவும் ஓரளவு சுயவிருப்பத்தின் அடிப்படையிலும் நடைபெற்றது என்று கூறலாம். சங்கப் பெண்பாற் புலவர்களின் 41 பேர் என இனங்காணப்பட்டுள்ளனர். இவர்களுள் பிரபலமானவர் ஔவையார். சங்க நூல்களில் இவரது 58 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. பெண்கள் பற்றிய சான்றுகள் பல சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

**சங்க இலக்கியத்தில் பரத்தையர்**

சங்க அகப்பாடல்களில் தலைவன், தலைவி, தோழி என்ற நாடக பாத்திரங்களைப் போலப் பரத்தை என்கிற கலைத்துறையைச் சேர்ந்த பெண் போல ஒரு பாத்திரமாகப் புலவர் மரபால் எதார்த்தத்திலிருந்து படைத்துக் கொள்ளப்பட்டாள். குறிப்பாக மருதத்திணைப் பாடல்களில் கருவுற்றுப் புதல்வனைப் பெற்றுப் பாலூட்டும் மனைவிக்கும், கணவனுக்கும் இடையில் சண்டை வரக் காரணமாகப் பரத்தை இடம் வகிக்கின்றாள்.

சங்க இலக்கியப் பாடல்களில் பரத்தையரைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ளும் வகையில் செய்திகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை. சங்கப் படைப்புகளான பதிற்றுப்பத்தில் மன்னனே விறலியுடன் சேர்ந்து ஆடுகிறான். குறுந்தொகையில் பொதுவாகப்பரத்தை இழிந்துரைக்கப்படவில்லை.

பிற்காலச் சங்கப் படைப்பான கலித்தொகையில் பரத்தையின் இடம் கீழிறங்குகிறது. சங்க இலக்கியப் பரத்தையர் தலைவன், தலைவியரின் ஊடலுக்குப் பின்னணியாகவே சித்திரிக்கப்பட்டுள்ளனர்.

பரத்தையர் பல்வேறு காரணங்களினால் தந்தை வழிச் சமூக அமைப்பின் பாலியல் நெறிகளுக்குள் வராமல் தாய்வழிப் சமூகம் சார்ந்த தங்கள் பாலியல் சுதந்திரத்தை நிலை நிறுத்திய ஒரு சாதியினர் என்று கொள்ளலாம். "ஆடவர் தம் காதலை - காமத்தை - கழித்துக்கொள்ளும் கருவியாக ஒரு வகுப்பினரையே உண்டாக்கிவிட்டது."[5] மருதநில ஊர்களில் பரத்தையர் சேரிகள் இருந்துள்ளன. நகரங்களில் பரத்தையர் வாழும் தெருக்களும், கணிகையர் மாளிகைகளும் இருந்தன என்பதை,

**"நீர் திரண்டன்ன கோதை பிறக்கிட்டு**
**ஆய்கோல் அவிர்தொடி விளங்க வீசிப்**
**போதவிழ் புதுமலர் தெருவுடன் கமழ"　(மதுரைக்காஞ்சி:562)**

என்னும் பாடல் மெய்ப்பிக்கின்றது. சுதந்திரமில்லாத பெண்ணுடல் பரத்தையுடையதாயிருக்கும் போது புதிய விதிகள் பிறக்கின்றன. தனக்கு விதிக்கப்பட்டதே இதுவும் என்பதை உணராத பரத்தை, சுதந்திரமென்று கருதிக் கொண்டு, மலர்களால் தன்னை அலங்கரித்தவளாய் வளையல்கள் ஒலிக்கக் கைகளை வீசியபடி தெருவில் நடப்பதை இப்பாடலடிகள் வெளிகாட்டுகின்றன. "களவில் உடன்பட்டுப் புணரும் ஆண் கற்புவாழ்வோடு வாழ்வதற்குரிய சூழலை ஏற்படுத்தாது பொருள்வயின் பிரிந்து காமக்கிழத்தி அல்லது பரத்தமையின்பாற் பிரிந்தாலோ ஆண், ஆணிற்கான அடையாளம் இழப்பதில்லை. ஆணின் புணர்தல் அரசியலை அங்கீகரித்திருக்கிறது. இதை ஔவை மாற்று

அரசியலாகப் பார்க்கிறார். ஔவை தனக்கான காம அனுபவத்தையும், பெண்ணின் காம அனுபவத்தையும் ஒற்றைப் புள்ளியில் இணைத்து, ஆண் ஆதிக்க மனோபாவத்தைப் பெண்ணிய அரசியலாக்கியிருக்கிறார்."[6]

பரத்தை வாழ்விலிருந்து வெளியேறி விரும்பிய கற்புடன் வாழ முற்பட்ட பரத்தையரைப் பற்றிச் சங்கப் பாடல்கள் காட்டவில்லை. அவர்கள் வாழ்க்கை முற்றிலும் மாறுபட்டது. பரத்தையரின் சித்திரம் மிகவும் கவரும் தன்மை கொண்டது.

**பரத்தையரின் வகைகள்**

பரத்தையரைப் பல வகையாக வகைப்படுத்துகின்றனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களில் மருத நிலமே பரத்தையர்களை உருவாக்கிய களமாக அமைகிறது. குறிஞ்சி, முல்லை நிலங்களான மலையிலும் காட்டிலும் திரிந்த மனிதனுக்குள் ஆண், பெண் பால்பேதம் பெரியதாய் இருந்திருக்கவோ அது சார்ந்த ஏற்றத்தாழ்வுகளுக்கோ வழியில்லை. மருத நிலம் சார்ந்த பாடல்களிலேயே பரத்தையர் சார்ந்த பாடல்களை மிகுதியாகக் காணமுடிகிறது.



**காதற் பரத்தையர்**

காதற் பரத்தையர் தலைவனிடம் அன்பு கொண்டு இன்பந்துய்ப்பவர். “காமக்கிழத்தியர் தலைவனோடு உடனிருந்து வாழ்க்கை நடத்தாமல் தனிவாழ்க்கை வாழ்பவர். தலைவன் குடும்பத்திற்கும் இவர்க்கும் யாதொரு தொடர்பும் இல்லை ‘பரத்தையர்’ என்பதே இதற்குச் சான்றாகும். கிழத்தி - உரியவன் குடும்பத்திற்கும் உரியவள். பரத்தை குடும்பத்திற்கு அயலவள். இன்று ஏதாவது ஒரு வேலையில் இருக்கும் ஒருசில பெண்கள், தமக்குப் பிடித்த ஒரு ஆடவரை வரப்போக வைத்துக் கொண்டிருப்பது போன்றது இது. இவர் தலைவனை நம்பி வாழாமல் தாம் தேடும் பொருளால் தன்னுரிமையுடன் வாழ்பவர்”[7] என்கிறார் புலவர் குழந்தை. இல்லக்கிழத்தியை விட்டுத் தன் பரத்தையை அதாவது காதற் பரத்தையை மணந்து கொள்கிறான். அவனுடைய மனக்குரங்குப் புதியதைத் தேடும் பொழுது பரத்தையை நாடிச் செல்லுகிறது. தலைவியை நோக்கி அலராகின்றது. சூளுரைத் தாய் என்று சொல்லாமல் சேரிப் பரத்தையிடம் செல்ல இருந்தாலும் என் காமத்தைத் தீர்த்து செல்வாயாக என நேரிடையாகக் கூறுகிறாள். காமத்தைத் தோழி வெளியிட இங்கே காதற்பரத்தை வெளிப்படையாக்குகிறாள். காதற் பரத்தை என்பவள் இல்லக்கிழத்தியின் பண்பு நலன்களில் ஒரு படி கீழ் என்றும் பரத்தையின் பண்பு நலன்களில் ஒரு படி மேல் என்று சொல்லாம் ஆண்களில் பரத்தன என்பதை,

**“மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி” (அகம்.146:9)**

**“பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்**
**நண்ணேன் பரத்த நின் மார்பு” (குறள்:1311)**

பரத்தன் என்பதை இலக்கியங்கள் சுட்டி நிற்கின்றன. இத்தகைய ஆண்களைச் சமூகம் கீழாக மதிக்கவில்லை. இவை ஆண்களுக்குரிய உயர்வையே காட்டுகின்றன.

**இல்லக்கிழத்தி**

சங்க இலக்கியத்தில் ஆடவன் முதலில் ஒருத்தியை ஊரார் அறிய மணந்து கொண்டான். அவள் இல்லக்கிழத்தி ஆவாள். "இல்லக்கிழத்தி என்னும் மனைவி மட்டுமே ஆணின் இனத்தை விருத்தி செய்யத் தகுதி உடையவள். பரத்தையர் அல்லர். அவர்கள் ஆணுக்குச் சுகத்தை மட்டும் தருபவர்கள் என்ற கிரேக்க நிலைமை தான் சங்க காலச் சமூகத்திலும் நிலவியது"[8] என்பதை அறியமுடிகிறது.

**காமக்கிழித்தியர்**

காமக் கிழத்தியானவள் தலைவனது செல்வநிலை யறிந்து, வாழ்க்கை நடத்தும் குணமுடையராகி, தலைவன் மீது அன்பு பூண்டு வாழ்க்கை நடத்தும் அயல் மகளிர், இவர் மனைவியர் போன்றவரே. இன்னும் சில பெண்கள் மணஞ்செய்து கொள்ளாது தமக்கு விருப்பமாணவரோடிருந்து மனைவியர் போலவே இல்லறம் நடத்தி வருதல் - குடும்பம் நடத்துதல் இதனை வலியுறுத்தும், தக்க பருவத்தே காதலுற்று முறையாகக் களவொழுக்கம் ஒழுகாமலும் மணஞ்செய்து கொள்ளாமலும் காமத்திற்காக மனைவியர் போல் இருந்து வருபவர். கிழத்தி – தலைவி – மனைவி காமக் கிழத்தி – காமத்திற்காகக் கொண்ட மனைவி, காமத்திற்காக மனைவி நிலையில் இருப்பவள் ஆவாள், அவர் இற்பரத்தையர் என்றும் கூறுவர். இல் - இல்லறம்

குடும்பம் இல்பரத்தையர் ஒருவனோடு கூடி மனைவியர் போலக் குடும்பம் நடத்தும் அயல் மகளிர் எனக் கூறிப்படுவர்.

### சேரிப் பரத்தையர்

இவர் தமக்கென ஒருவரை வைத்துக் கொள்ளாமல் விருப்பமுள்ள போது விரும்பியவரைக் கூடி வாழ்பவர். இவர் தலைவன் மீது அன்பின்றித் தலைவன் கொடுக்கும் பொருள் மீது அன்புடையவர். இவர் தாம் வள்ளுவர் கூறும் ‘வரைவின் மகளிர்’ ஆவர். இவர்கள் ஒரு சில பெருஞ்செல்வரால் உண்டாக்கப்பட்டு நாளடைவில் தாமாகவே உண்டாகிய ஒரு தனிக்கூட்டம் ஆவர். ஆடவரிற் சிலரும் முறையாக மணஞ்செய்து கொள்ளாமல் இம்மூவகை மகளிர் போலவே வாழ்க்கை நடத்தி வருதல் பண்டைய காலத் தொட்டு இன்றளவும் உண்டு.

**“கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்” (தொல்.புறம்:1022)**

சேரிப்பரத்தை என்பவள் சேரிக் குடியிருப்புகளில் வாழ்பவள். தனிப்பட்ட யாரொருவரையும் விரும்பாத இயல்பினராய் பலருக்கு உரியவர்கள் ஆவர். இதனை,

**“ஒழுக்க உடைமை குடிமை இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்” (குறள்:133)**

என்ற வள்ளுவர் கூற்றின் மூலம் அறியலாம்.

### தொல்காப்பியத்தில் பரத்தையர் பிரிவு

தொல்காப்பியம் பொருளீட்டலுக்கான ஆதாரமாக அரசுக்கான அடிப்படைத் தேவையாக அமையும் ஓதல், பகை, தூது என்பன காரணமாகத் பிரியும் பிரிவுடன் பொருள் வயிற் பிரிவு பற்றியும் பேசியுள்ளது. பரத்தையர் பிரிவு

தனியொரு பிரிவாகக் குறிப்பிடப் பெறவில்லை என்றாலும் கூற்று நிகழுதற்குரிய இடங்களைக் குறிப்பிடுகையில்,

**“பரந்தையி னகற்சிறிய பிரிந்தோட் குறுகி**
**யிரத்தலுந் தெளித்தலு மெனவிரு வகையோ**
**குரைத்திற் நாட்டங் கிழவோன் மேன்” (தொல்.அகம்.987)**

என அகத்திணையில் காட்டப்படுகிறது.

பல்வேறு பரத்தையரிடம் செல்வது ஆணின் இயல்பாக இருப்பதை அறிய முடிகிறது. பரத்தையர் உறவு பற்றி வரும் கொடுமை ஒழுக்கம் பேணா ஒழுக்கம், கிழவோன் கொடுமை, பிழைத்துவந்த கிழவன் எனும் சொற்கள் பெண்டிரின் மனநிலை வெளிப்பாடுகளாக இருப்பது மற்றொன்று. இந்தப் பிரிவு பெண்டிரால் பெறுதற்குரியதாகக் கருதப்பட்டிருப்பதையும் வெளிப்படுத்துகின்றன. இந்தப் பிரிவு

**“பரத்தை மறுத்தல் வேண்டியும் கிழத்தி**
**மடத்தகு கிழமை உடைமை யானும்**
**அன்பிலை கொடியை என்றலும் உரியாள்” (தொல்.கற்பு:1104)**

எனத் தோழியால் மறுத்துரைக்கப்பட்டிருந்த வெறுப்பை வெளிப்படுத்த வேண்டிய தோடு விலக்கப்பட வேண்டிய உறவு இது என்பதையும் புலப்படுத்துகிறது.

**பரத்தமைக்கான காரணங்கள்**

- ❖ நிலம் இல்லாமையும் ஏழ்மையும் அதனால் நகரங்களுக்குத் குடியேறுதலும் போரில் தோற்ற பிறநாட்டு மகளிர் கொண்டி மகளிராகக் கொண்டுவரப்பெற்றதும் பரத்தமை உருவாகக் காரணமாகின்றன.
- ❖ சிற்றூர்களிலிருந்து நகரங்களுக்குப் பெண்களைப் பரத்தைமைத் தொழிலில் ஈடுபடுத்துவதற்குப் பெரியதோர் அமைப்பே செயல்படுகின்றது.

- ❖ கற்பழிக்கப்பட்டவர்கள், கணவனால் கைவிடப் பட்டவர்கள் இளம்வயதில் விதவையானவர் ஆகியோர் பெரும்பான்மை பரத்தையராகின்றனர்.
- ❖ பெண் குழந்தைகளை விரும்பாதே பெற்றோர் அவர்களைப் பரத்தைமைத் தொழில் வியாபாரியிடம் விற்றுவிடுகின்றனர்.
- ❖ தன் குடும்பத்தைக் காப்பாற்ற ஒருசில பெற்றோர் பெண்களை இத்தொழிலுக்கு வற்புறுத்துகின்றனர்.
- ❖ வரதட்சணையும் ஒரு காரணம் என்கிறார் பி.கே. பால்.

**பரத்தைமை உருவான விதம்**

பரத்தையர் உருவாக பல்வேறு காரணங்கள் இருப்பினும் **"**சமயங்கள் ஓங்கிய காலகட்டத்தில் பக்திப் பாடல்கள். நீதி இலக்கியம் தோன்றிய மாதிரி காவியங்களும் தோன்றின. சமுதாயத்தில் பிராமணிய கலாச்சாரமும், வைதீகக் கடவுள் கோவில் வழிபாடுகளும் வலுவான நிலையை அடைந்த போது பரத்தைமை நிறுவனம் பேரளவில் கண்டிக்கப்படவில்லை. கோவில் வழிபாட்டோடு சம்பந்தப்பட்ட கன்னிப் பெண்களைக் கோவிற் பெண்டுகள் என்ற நிலையிலும் கோவில் தெய்வத்திற்குத் தானமாகத் தரப்பட்ட தேவராட்டியரையும் வைதீகம் ஏற்படுத்தியது. அரச வட்டாரத்தினர், பெருந்தனவந்தர், வேளாளர் ஆகியோர் தமது பக்தியின் அடையாளமாகத் தங்கள் பெண்களைப் பிராமணர்க்குத் கன்னிகாதானம் செய்த மாதிரி, கோவில் பணிவிடைக்காகக் கோவிலுக்குத் தானம் இட்டது குறித்த செய்திகள் காணப்படுகின்றன. காலப்போக்கில் தேவராட்டியர், தேவதாசியர், தளிச்சேரிப் பெண்டிர் எல்லோரும் மணமாகதவர்கள் என்ற விதிக்குப்பட்டு, 'பொட்டுக்கட்டுதல்' வழக்கத்திற்கு ஆளாகி உடைமையாளர்களின் மனைவிகளைப் போல ஆக்கப்பட்டார்கள்.**"**[9]

பெரும் கோவில்களை ஒட்டித் தேவதாசிகளின் தெருக்கள் சமீப காலம்வரை இருந்துள்ளன. பெருகப் பெருக தாசிகளின் எண்ணிக்கைகளும் பெருகின. பொதுமகள் கணிகை எனப்பட்டாள் கணிகை என்ற சொல் வடசொல்லின் திரிபாகும். இக்கணிகையர் உயர்குடியார்க்குரிய, சொல்வளமும் கலைவளமும் மிக்க தாசிகளாவர். இவர்கள் அரசிளங்குமரர், வணிகர் முதலானவர்களின் ஆதிக்கத்தில் இருந்தனர். ஆடல் பாடல் கலைஞர்கள் என்றால் இவர்களையே குறிப்பிட வேண்டும்.

**கட்டுப்பாடு இல்லாதவர் பரத்தையர்**

தந்தைவழிக் குடும்ப அமைப்பின் கற்புக் கோட்பாட்டுக்கு உட்பட்டவர் அல்லர் பரத்தையர். அவர்கள் குடும்பப் பெண்களின் ஒழுக்கத்தைக் காக்க உதவும் சாதனம் என்று குறிப்பிட்டதால் பரத்தையர்க்கு அவ்வொழுக்கம் தேவையற்றது. அதனால் வரையறை, கட்டுப்பாடு என்பன இல்லாதவர்களாகின்றனர். சங்க இலக்கியப் பரத்தையர் சமூக வாழ்வில் தங்கு தடையின்றி ஈடுபட்டனர். சங்க இலக்கியத் தலைவி ஆடல், பாடல் அறிந்தவளாகவும் தலைவனை மகிழ்விப்பவளாகவும் படைக்கப்படவில்லை, பரத்தையர் ஆடல் பாடல்களில் ஈடுபட்டிருக்கின்றனர். கலைத்துறையோடு தொடர்பில்லை. பலரும் அறியத் தலைவனுடன் புனலாடலில் ஈடுபட்டனர் என்றுரைக்கிறார் சிதம்பரம் பிள்ளை.

தலைவி கற்பொழுக்கம் உடையவள், அதனால் தன் கணவனைக் காக்கும் முயற்சியில் ஈடுபடுகிறாள் தலைவி அச்சத்திற்குப் பரத்தையரின் வரையறை, கட்டுப்பாடு இல்லாத தன்மையே காரணமாகும், பிறன் கணவனை நாடக்கூடாது என்ற கட்டுப்பாடு பரத்தைக்கு இல்லாததால் தான், தலைவி

செயல்பட நினைக்கிறாள். எனவே சங்க இலக்கியப் பரத்தையர் வரையறை, கட்டுபாடு இல்லாதவர் என்பது புலனாகிறது.

**பரத்தமை அங்கிகரிக்கப்பட்டது**

பரத்தமை என்பது சங்ககாலச் சமூகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு ஒழுக்கமாக இருந்துள்ளது. பரத்தையர் சேரிப்புறத்தில் வாழ்ந்து வந்தனர். பரத்தையர் சேரிக்கு மற்றொரு பெயர் 'ஏனாதிப் பாடியம்'. ஏனாதி என்பது அமைச்சர், சேனாதிபதியர் ஆகியோருள் சிறந்தவர்க்கு அரசன் வழங்கும் பட்டப்பெயர். ஏனாதி என்ற பட்டம் பெற்றவனால் உருவாக்கப்பட்டது. அவனது ஆணையினால் அமைக்கப்பட்ட பரத்தையர் சேரி 'ஏனாதிப்பாடியம்' எனப்பட்டது. இதனை,

> **"எல்லிழாய்! சேய் நின்று நாம் கொணர்ந்த**
> **பாணன் சிதைத்து, ஆங்கே**
> **வாய் ஓடி 'ஏனாதிப் பாடியம்' என்றற்றா'**
> **'நோய் நாம் தணிக்கும் மருந்து' (மருதக்கலி.81:16-18)**

என்ற பாடலடிகள் பரத்தையர் சேரி பற்றி எடுத்துரைக்கின்றன.

பெண்களது அழகுக்கும், அறிவுக்கும், செல்வச் செழிப்பிற்கும் ஏற்றார்போல் சங்ககாலப் பெண்களின் வாழ்க்கை அமைந்திருந்தது. சுாதாரணமாகப் பெண்களும் ஆண்களும் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற நிலையில் வாழ்ந்தனர் என்றாலும், பரத்தையுடன் வாழும் நிலையும் காணப்பட்டது என்பதற்குச் சான்றுகள் உள்ளன. பரத்தை நிலையை எதிர்ப்பதாகவோ தண்டனைக்குரியதாகவோ சொல்லப்படவில்லை. இதிலிருந்து அக்காலமக்கள் பரத்தமையை ஏற்றிருந்தனர் இதனை ஒட்டிய கருத்தினை,

**“மயக்குறும் மக்களை இல்லோர்க்குப்**
**பயக்குறை இல்லைத்தாம் வாழும் நாளே”   (புறம்:128)**

என்ற புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது.

**திருக்குறளில் பரத்தமை**

சங்க இலக்கியத்திற்கு அடுத்த காலக்கட்டகான சங்க மருவிய காலத்தில் வாழ்ந்த திருவள்ளுவர். முதன் முதலில் பரத்தமைப் பற்றிய கடுமையான எதிர்ப்பை வெளிப்படுத்துகிறார். ‘வரைவின் மகளிர்’ என்ற இயலின் மூலமாக பரத்தமையைக் கடுமையாகச் சாடுகிறார். ‘வரைவின் மகளிர் என்பது வரைமுறை இல்லாத வேசியர்கள்’ என நாமக்கல் கவிஞர் விளக்கம் தருகிறார்.

**பரத்தையர்கள் பொருளீட்டல்**

‘வேசி உறவு காசுக்குத்தான்’ என்ற பழமொழிக்கேற்ப பரத்தையர்கள் மற்றவர்களிடம் உள்ள பொருளுக்காகத் தான் அவர்களுடன் சிரித்துப் பேசி மகிழ்விப்பார்கள் என்பதை,

**“அன்பின் விழையார்பொருள் பிழையும் ஆய்தொடியார்**
**இன்சொல் இழுக்குத் தரும்”   (குறள்:911)**

அன்பு காரணமாக ஆசை கொள்ளாமல் பணத்திற்காக மட்டும் பாசாங்கு ஆசை காட்டும் விலை மாதர்களுடைய பேச்சு இனிமையாக இருந்தாலும் அதனால் துன்பமேயாகும் என்று கூறுகின்றார். இதேபோன்ற கருத்து நாலடியாரிலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அவை,

**“அங்கண் விசும்பின் அமரர்தொழப்படும்**
**செங்கண்மலாயினும் ஆகமன் - தன்மை**

**கொடுப்பதொன் நில்லாரைக் கொய்தளிர் அன்னார்**
**விடுப்பர்தம் கையால் தொழுது" (நாலடி:373)**

அழகிய இடமகன்றதேவர் உலகில் உள்ள தேவர்களால் தொழப்படும் சிவந்தகண்களையுடைய திருமாலைப் போன்றவராக இருப்பினும், பொருள் இல்லாதவரை, கொய்தற்குரிய இளந்தளிர் போலும் மேனியுடைய பொது மகளிர், தம் கையால் கும்பிட்டு அனுப்பிவிடுவர். என்ற நாலடியார் பாடலும் திருக்குறள் போலவே பொருளுக்காகவே பரத்தையர்கள் ஒருவனுடன் உறவாடுவார்கள் என்பதை அறியமுடிகிறது.

**பரத்தையர்களுடனான உறவு**

பரத்தையர்களுடனான உறவைப்பற்றி வள்ளுவர் பேய் பிடித்தவர்களை அந்தப்பேய் எப்படி ஆட்டிவைக்குமோ அப்படிப்பட்டது என்கிறார். இதனை,

**"ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப**
**மாய மகளிர் முயக்கு" (குறள்:918)**

பகுத்தறியும் அறிவு இல்லாதவற்களுக்கு வஞ்சகம் உள்ளவிலை மாதர்களுடைய உறவுவிட்டு விலக முடியாத பேய்பிடிப்பைப் போன்றது. மேலும்,

**"வரைவிலா மாணிழை யார்மென்றோள் புரையிலாப்**
**பூரியர்கள் ஆழும் அளது" (குறள்:919)**

வரண்முறையில்லாமல் புணர்கின்ற விலைமாதரின் உறவானது வேறு குற்றம் செய்யாமல் வெறும் முட்டால் தனத்தினால் விழுந்து தவிக்கின்ற நகரம் போன்றது என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். வள்ளுவர் பரத்தையைச் சாடுவதிலிருந்து எழுத்தாளர் பிரபஞ்சன் வேறுபடுகிறார். அவர் குறிப்பிடும் போது "பரத்தையர் மேல் மிக அதிகமாக வெறுப்பை உமிழ்ந்த அறநூல் ஆசிரியர்,

வள்ளுவராக இருக்கிறார். களப்பிரர் காலத்து இலக்கியவாதி அவர். களப்பிரர்கள் வைதீகத்துக்கு எதிரிகள் என்று ஒரு கருத்து நிலை பெற்றிருக்கிறது. வள்ளுவரும், பல இடங்களில் வைதிகத்திற்கு எதிரான நிலைப்பாடு எடுத்தபோதும், பரத்தையர் பால் சற்றும் அறமற்று நடந்து கொள்கிறார்."[10] திருக்குறள் மட்டுமல்லாது அறநூல்கள் பலவற்றையும் முழுமையும் பரத்தமையைச் சாடுவதைக் காணமுடிகிறது.

**பரத்தன்**

சங்க இலக்கியக் காலக்கட்டம் வரை ஒருவனோடு மட்டுமல்லாமல் பல ஆண்களோடு உறவுகொள்ளும் பெண்களையே பரத்தை என்ற சொல்லால் வழங்கப்பட்டு வந்தனர். பல பெண்களுடன் உறவுகொள்ளும் ஆண்களுக்கு எந்தவிதமான சொற்களும் பயன்படுத்தவில்லை இதனால் கோபமுற்ற வள்ளுவர் இத்தகைய குணமுடைய ஆண்களைப் பரத்தன் என்று கூறுகின்றார். இதனை,

**"பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொது உண்பர்**
**நண்ணேன் பரத்தறின் மார்பு" (குறள்:1311)**

பரத்தமை உடையவரே நின்னைப் பெண்ணியல்பு உடையவர் யாவரும் தம் கண்களால் மிகவும் உண்பர் அதனால் அவர்மிக விரும்பிய நின்மார் பிழை பொருந்தேன் என்ற குறளின் மூலமாகப் பரத்தையர்க்கு ஏதிரான பரத்தன் என்ற சொல்லை உருவாக்குகின்றார். பிறனில் விழையாமல் என்ற இயலின் மூலமாக ஆண்கள் தன் மனைவியைத் தவிரமாற்றானது மனைவியின் மேல் ஆசைப்படக் கூடாது என்பதனை வலியுறுத்துகின்றார். பரத்தையரைப் போன்று ஆண்கள் பல பெண்களிடம் உறவு கொள்வதைப் பரத்தன் என்ற சொல்லால் அழைக்கப்படுவதை அறியலாம்.

**பௌத்தமும் பரத்தையரும்**

பரத்தையர்குல வாழ்வைப் பௌத்தம் பல நிலைகளில் எடுத்துரைக்கிறது அவற்றில் "பரத்தையர் அரங்குகள் ஏறி பலரும் காணும் படியாகத் தம் ஆடலையும், பாடலையும் வெளிப்படுத்துவர். கயல்மீன்களாகிய சுருக்கு வலையால் ஆண்களைப் பிணிப்பர். தன்னை விரும்புவர் இல்லத்திற்குச் சென்று அவர்களிடம் இனிமையான முறையில் பேசி பொன், ஆடை, அணிகலன்களைப் பெறுவர். பின் அவர்களை விட்டு விடுவர்."[11] இப்படிப்பட்ட செயல்களைப் பரத்தையர்கள் கொண்டிருந்தனர்.

**"கன்னிக் காவலும் கடியின் காவலும்**
**நிறையின் காத்து பிறர் பிறர்க் காணாது**
**கொண்டோன் அல்லது தெய்வமும் பேணாப்**
**பெண்டிர் தம் குடியில் பிறந்தாள் அல்லள்"**

**(மணிமேகலை.18:98-102)**

என்றது மணிமேகலை. கன்னிப்பருவத்தில் காவல், காதலனை மணந்த பின்னர் காவல், தன்மை மணந்த கணவன் இறந்த பின்னர் காவல் ஆகியவற்றை மனத்தில் நிறுத்தி கற்பு நெறியைக் காத்துப் பிற ஆண்களைக் கண்ணால் பாராமல் கணவனைத் தவிர பிற கடவுளையும் தொழாதவர்கள் குல மகளிர் என்கிறார்.

ஆண்களைத் தன்வயப்படுத்தும் திறமையில் சிறந்து விளங்கும் தன்மையுடைய பரத்தையர் குலத்தில் பிறந்தவள் மணிமேகலை. அதன்வழிச் செல்லாமல் தன்னைப் பின்தொடரும் உதயணனைத் தன்வசப்படுத்தாமல் கற்புநெறியில் வாழும் குலமகளிரின் தன்மைக்கு மாறுவதாகப் பௌத்தம் எடுத்துரைக்கின்றது. பரத்தையர் தங்களது பரத்தைத் தன்மையிலிருந்து

விடுபட்டுக் குலமகளிராக வாழ வேண்டும் என்ற சிந்தனையைப் பௌத்தம் முன்வைக்கிறது.

**பரத்தையர்களின் புன்மை**

பௌத்த சமயம் பரத்தையர்களின் கீழ்மையான தொழிலாகக் கருதப்படுகின்ற செயல்களை உதறித் தள்ளிவிட்டு வெளிவர வேண்டும் என்ற நோக்குடன் செயல்பட்டது. அதனால் தான் கள்ளும் பொய்யும், காமமும், கொலையும், மனத்தில் தோன்றும் களவும் தீயனவென்று அறிஞர் நீக்கிய செயல்களைப் பரத்தையர்களும் நீக்க வேண்டும்.

**"கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்**
**உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை**
**தலைமையாக் கொண்ட நின் தலைமையில் வாழ்க்கை"**
**(மணிமேகலை.24:77-79)**

என்பதன் மூலம் பௌத்தம் காண விரும்பும் பரத்தையர் குல வாழ்வை அறியமுடிகிறது.

**பரத்தையின் நல் எண்ணங்கள்**

பரத்தையானவள் தன் தலைமகனை நோக்கி,

**"முழுவு முதற் பிணிக்கும் துறைவ ! நன்றும்**
**விழுமிதின் கொண்ட கேண்மை நொவ்விதின்**
**தவறும் : நற்கு அறியாய் ஆயின், எம் போல்,**
**ஞெகிழ் தோள், கலுழ்ந்த கண்ணர்**
**மலர் தீய்ந்தனையர், நின் நயந்தோரே" (நற்.315:8-12)**

என்பதை நற்றிணைப் பாடலின் மூலம் உன் தலைவி மீது பெரிதும் சிறப்பாகக் கொண்ட நட்பில் நுட்பமாகிய பிழை ஏதும் நேர்ந்து விடாதவாறு நன்றாக

அறிந்து நடக்க வேண்டும். அவ்வாறு நீ அறியாவிடில் உன்னை விரும்பும் மகளிர் என்னைப் போலவே தளர்ந்துபோன தோள்களையும், அழுத கண்களையும் உடையவராய் மலர்ந்த உடனேயே கருகிப்போன பூக்களைப் போல் ஆகிவிடுவர். இப்பாடலினை ஆய்ந்த வ.சுப. மாணிக்கனார் **"**ஊரறிய மணந்த நல்லாளைக் கைவிடும் நீ எம்போல்வாரைக் கைவிடாதிருப்பாய் கொல்? தவற்றை நன்குணர் மலரைக் கருகவிடாதே என்று தலைவனை ஒரு பரத்தை இல்லற நெறிப்படுத்துகின்றாள்**"**[12] என மனைவியை நினைக்காத தலைவனைப் பரத்தை இடித்துரைப்பதைக் காண்பதோடு, பரத்தையின் நல்எண்ணங்களையும் அறியமுடிகிறது.

பரத்தையொருத்தி தலைவியின் வீடு சென்று அவளிடம் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறாள்.

**"…………. யானும் நின்**
**சேரி யேனே அயல்இ லாட்டியேன்**
**நுங்கை யாகுவென் நினக்கு என தன்கைத்" (அகம்.386:10-12)**

என்னும் அவளுடைய கூற்றில், தலைவி தன்னைத் தங்கையாக மதிக்க வேண்டும் என்றும் ஆர்வம் வெளிப்படுத்துகின்றது. பரத்தை தலைவியின் கண்ணையும், நுதலையும் நீவுதல் கொண்டு தலைவியோடு முரண்படாது ஒத்து வாழ விரும்பும் தன்மையை உய்த்துணர முடிகிறது. மேலும் பரத்தையானவள் நானும் உன், சேரியைத் சேர்ந்தவள்தான் உன் வீட்டிற்கு அயல் வீட்டில் உள்ளேன். உனக்குத் தங்கை முறையும் ஆவேன் என்று கூறி மோதிரம் அணிந்த தன் மெல்லிய விரலால் அவளுடைய நெற்றியினையும். கூந்தலினையும் தடவினாள். மேற்கண்ட பாடலின் மூலம் பரத்தையின் நல்எண்ணங்களைக் காணமுடிகிறது.

**துணங்கை கூத்து**

மருத நிலங்களில் நடந்த விழாக்கள் பரத்தையர்க்கும் தலைவனுக்கும் நெருங்கிய உறவினை ஏற்படுத்தின. ஆடவர் பெண்டிரைத் தழுவித் துணங்கைக் கூத்தாடுவது வழக்கமாகயிருந்தது.

> **“மள்ளர் குழீஇய விழ வினானும்**
> **மகளிர் தழீஇய துணங்கை யானும்**
> **யாண்டும் காணேன், மாண் தக்கோனை**
> **யானும் ஓர் ஆடுகள மகளே : என்கைக்”  (குறுந்.31:1-4)**

என்றும் கூற்றின் மூலம் இதனை உணரலாம். தலைவரைக் கவற்தற் பொருட்டு இத்துணங்கை நாளைப் பரத்தையர் எதிர்பார்த்தனர் செல்வமிக்க ஆடவர் தம்மை ஒப்பனை செய்து கொண்டு பரத்தையருடன் ஆடினர். கலைகள் பண்டு பாணர் குடும்பத்திற்கும், பரத்தையர்க்கும் உரியனவாக இருந்தன, இந்நிலையிற் கலைநாட்டமும் காமநாட்டமும் கொண்ட ஆடவர் தம் மனைவிமார்களால் கொள்ளமுடியாத நிறைவினைப் பரத்தையர்களால் அடைந்தனர் என்பதை இனம் காண முடிகிறது. “நறுமணம் காமத்தைத் தூண்டும் ஆற்றல் மிக்கதாகும். காமவுணர்வு மிக்க ஆடவனொருவன் நறுமணப் பொருள்கள் செய்யும் ஒரு ஆலைக்குள் செல்லுகையில் காமத்தூண்டுதலுக்கு ஆளாகிறான் என்று உளவியலறிஞர் ஒருவர் கூறியுள்ளார்.”[13] பிறரைத் தம்பால் ஈர்ப்பதனை நோக்கமாகக் கொண்ட பரத்தையர் அதனை மிகுந்த அளவிற் பயன்படுத்தினர் எனத் தெரிகின்றது. பரத்தையின் உடற்தூய்மையாலும் நறுமணத்தாலும் தலைவன் கவரப்பட்டான் எனக் குடும்ப பெண்கள் குற்றம் சாட்டுவதைச் சங்க இலக்கியத்தில் காணலாம். தூயர் நறியர்நின் பெண்டிர் என்றும் குறிப்பினால் பரத்தையர்க்கும் நறுமணத்திற்குள்ள உறவு புலப்படுத்துகிறது. “தெருவெல்லாம்

மணங்கமழுமாறு பரத்தையர் கைவீசி நடந்து சென்றனர். சின்மலர் சூடுவது குடும்பப் பெண்டிரின் இயல்பாக இருந்தபோது மழைக்காலத்துப் பைம்புதல் போலக் கொண்டையில் பூவேய்ந்து செல்வது பரத்தையர் இயல்பாக இருந்தது."[14]

தலைவன் தானாகவே தன்னை விரும்பி அடைந்தான் என்று பரத்தை கூறுவதை,

**"தற்கெழு தகுவி**
**அணங்குறைப் பணைத்தோள் எல்வனை மகளிர்**
**துணங்கை நாளும் வந்தன அவ்வரைக்**
**கண்பொ மற்றதன் கண்ணவர்**
**மணங்கொனற் இவளும் மள்ளர் போரே" (குறுந்.364:3-7)**

என்னும் பாடல் வெளிப்படுத்துகிறது. சேரிப் பரத்தை, தன்னைப் புறங் கூறினாள் என்று அறிந்த காமக் கிழத்தி அவளொடு வெகுண்டு தனக்கும் தலைவனுக்கும் உள்ள அன்புப் பிணிப்பினையும் உள்ள உணர்வையும் உணருமாறு சூள் உரைப்பதாக இப்பாடல் அமைகிறது. தலைவனே வலிய வந்து துணங்கைக் கூத்தின் போது விரும்பியதாகக் கூறியுள்ளாள். சேரியில் திருவிழாக்காலங்களில் துணங்கைக் கூத்து ஆடும் முறை இருந்ததும் அதில் தலைவன் காமக் கிழத்தியை விரும்பி அவளோடு ஆடிய நிலையும் இப்பாடலின் மூலம் அறியமுடிகிறது.

**பரத்தை தலைவனிடம் கூற்று நிகழ்த்துதல்**

பரத்தை தலைமகளை எண்ணித் தலைவனிடம் கூற்று நடத்துவாள் அவை, .

**“கண்டிகும் அல்லமோ, கொண்க! நின் கேளே?**
**முண்டகக் கோதை நனைய**
**தெண் திரைப் பௌவம் பாய்ந்து நின்றோளே!”   (ஐங்.121:13)**

என்ற பாடல் பரத்தை, தலைவி குறித்துப் பேசியதற்குச் சான்று ஆகும். அவள் தலைவி குறித்து நகையாடிப் பேசுவதும் உண்டு. நெய்தல் நிலத்தின் தலைவனே, நின் நட்பாயினாளை யாம் நன்கு அறிந்துள்ளோம். இத்தவறு என் மாட்டில்லை. நீ இப்புலவியை நீங்க வேண்டும் என்று தோழிக்குத் தலைமகள் கூறப் புலவியை நீக்கக் கருதிய தோழி அவள் இளமை கூறி நகையாடிச் சொல்லியதூம் என்று விளக்கப்படுகிறது.

பரத்தையானவள் தன்னை ஏமாற்றிய தலைவனிடம் குறிப்பிடும் போழுது ,

**“தெறல் அருங் கடவுள் முன்னர்த் தேற்றி**
**மெல்லிறை முன்கை பற்றிய சொல்இறந்து**
**ஆர்வ நெஞ்சம் தலைத்தலை சிறப்ப, நின்**
**மார்பு தருகல்லாய் பிறன் ஆகினையே” (அகம்.396:7-10)**

என்று சூளுரைக்கிறாள். பரத்தை தலைவனுக்கு ஏதேனும் ஒரு வகையில் கட்டுப்பட்டவளாயினும் அவள் தலைவனை எதிர்த்துப் பேசுகிறாள். ‘இனியான் விடுக்குவென் அல்லோன்’என்று தனது கோபத்தைக் காட்டி சூளுரை செய்கிறாள். இங்ஙனம் சூளுரைப்பது தலைவிக்கு முற்றிலும் மறுக்கப்பட்ட ஒன்று. ஆனால் குடும்ப அமைப்பிலிருந்து விலக்கி வைக்கப்பட்ட பரத்தை, தலைவனை நோக்கிக் குரலுயர்த்திப் பேசுவதோடு மட்டுமின்றி தலைவனைக் கேள்வி கேட்பளாகவும் பரத்தையானவள் விளங்குகின்றாள். தலைவனோடு தனக்கிருக்கும் உறவின் நெருக்கம் காரணமாக அவனிடம் நகையாடும்

பரத்தையையும் தன்னுடன் நீராட வருமாறு உரிமையோடு வேண்டும் பரத்தையையும் காணமுடிகிறது.

**தலைவன் தன்னை வலியவந்து புணர்ந்ததை பரத்தை கூறுதல்**

காதற் பரத்தையிடம் இன்பம் நுகர்ந்த தலைவன் தன் வீட்டில் அவள் விரும்பிய வண்ணம் செயல்படுவதால், தலைவி தன்னைப் புறங்கூறுகின்றாள் எனக் கூறும் பரத்தை தன்னிலையில் தவறில்லை என்பது போல் தனது பாடலின் வழி குறிப்பிடுகிறாள். பரத்தையர் வீட்டில் பலவகை இன்பமும் வருந்தாது பெறுவார்கள் என்பதை உள்ளுரையால் காதற்பரத்தை வெளிப்படுகிறாள்.

தான் குறை கூறுவதற்குரியவள் இல்லை எனக் கூறும் காதற்பரத்தை, தான் குறை கூறுவதற்குரியவளாய்த் தலைவனுக்கு ஆகியிருந்தால் தண்ணிய பெருங்கடல் தன்னை வருத்தட்டும் என்கிறாள். வீட்டில் இருப்பவருக்குப் புறத்தில் நிகழும் செய்தி அறிதற்கு இயலா தென்னும் நினைவால் காதற்பரத்தை, மனையோள் மடமை என்கிறாள். இதனை,

**"கழனி மாஅத்து விளைந்துஉகு தீம்பழம்**
**பழன வாளை கதூஉம் ஊரன்**
**எம்இல் பெருமொழி கூறி தம் இல்**
**கையும் காலும் தூக்கத் தூக்கும்**
**ஆடிப் பாவை போல**
**மேவன செய்யும், தன்புதல்வன் தாய்க்கே" (குறுந்.8)**

என்ற பாடலில், வாளை நாகு தானிருந்த இடத்தே இருந்து முயற்சி சிறிதுமின்றி எளிதில் தீம்பழத்தைப் பெற்றதைப் போல் யாம் முயற்சி செய்யாமலேயே தலைவன் வலிய வந்து எம்மை நயப்பயாம் அவனோடு

உறைந்தோம் ஆதலால் நான் குறைக்கு உரியவள் அல்ல என்று காதற் பரத்தை கூறினாள். இதனால் பரத்தை தன்னுடைய சொல்லாற்றலால் தன்னிலையில் குறையில்லை என்கின்றாள்.

தலைவியைப் பற்றிக் கூறும் போது 'புதல்வன் தாய' என்று கூறித் தலைவியின் முதுமையைச் சுட்டுகிறாள். 'ஆடிப் பாவை' உவமையால் தலைவன் தலைவிக்கு அஞ்சி ஒழுகினான் என்கிறாள். தலைவன் பரத்தையை வசப்படுத்த, 'உன்னை பிரியேன்' என்று கூறுவதால் எம்மில் பெருமொழித் தலைவன் கூறினான் என்று பரத்தை கூறுவதைக் காணமுடிகிறது.

தன் தலைவன் புறம் போகாதவாறு பிணைத்துக் கொண்டாள் என்று தலைவி கூறியதை அறிந்த பரத்தை,

**"பொய்கை ஆம்பல் அணிநிறக் கொழுமுறை**
**வண்டுவாய் திறக்கும் தண்துறை ஊரனொடு**
**………….**
**நல்அகம் சேரின் ஒரு மருங்கினமே"** **(குறுந்.370:1-2,5)**

தலைவனுடன் இருக்கும் போது தனித்தனியே ஈருடம்பாயினும் கிடப்பின் ஈருடலும் ஓர் உடல் போல் ஒன்றியும் அவன் பிரிந்து தன்மனை சேரின் நான் தனியே என் உடலாகிய ஓர் உடலினைப் போன்று இருப்போம் அவ்வாறு இருத்தல் அவனது ஒழுகலற்றிற்கேற்ப அமைவதேயன்றி நாமாக வலிந்து மேற்கொள்வதல்ல. தலைவனை என்னோடு இணைத்துக் கொள்ளும் இயல்பாகும். என்று கூறும் பரத்தை தலைவனுடைய விருப்பப்படியே தான் இருப்பதாகக் கூறித் தன்னிலையில் தவறு ஏதும் இல்லை என

உணர்த்துகின்றாள். தலைவனுடன் தான் ஓருடல்போல் ஒன்றி இருப்போம் என் பரத்தை கூறுவதில் இருவரும் கொண்டிருந்த செறிவு உணரப்படுகிறது.

**பரத்தை தலைவியைச் சூளுரைத்துப் பேசுதல்**

இளம்பூரணர் - விருப்பமுடைய உள்ளத்தோடே புகுவோரது நலத்தின் பொருட்டு அகன்ற கிழவனைத் தனது தனிமை மிகவும் காட்டி அவன் மாட்டுச் செல்கின்ற நெஞ்சத்தை மீட்டு அருகப் பண்ணி அவன் விரும்பியவளை எதிர் பெய்து கொண்டு புணர்ச்சியை மறுத்த ஈரத்தின் கண்ணும் கூற்று, நிகழ்வதைக் காணலாம், இதனை,

**“மண் கனை முழவொடு மகிழ் மிகத் தூங்க,**
**தன் துறை ஊரன் எம் சேரி வந்தென**
**இன் கடுங் கள்ளின் அதை களிற்றொடு**
**நன் கலன் ஈயுமம் நாள் மகிழ் இருக்கை” (அகம்.76:1-4)**

என்ற பாடலில் என் பெண்மை தலைவியினது பெண்மை நலத்தை விடச் சிறந்தது. அதனால் தலைவன் தானே என்னை விரும்பி என்னோடு புணர்வதற்கு என் மனைக்கு வருகின்றான். அத்தகையவனை நான் ஆடல் பாடலால் என் வசம் செய்து கொண்டேன் எனத் தலைவி இகழ்ந்து கூறுவாளாயின் அவனை என்னிடமே இருத்திக் கொள்ள எண்ணியுள்ளேன் என பரத்தை தலைவிக்குச் சூளுரைத்தாள்.

பரத்தை மிகுந்த நம்பிக்கையுடன் தலைவிக்குப் போட்டியாகப் பல்வேறு செயலினைக் கூறுவதாக அமைந்த பாடலில்,

**“கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சி**
**……………….**
**வெம்போ,**

**நுகம்படக் கடக்கும் பல்வேல் எழினி**
**முனை ஆன் பெருநிரை போல,**
**கிளையோடு காக்க, தன் கொழுநன் மார்பே" (குறுந்.80:1-5-7)**

உவமை வாயிலாக எழினி தனக்குரிய ஆநிரையைக் கைக்கொண்ட பகைவனிடமிருந்து அதனை மீட்டுக் காத்ததைப் போல தலைவி தனக்குரிய தலைவனுடைய மார்பைக் கைக்கொண்ட என்னிடத்திலிருந்து அதனைப் பெற்றுக் காப்பாளாக என்று கூறுவதில் பரத்தையின் தன்னம்பிக்கையும் சொல்திறனும் திறப்பட தெரிகின்றது. தலைவி தன்னைக் குறைகூறினாளெனக் கேட்ட பரத்தை சினங்கொண்டு யான் நீர் விளையாடச் செல்வேன். தலைவன் தானே என் வயப்பட்டு வருவான். அவனை வராமல் காக்கும் தன்மை தலைவியின் பால் உளதாயின் அவள் காப்பாளாக என நகைப்புடன் பரத்தை கூறினாள்.

தலைவி தன்னைப் புறங்கூறினாள் எனக் கேட்டுப் பரத்தை தலைவிக்குப் பாங்காயினர் கேட்கும் வண்ணம் தன்னிலைப் பாட்டைக் கூறும் போது அவளது செயலினைக் காணமுடிகிறது. இதனை,

**"கணைக் கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு**
**துணர்த் தேக் கொக்கின் தீம்பழம் கதூஉம்**
**……………**
**அனையேம் மகிழ்நற்கு யாம் ஆயினம் எனினே!" (குறுந்.164:1-2-6)**

என்ற பாடல் தன் கூந்தலில் ஆம்பல் பூவைச் செருகி வெள்ளம் வரும் பெரிய நீர்த் துறையை விரும்பிப் புனல் விளையாடச் செல்வோம் நான் தலைவனுடன் புனல் விளையாடுவதற்குத் தலைவி அஞ்சுவாளானால் தன் தலைவன் மார்பை பாதுகாக்கட்டும் என பரத்தைக் கூற்றிலிருந்து தலைவன் என்னுடைய

விருப்பப்படியே ஒழுகுவானே அன்றித் தலைவி விரும்பியவாறு ‘ஒழுகான்’ என்னும் பரத்தையின் சொல்லாடல் குறிப்புப் பொருளாக அமைகிறது.

தலைவன் காதற்பரத்தையுடன் கூடி மகிழ அதனை,

**“பூத்தனள் நீங்கு எனப் பொய் ஆற்றால் தோழியர்**
**தோற்றம் ஓர் ஒத்த மலர் கமழ் தன் சாந்தின்**
**நாற்றத்தின் போற்றி, நகையாடும் போத்தந்து**
**இருங் கடற்கு ஊங்கு இருவரும் யாறு எனத் தங்கான்,**
**………..**
**பூத்தனள் நங்கை பொலிக! என நூனுதல்**
**வாய்த்தன்றால் - வையை வரவு” (பரி.16:24-31)**

பரிபாடலில், தன் மனைவியின் வளையலைப் பரத்தைக்கு அளித்த தலைவன் பரத்தையோடு ஒருங்கே இருந்த என் வளையலைப் பார்த்த ஆயத்தார் தலைவிக்கு இவள் மாற்றாள் போலும் எனக் கூறியதைக் கேட்டத் தலைவன் நாணி நின்றான். வையை ஆற்றில் நீராடும் மகளிருள் காதற்பரத்தை ஒருத்தியின் ஆயத்தார் அவளைச் சூழ்ந்து கொண்டனர் மூங்கிலால் ஆகிய துருத்தியினால் அரக்கு நீரை வீசினர். காதற் பரத்தை தன் குரும்பையைப் போன்ற மார்பகங்களின் மேலே பட்ட அவ்வரக்கு நீரைத் துடையாதவளாய்த் தனது பெரிய மேலாடையினால் ஒன்றி நின்றாள். அப்போது பரத்தை என்னை நீங்கள் தொடர்ந்து வருவதற்கான காரணம் என்னவென்று எதிர்த்து வினவினாள். இவ்வாறு எதிர்த்து நின்றலைக் கண்ட தலைவி மனம் திகைத்து ஒன்றும் பேசாமல் நின்றாள்.

ஆயத்தாருள் ஒருத்தி அப்பரத்தையைப் பலவாறாக ஏசினாள். ஆய்த்தார் பேசியதைக் கேட்ட பரத்தை தலைவியிடம் வசைமொழி கூறலானாள். அதற்குத்

தலைவி உன் பெருமையைப் பேசாமல் இவ்வளையலும், முத்துமாலையும் எவ்வழி வந்தது என்று கேட்க அதற்குப் பரத்தையானவள் உன் கணவன் இவற்றை எனக்குக் கொடுத்தான். அது மட்டுமல்ல, நாளை உன் கால் சிலம்மையும் கழற்றித் தருவான் அதனால் நான் கலவி அல்லேன். உன் கணவனே கள்வன். அதனைச் சென்று பற்றிக் கொள் என்று கூறினாள். "பரத்தமை என்பது இல்லறத்தை மேம்பாடு அடையச செய்யாமலும் சமூகச்சீர் கேட்டினையும் எற்படுத்துகிறது. இந்தப்பரத்தமை ஒரு சிலரின் தீய ஒழுக்கங்களின் வித்தாக அமைகிறது. சங்க இலக்கிய காலக்கட்டங்களில் பரத்தமைக்கு எதிரானகுரல் வலுப்பெறவில்லை என்றாலும் பரத்தையருடனான வாழ்க்கை கூடாது என்பதை அவ்வப்போது ஒருசில புலவர்கள் சுட்டிக் காட்டியிருக்கின்றனர்."[15]

**இற்பரத்தை புதிய பரத்தையைப் பழித்தாள்**

தலைவன் புதிதாகப் பரத்தை ஒருத்தியை விரும்பினான் அப்பரத்தை, பழைய பரத்தையான இற்பரத்தை தன்னைப் பழித்தாள் எனக் கேள்விப்பட்டு அவள் தோழிமார் கேட்குமாறு சொல்லியது.

**"நுண்செயல் அம்குடம் இரீஇ பண்பின்**
**மகிழ்நன் பரத்தையை பாடி, அவிழ்இணர்க்**
**தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்**
**தேர்தர தந்த நேர்இழை மகளிர்**
**ஏசுப என்ப, என்நலனே அதுவே"** **(அகம்.336:7-12)**

என்ற பாடல் அடிகளின் மூலம் பரத்தை பிற பரத்தையரை ஏசும் நிலையை வெளிப்படுத்துவதோடு அப்பரத்தையே தலைவனின் பரத்தைமைப் பெருக்கத்தினை ஏசுவாதகவும் உள்ளது. இது தலைவனின் பரத்தமை

மோகத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது. “ஆடவர் தமது வண்டு மனத்துக்கு வடிகாலாகப் பரத்தையரை நாடினர். கிரேக்கரது பாலியல் உறவும் இதேமுறையில் அமைகின்றது”[16] என்று சிதம்பரம் பிள்ளை எடுத்துரைக்கிறார்.

கணவன் தன்னைப் பிரியும்போது கண்ணீர் விட்டழும் குடும்பப் பெண் போலவே பரத்தையும் அழக் காணலாம்.

**“செல்லல் மகிழ்ந! நிற் செய்கடன் உடையென்மன்**
**கல்லா யானை கடிபுனல் கற்றென,**
**மலிபுனல் பொருத மருதுஓங்கு படப்பை**
**ஒலிகதிர்க் கழனி, கழாஅர் முன்துறை” (அகம்.376:1-4)**

அத்தி என்பான் சிவந்த காலடியில் கழலினையும் வயிற்றில் மணியினையும் கட்டிக் கொண்டு கஞ்சதாளம் ஒலிக்கப் புனலின்கண் விரும்பி ஆடினான். அவனது அழகினை விரும்பிய காவிரிப் பெண்ணாள் அவனை கவ்விக்கொண்டு கடலிற்சென்று மறைந்து கொண்டாள், அதுபோன்று, சேரிப்பரத்தை நின்னைக் கவர்ந்து சென்றாள். அதுகொண்டு யாம் நும்மை வெறுத்தோம் இல்லை அப்படியிருந்தும் எம் நெற்றியில் பசலை படர்ந்து இருப்பதைக் காண்பாயாக என காம இன்பம் கருதித் தலைவனால் வரைந்து கொள்ளப்பட்ட காதற்பரத்தை, சேரிப் பரத்தையிடம் அவன் நட்புக் கொண்டுள்ளான் என அறிந்து தன் இல்லம் வந்த போது அவனுடன் ஊடிச் சொல்லியது.

**காமமும் பரத்தையின் நாணமும்**

தலைவன் தன் மனைவியுடன் கள்ளுண்டு காமம் நுகர்தல் பற்றி அகத்திணையிலக்கியம் கூறவில்லை. ஆனால் பரத்தையரோடு வாழ்ந்த காம

வாழ்க்கையில் கள்ளுக்கும் உரிய இடமிருந்ததை உணரத்தக்கதாகும். தலைவன் மகிழ்த்துணைச் சுற்றமோடு மட்டு மாந்தியும், பரத்தையின் மணங்கமழும் தோள் மணந்தும் வாழ்ந்தான் என வேறோரு பரத்தை கூறக் காணலாம்.

**“ஒருத்தி இறந்த களிபான் இதழ் மறைந்த கண்ணன்**
**பறந்தனை மூசக் கடிவாள் கடியும்**
**இடம் தேற்றாள் சோர்ந்தனள், கை**
**ஆங்க, கடிகாவில் கால் ஒற்ற, ஒல்கி ஓசியாக்”**

**(கலி.92:4851)**

என்னும் கலித்தொகைப் பாடலின் மூலம் பரத்தையானவள் கண்ணை விழிக்க இயலாத அளவிற்குக் கள்ளுண்டு மயங்கியமை உணரப்படுகிறது. கள்ளுக்கும் காமத்துக்குமுள்ள உறவு இதனால் விளங்குகிறது.

அக இலக்கிய மரபில் பேசப்படும் பெண்களான நற்றாய், செவிலி, தோழி தலைவி, ஆகியோருள் ஓரளவாவது பேசுபவள் தோழி. அவளும் பலவிதமான கட்டுப்பாடுகளுக்கிடையே பேசுகிறாள். அவர்களிடம் இருந்து வேறுபட்டு ஒலிக்கும் ஒற்றைக் குரலாய்ப் பரத்தையின் குரல் ஒலிக்கிறது. நாணம் பெண்ணுக்கு மட்டும் வரையறுக்கப்பட்ட விதிகளுள் முதன்மையானது. எனவேதான் உயிரைவிட நாணத்தை வலியுறுத்திய பாடல்கள் இயற்றப்பட்டன. ஆனால் பரத்தை,

**“கடிஇலம் புகூஉம் கள்வன் போல,**
**சாஅய் ஒதுக்கும் துறைகேழ் ஊரனொடு**
**ஆவது ஆக! இனிநாண் உண்டோ?**
**வருகதில் அம்மஎம் சேரி சேர!” (அகம்.276:4-6)**

என்று நாணத்தைத் துச்சமாக எண்ணிப் பேசுகிறாள். இங்கு நாணத்தை உயர்நிலையாய்க் கருதும் தலைவிக்கு எதிர்நிலையில் வைக்கப்படும் பரத்தையின் வாழ்வில் நாணம் பொருளற்ற மாற்றமாக அமைகிறது.

**காமத்திற்குச் செருக்கினைக் கொடுப்பது கள்**

"ஊடுதல், புணர்தல், பிரிதல் என்பன காமத்தின் அடித்தளம் காமம் எல்லோருக்குள்ளும் ஒளிந்திருப்பது"[17] இதனைப் பாரிபாடல்,

**"நாம்ஆர் ஊடலும் நட்பும் தணப்பும்**
**காமமும் கள்ளும் கலந்து உடன்பாராட்டத்**
**தாம் அமர் காதலரொடு ஆடப் புணர்வித்தல்**
**பூ மலி வையைக்கு இயல்பு" (பரி.20:108-111)**

என்கிறது. காமத்தையும் அதற்குச் செருக்கினைக் கொடுக்கும் மதுவையும் ஒன்றாகக் கூட்டி மகளிர் யாவரும் பாராட்டும்படி தம் காதலரோடு மகிழச் செய்வதையே வையை விரும்புகிறது. கள்ளுண்ணல் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று. கள் காமத்தை மிகுவிக்கும் தன்மை உடையது. என்பதை,

**"முற்றா நறுநறா மொய்புனல் அட்டிக்**
**காரிகை நீர் ஏர் வயல், காமக் களி நாஞ்சில்**
**மூரி தவிர முடுக்கு முது சாடி" (பரி.20:52-54)**

பரிபாடல் காரிகை நீர்மையை உடைய வனப்பாகிய வயலில் முதிராத நறுமணம் மிக்க கள்ளாகிய வளமிக்க நீரைப் பாய்ச்சி காமவெறியாகிய கலப்பையை நாட்டி எம்முடைய எருது சோம்பலின்றி உழுகின்ற பழைய படைச்சாலே என்று குறிப்பிடப்படுகின்றது. உழவுத் தொழில் செய்வதற்கு நீர் வேண்டுவது போலக் காமஉழவுக்கு முற்றாத இளங்கள் தேவைப்படுகிறது.

சங்க கால வாழ்வில் கள்ளுண்ணல், பரத்தையரோடு கூடுதல் இயல்பாகக் காணப்படுகிறது. ஊடலும், கள்ளுண்ணலும், காமமும் கூடல் இன்பத்திற்கு நிலைக்களனாக அமைகின்றது. ஆனால் வள்ளுவர் பரிபாடலில் இருந்து வேறுபட்டு கள் உண்ணுதலைக் கடுமையாகச் சாடுகிறார். இதனை,

**“அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம்” (குறள்:706)**

என்கிறார் வள்ளுவர். காம வயப்பட்டவர் நெஞ்சமும், கள் குடிப்பவர் நெஞ்சமும் முகத்தின் வழியாக உண்மையை உணர்த்தி விடும். கள் குடிப்பது நாகரிகமான செயல் அல்ல. அதை மறைக்கப் பிறர் அறியுமாயின் நாணித் தலை கவிழ்வர். கள்ளை ஒத்ததான காமம் ஊடலைத் தணிவிக்கும் மருத்தாகக் காணப்படுகின்றது. பிறிதோர் பாடலில் வள்ளுவர்,

**“ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்” (குறள்.1330)**

காதலுக்கு இன்பமாவது ஊடுதல், கூடித்தழுவப்பெறுதல் அவ்வூடலுக்கு இன்பம் என்றபடி “ஊடியும் உணர்ந்தும் கூடியும் இன்புற்றும் வாழவேண்டும்”[18] என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். ஊடலைத் தணிக்கும் ஒரே மருந்து கூடி இன்பம் பெறுவதே என்பதை உணரமுடிகிறது.

**தொகுப்புரை**

- ❖ பரத்தமை என்பது சங்ககாலச் சமூகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஓர் ஒழுக்கமாக இருந்துள்ளது. பரத்தையர் சேரிப்புறத்தில் வாழ்ந்து வந்தனர். பரத்தையர் சேரிக்கு மற்றொரு பெயர் ஏனாதிப் பாடியம். ஏனாதி என்பது அமைச்சர், சேனாதிபதியர் ஆகியோருள் சிறந்தவர்க்கு அரசன் வழங்கும் பட்டப்பெயர்.
- ❖ ஆடவர் பரத்தையிடம் செல்லும் வழக்கம் காணப்பட்டது. பரத்தையர் சேரியில் வாழ்ந்தனர். மகளிர் பரத்தமையைக் கண்டித்தனர். பரத்தமையிடம் சென்ற தலைவனிடம் தலைவி ஊடல் கொண்டாலும் மீண்டும் ஏற்றுக் கொள்ளும் மனநிலை உடையவராக விளங்கினர்.
- ❖ பிற பெண்கள் - பரத்தையொடு தலைவன் கொள்ளும் தொடர்பைப் புற ஒழுக்கம் என்றும் போற்றா ஒழுக்கம் என்றும் இடித்தும், இழித்தும் உரைத்துள்ளனர்.
- ❖ பரத்தையர் ஆண்களை ஈர்க்கும் வகையில் தம்மை ஒப்பனை செய்து கொள்வார்கள்.
- ❖ புனலாட்டு, பொழில் நுகர்ச்சி, துணங்கை ஆகியவை பரத்தைமையோடு இணைந்த கூறுகளாக இருந்தன. இசைகள், நறுமணம், கவர்ச்சி ஆகியவை காமத்தைத் தூண்டும் கருவிகளாக இருந்தன.
- ❖ தலைவன் பரத்தைமையை நாடிச் சென்று திரும்பும் போது தலைவி ஊடல் கொள்பவளாகவும், தலைவன் பணிவினால் தலைவியின் ஊடல் தணிப்பவளாகவும் காட்டப்படுகிறது.

- பரத்தையர் எப்பொழுதும் இளமை நலம் குன்றாமல் அழகுச் சிறப்பில் செருக்குற்று இருப்பவர்களாகக் காட்டப்பட்டுள்ளனர்.
- தாய்த் தெய்வ வழிபாட்டை வீழ்த்தி ஆணாதிக்க மதங்களைத் தோற்றுவித்த ஆண் வர்க்கத்தினர் சமயச் சடங்குகளின் மூலமாகவும் பெண்ணை அடிமைப்படுத்தித் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தியுள்ளதைப் பாடலால் அறியமுடிகிறது.
- சமூகத்தில் பெண் பலமுனைத் தாக்குதலுக்கு ஆளாகியிருப்பதற்கு ஆணாதிக்கம் ஒரு காரணமென்றால் பெண்ணடிமைத்தனமும் ஒரு காரணமாகும்.
- மருத நிலத்தின் பொருளாதார வளர்ச்சியும், நாகரிக முன்னேற்றமும் ஆடம்பர வாழ்க்கையும் பரத்தைமை வளரக் காரணமாக அமைந்துள்ளன.
- சங்க கால வாழ்வில் கள்ளுண்ணல், பரத்தையரோடு கூடுதல் இயல்பாகக் காணப்படுகின்றன.

## சான்றென் விளக்கம்

1. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.127.
2. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு, ப.321.
3. கு. சங்கீதா, சங்க இலக்கியத்தில் பரத்தையர் கூற்று, ப.4.
4. மேலது, ப.7.
5. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.130.
6. அரங்கமல்லிகா, சங்க இலக்கியத்தில் தினையும் பெண் அடையாளமும், அரிமா நோக்கு 4:3 அக்டோபர் 2010, ப.18.
7. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.128.
8. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும், தொல்காப்பியமும் தமிழ் சமூக உருவாக்கமும், பக்.23,24.
9. கு. சங்கீதா, சங்க இலக்கியத்தில் பரத்தையர் கூற்று, ப.15.
10. உயிர்மை, ஜீலை 2011, ப.64.
11. கவிஞர் சுரா, (தொ. ஆ) செந்தமிழ் ஆய்வுக் கோவை, 2013, பக்.665-666.
12. வ.சுப. மாணிக்கம, தமிழ்க் காதல், ப.243.
13. கு. சங்கீதா, சங்க இலக்கியத்தில் பரத்தையர் கூற்று, ப 57.
14. மேலது, ப.51.
15. திருக்குறள் பன்னாட்டுக் கருத்தரங்க ஆய்வுக் கோவை, 2016. ப.551.
16. கே.பி.அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப.207.
17. செ. மகேஸ்வரி, பரிபாடலில் சமூகம், ப.60.
18. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.50.

## துணைநூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்

1. தட்சிணாமூர்த்தி,அ.(உ.ஆ) - ஐங்குறுநூறு (மூலமும் உரையும்), நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி)லிட், 41-பி, சிட்கோ புக் ஹவுஸ் (பி)லிட், அம்பத்தூர், சென்னை. 2004.

2. நாகராசன்,வி. (உ.ஆ) - குறுந்தொகை (மூலமும் உரையும்), நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி)லிட், 41-பி, சிட்கோஇண்டஸ்டிரியல்எஸ்டேட் அம்பத்தூர், சென்னை, 2004.

3. பாலசுப்பிரமணயன், கு.பே. - நற்றிணை (மூலமும்உரையும்), நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி) லிட் , 41-பி, சிட்கோஇண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை. 2004.

4. விசுவநாதன், அ. (உ.ஆ) - கலித்தொகை (மூலமும் உரையும்), நியூ செஞ்சரி புக் ஹவுஸ்(பி)லிட், 41-பி, சிட்கோ புக் ஹவுஸ்(பி)லிட்., அம்பத்தூர், சென்னை. 2004.

5. செயபால், இரா. (உ.ஆ) - அகநானூறு (மூலமும் உரையும்) நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ புக் ஹவுஸ் (பி) லிட்., அம்பத்தூர், சென்னை, 2004.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

1. அரங்க மல்லிகா - தமிழ் இலக்கியமும் பெண்ணியமும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல்எஸ்டேட், அம்பத்தூர், சென்னை, 2002.

2. அன்பு மீனாள், பழ. - இலக்கியத் தரவுகளில் மகளிர் பதிவுகள், தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி) லிட், 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை. 2004.

3. இரவிச்சந்திரன், திகு. - சிக்மண்ட் ப்ராய்டு –
உளப்பகுப்பாய்வு அறிவியல்,
அலைகள் வெளியீட்டகம் கோடம்பாக்கம்,
சென்னை-24.
2005.

4. இரவிச்சந்திரன், தி.கு. - ∴ப்ராய்ட் யூங் லங்கான் -
அறிமுகமும் நெறிமுகமும்
மணி அச்சகம்,
சென்னை – 5,
2007.

5. இராமலிங்கம், பாஞ். - மானிட உளவியல்
சாரதா பதிப்பகம்,
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை–14.
1989.

6. இளம்பூரணனார் (உ.ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம்,
சாராதா பதிப்பகம்,
சென்னை.
2005.

7. கண்ணதாசன் - இலக்கியத்தில் காதல்,
வானதி பதிப்பகம்,
13, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை – 17.
1974.

8. கண்ணதாசன் - திருக்குறள் காமத்துப் பால்,
கண்ணதாசன் பதிப்பகம்,
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர், சென்னை,
1987.

9. கலியாணசுந்தரம், தெ. - சங்க இலக்கிய அகப்பாடல்களில்
உணர்வுப் போராட்டம்
வாணி பதிப்பகம்,
402, அழகேசன் சாலை,
கோவை – 11.

10. காஞ்சனா. இரா. - இலக்கியமும் உளவியலும்
மறுபதிப்பு,
தி முல்லை அச்சகம்,
வாடிப்பட்டி,
மதுரை.
2000.

11. சண்முகம், இராம. - சங்க இலக்கியங்களில் வரைவு கடாதலும் அறத்தொடு நிற்றலும், சரவணா பதிப்பகம், மதுரை. முதற்பதிப்பு 1992.

12. சாமிநாதையர்,உ.வே.(உ.ஆ) - புறநானூறு மூலமும் பழைய உரையும், கபீர் அச்சுக் கூடம், சென்னை, 1963.

13. ….. - குறுந்தொகை மூலமும் உரையும், மகாமகோபாத்தியாய உ.வே.சாமிநாதையர் நூல்நிலையம், 2, அருண்டேல், கடற்கரைச்சாலை, பெசண்ட் நகர், சென்னை-90. 1937.

14. சிவசங்கரன்.வ. - திருக்குறள், பொதிகைப் பதிப்பகம், 60, பத்திரியன் தெரு, சென்னை - 600 001.

15. சுப்பிரமணியன்,கா. - சங்க காலச் சமுதாயம்,
நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
அம்பத்தூர்,
சென்னை - 600 098.

16. செல்லப்பா,எஸ்.ஏ. - பாலியல் வாழ்வின் மறுபக்கம்
விகடன் பிரசுரம்
757, அண்ணா சாலை,
சென்னை.
2012.

17. செல்வராஜ்.பா. - பாலியல் மனோதத்துவம்
மதி நிலையம்
எண்.2/3, நான்காவது வீதி,
கோபாலபுரம்,
சென்னை.
2012.

18. சோமசுந்தரம், ச. - திருக்குறளில் பாலியல்,
கோமுகி பதிப்பகம்,
7, தங்கையா தெரு, காந்தி நகர்,
நாகல்கேணி,
சென்னை.

19. சோமசுந்தரனார்,பொ.வே. (உ.ஆ) - பரிபாடல் முதற்பதிப்பு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை – 1, 1975.

20. தமிழண்ணல் - தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், மீனாட்சி புத்தக நிலையம், மயூரா வளாகம், 48, தானப்ப முதலி தெரு, மதுரை. 2008.

21. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - தொல்காப்பியம் எழுத்ததிகாரம் சாரதா பதிப்பகம், சென்னை, 2009.

22. பத்மஹரி - பாலியல், இன்றைய ஆய்வுகள் கூறுவது என்ன?, பிளாக் ஹோல் மீடியா பப்ளிகேஷன் லிமிடெட் எண்.7/1,3-வது அவென்யு, அசோக் நகர், சென்னை, 2010.

23. பஞ்சாங்கம்,க. - புனைவுகளும் உண்மைகளும்
திறனாய்வுக் கட்டுரைகள்,
காவ்யா பதிப்பகம்,
16, இரண்டாம் குறுக்குத் தெரு
டிரஸ்ட்புரம்,
கோடம்பாக்கம்,
சென்னை.

24. பாண்டியன்.ஐ.க. - ஔவையின் உளவியல்& ப்ராய்டு,
லெக்கானின் மன அலசல்,
கார்முகில் பதிப்பகம்,
129-A, பாலம் ஸ்டேசன் ரோடு,
கேரிப்பாளையம்,
மதுரை – 2,
2003.

25. புலவர் குழந்தை - தொல்காப்பியர் காலத் தமிழர்
சாரதா பதிப்பகம்
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை,
சென்னை-14.

26. மகேஸ்வரி, செ. - பரிபாடலில் சமூகம்.
நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி) லிட்.
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்,
சென்னை.
2013.

27. மணிவேல், மு. - கைக்கிளைக் காதல்,
பதிப்புத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
1992.

28. மரியசெபஸ்தியான்,அ. - தமிழரின் பாலியல் முறைமைகள்,
நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி) லிட்
அம்பத்தூர்,
சென்னை.
2013.

29. மாணிக்கனார், வ.சுப. - தமிழ்க் காதல்,
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்,
2009.

30. மாதையன்,பெ. - சங்க இலக்கியத்தில் குடும்பம்
நியூ செஞ்சரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை.
2010.

31. மாத்யூ வெல்லூர்,பி.எம். - பாலியல் கலைக் களஞ்சியம்,
காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்.,
669 கே.பி. சாலை,
நாகர்கோவில்.
2006.

32. மாணிக்கம்,அ. - திருக்குறள்,
மறுபதிப்பு,
நெல்லை பிரிண்டர்ஸ்,
சென்னை.
2000.

33. முத்துச்சிதம்பரம் - தமிழக நாட்டுப்புறவியலில் பெண்கள்,
யாதுமாகி பதிப்பகம்,
மீரா.ஃ.பைன் ஆர்ட்ஸ்,
சிவகாசி,
1998.

34. முருகேசபாண்டியன்,ந. - அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்,
காலச்சுவடு பதிப்பகம்,
நெல்சன் மாணிக்கம் ரோடு,
அமைந்தகரை,
சென்னை.
2008.

35. ராஜ்கௌதமன் - பாட்டும் தொகையும் தொல்காப்பியமும்,
தமிழ்ச் சமூக உருவாக்கமும் தமிழினி,
67, பீட்டர்ஸ் சாலை,
ராயப்பேட்டை, சென்னை.
2006.

36. வையாபுரிப் பிள்ளை (தொ.ஆ) - சங்க இலக்கியம் பாட்டும் தொகையும்
பாரிநிலையம்,
சென்னை,
1967.

37. ஜெகதீசன், ஆ. - சங்க இலக்கிய மதிப்பீடுகள்,
ராமையா பதிப்பகம்
ஜி–4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு
ராயப்பேட்டை,
சென்னை-20.

**அகராதிகள், கலைக்களஞ்சியங்கள்**

1. இராஜேந்திரன், ச. - தற்காலத் தமிழ்ச் சொற்களஞ்சியம்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
2001.

2. ………………… - கழகத் தமிழ் அகராதி
கழக வெளியீடு,
அப்பர் அச்சகம்,
சென்னை - 600 108.

3. …………………. - மெய்யப்பன் தமிழ் அகராதி,
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை - 600 108.

4. கௌமாரீஸ்வரி,எஸ். - கௌரா தமிழ் அகராதி,
சாரதா பதிப்பகம்,
சென்னை.
2006.

5. சிங்கார வேலு, ஆ. - அபிதான சிந்தாமணி,
சாரதா பதிப்பகம்,
சென்னை.

6. ………………….. - வாழ்வியற் களஞ்சியம்,
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்.

**ஆய்வேடுகள்**

1. அனுராதா, ந. - தமிழ் புதினங்களில் பாலியல் வன்முறை,
காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
2009.

2. சங்கீதா, கு. - சங்க இலக்கியத்தில் பரத்தையர் கூற்று,
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்.
2014.

3. சந்திரசேகர், இரா .- சங்கப் பாடல்களில் பாலியல்,
காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
2005.

4. சிந்துஜா, சீ. - சங்க அக இலக்கியத்தில் உடன்போக்கு,
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,
பாரதியார் பல்கலைக்கழகம்,
கோயம்புத்தூர்.
2012.

5. செல்லத்தாய், கெ. - சங்கப் பாடல்களில் கலைநிகழ்வும் காதல் வாழ்க்கையும்,
காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
2006.

6. முத்துக் கருப்பன், ஆறு. - பரணர் ஔவையார்,
பாடல்களில் உள்ளப் போராட்டம்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி.
2010.

7. ஜெயந்தி,சூ. - ஐங்குறுநூற்றுக் குறிஞ்சித்திணையில் களவு மரபுகள்,
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,
தியாகராசர் கல்லூரி, மதுரை.
2007.

**இதழ்கள்**


1. அரங்க மல்லிகா - சங்க இலக்கியத்தில் திணையும் பெண் அடையாளமும், அரிமா நோக்கு, அக்டோபர் 2010.

2. தமிழாய்வுத்துறை - தமிழ் இலக்கியங்களில் பாலினச் சமத்துவம், தேசியக் கருத்தரங்கம், தமிழாய்வுத்துறை, தூய வளனார் தன்னாட்சிக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி. 2014.

3. பதிப்பாசிரியர் குழு - செந்தமிழ் ஆய்வுக்கோவை, முதலாம் பன்னாட்டுக் கருத்தரங்கம், செந்தமிழ் அறக்கட்டளை, திருவில்லிபுத்தூர். 2013.

4. பதிப்பாசிரியர் குழு - சங்க இலக்கிய ஆய்வு மையம், ஐங்குறுநூறு ஆய்வுக் கோவை, மதுரை. 2008.

5. பதிப்பாசிரியர் குழு - வளர் தமிழ் ஆய்வு மன்றம்,
எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை,
திண்டுக்கல்.
2008.

6. பதிப்பாசிரியர் குழு - ஆய்வுச் சிந்தனைகள்,
ஐந்தமிழ் ஆய்வாளர் மன்றம்,
கருத்தரங்க ஆய்வுக்கோவை,
மதுரை.
2010.

7. பதிப்பாசிரியர் குழு - வளர் தமிழ் ஆய்வு மன்றம்,
எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை,
திண்டுக்கல்.
2011.

8. பதிப்பாசிரியர் குழு - இந்தியப் பல்கலைக்கழகத்
தமிழாசிரியர் மன்றம்,
43–ஆம் பன்னாட்டு கருத்தரங்கு,
ஆய்வுக்கோவை.
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.
2012.

9. பதிப்பாசிரியர் குழு - இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், 44–ஆம் பன்னாட்டு கருத்தரங்கு, ஆய்வுக்கோவை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை. 2013.

10. பதிப்பாசிரியர் குழு - இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், 45–ஆம் பன்னாட்டு கருத்தரங்கு, ஆய்வுக்கோவை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை. 2014.

11. பதிப்பாசிரியர் குழு - திருக்குறள், பன்னாட்டுக் கருத்தரங்க ஆய்வுக் கோவை வெளியீடு, பாவை பப்ளிகேஷன்ஸ், ஜானி ஜான்கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை. 2016.

12. பரிமளம்.க. - ஜானகிராமன் நாவல்களில்
பெண் உடல் பற்றிய புனைவுகள்,
தமிழினி கலை இதழ்,
பிப்ரவரி 2009.

13. ….. - ஜானகிராமன் நாவல்களில்
பெண்மை பற்றிய புதிர்,
தமிழினி கலை இதழ்,
ஜனவரி 2009.

14. பிரபஞ்சன் - காதலிகளுக்குத் தாயும் நாயும்
செய்த இடர்கள்,
உயிர்மை,
பிப்ரவரி 2011.